# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 14th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Local Administration Council (Recommendations)*

801 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நவம்பர் மாதத்தில் பெங்களூரில் நடந்த தல சுயாட்சி மன்றக் கூட்டத்தில் செய்யப்பட்ட சிபாரிசுகள் சர்க்காருக்குக் கிடைத்தனவா ?

(இ) அப்படியாயின், அதன் விபரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Two copies of the resolutio ns relating to non-panchayat and panchayat items passed at the Sixth Meeting of the Central Council of Local Self-Government held in November 1960 at Bangalore are placed in the Legislature Library for Members' reference

*Panchayat Election (Thevarappanpatti)*

* 802 *Q*.—SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திண்டுக்கல் தாலூகா, ஆத்தூர் தொகுதி அய்யம்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த "தேவரப்பன் பட்டி" பஞ்சாயத்து தேர்தலை நிறுத்தி வைக்கும்படி நாமினேஷன் தேதிக்கு முன் தினம் சர்க்கார் தந்தி மூலம் உத்திரவிட்டார்களா ?

(இ) தேர்தலை சீக்கிரம் நடத்த உத்திரவிடுமாறு கனம் முதல் அமைச்சர் அவர்களிடம், மேற்படி பஞ்சாயத்தைச் சேர்நத பொது மக்கள் நேரிலும், 1960-ம் வருஷம் செப்டம்பர் மீ 27-ம் தேதி எழுத்து மூலமாகவும் விண்ணப்பித்துக் கொண்டார்களா ?

(உ) அவைகளின் மீது எடுத்த நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) In their petition, dated 7th September 1960, the residents of the Thevarappanpatti Panchayat have requested Government for the early conduct of elections to that panchayat.

(*c*) The elections to Thevarappanpatti Panchayat will be held after a decision is reached on the question of jurisdiction of the above panchayat which is now under consideration separately.

[14th March 1961

MR. SPEAKER : We shall postpone question No. 803 till the Hon. Minister for Industries comes.

*Electricity charges (Ryots—North Arcot)*

*804 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாயிகளின் உபயோகத்திற்கான மின்சாரத்திற்கு வருமானத்திற்கு குறைந்த கட்டணம் எத்தனை சதவிகிதம் வடஆற்காடு ஜில்லாவில் வசூலாகிறது ?

(இ) குடியாத்தம் தாலூகாவிலுள்ள ஸ்கீம்களுக்கு, ஸ்கீம்வாரியாக எத்தனை சதம் வசூல் செய்யப்படுகிறது ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) The attention of the Hon. Member is invited to the answer[a] placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : பத்து சதவிகிதம் வசூலாகக்கூடிய ஒரு திட்டத்திற்கு டாரிப் கிராண்ட் அடிப்படையிலே வசூலிக்க வேண்டுமென்ற விதி இருக்கிறதே. அந்த அடிப்படையிலே வசூலிக்கப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதற்காக ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON SRI V. RAMAIAH : டாரிப் கிராண்ட் அடிப்படையிலே வசூல் செய்யப்பட்டு விதிவிலக்கு கொடுக்கப்பட்டு அங்கங்கே ஸ்கீம் போட்டு அன்கனெக்டட் மினிமம் சார்ஜ் ஏற்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : குடியாத்தம் தாலூகாவில் சேத்துவண்டை, அம்மணாங்குப்பம் போன்ற இடங்களில் 10 சத விகிதத்திற்கு வசூலாகக்கூடிய நிலைமையில் மேற்படி டாரிப் கிராண்ட் அடிப்படையில் வசூலிக்கப்படுகிறதா ? இது போன்று 10 சத விகிதத்திற்குமேல் வசூலிக்கும் பிரதேசங்களில் டாரிப் கிராண்ட் அடிப்படையில் வசூலிக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : ஒரு ஸ்கீம் பூர்த்தியாகி 10 சத விகிதத்திற்குமேல் வருமானம் எவ்வளவு என்று கவனித்து எடுத்துக்கொள்கிறார்கள். இதைத்தான் வசூல் செய்கிறார்கள். ஒரு கட்டுபடியான நிலைமை ஏற்பட்டால் இந்த அடிப்படையிலே வசூல் செய்கிறார்கள்.

SRI S. M. ANNAMALAI : இப்பொழுது முற்பட்ட பகுதி என்றும், பிற்பட்ட பகுதி என்றும், முற்பட்ட பகுதிக்கு 40 ரூபாய் விகிதமும் பிற்பட்ட பகுதிக்கு 35 ரூபாய் விகிதமும் வசூலிக்கிறார்கள். இந்த ஸ்டேட்மெண்டில் பார்க்கும்போது வட ஆற்காடு மாவட்டம் முற்பட்ட பகுதியாக கருதப்பட்டு 40 சத விகிதம் வசூலிக்கிறார்கள். ஆனால் வட ஆற்காடு மாவட்டம் பொருளாதார அடிப்படையிலே மிகவும் பிற்பட்ட பகுதியாக இருக்கிறது. ஆகையால் இதைப் பிற்பட்ட பகுதியாகப் பார்த்து 35 ரூபாய் வசூலிக்கக் கூடாதா ?

THE HON. SRI V. RAMAIAH : பிற்பட்ட பகுதி முற்பட்ட பகுதி என்பது பொறுப்புள்ள குழு ஆராய்ச்சி செய்த பிறகுதான் ஏற்படுத்தப்பட்டது. இரண்டு நாளைக்கு முன்பு கனம் அங்கத்தினர் அவர்கள் பேசும்போது கூட மின்சாரத்தை மனதில் கொண்டு பல பாகங்களில் தண்ணீர் இருப்பதினால் மின்சாரத்தை விஸ்தரிக்க வேண்டுமென்றும், அதற்கு விசேஷ சலுகை காட்டி துரித நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். அப்படியிருக்கும்போது வட ஆற்காடு மாவட்டத்தை பிற்பட்ட பகுதி என்று சொன்னால் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். அந்த வளமாக இருப்பதனால்தான் துரிதமாக மின்சாரம் விஸ்தரிக்கப்பட வேண்டுமென்று கனம் அங்கத்தினரே ஒப்புக்கொண்டார். தஞ்சை ஜில்லாவிற்கு அடுத்தபடியாக வட ஆற்காடு உணவு உற்பத்தி செய்கிறது என்று சொன்னார். வட ஆற்காடு பூராவும் முற்போக்கான பகுதி என்றுதான் சொல்லவேண்டும்.

---

a Printed as Appendix I on pages 432-433 infra.

14th March 1961]

Sri V. K. KRISHNAMURTHY : ரெமுனரேஷன் போதிய அளவிற்கு இருந்தாலுங்கூட பல இடங்களில் விஸ்தரிக்கப்படாமல் இருக்கிற காரணத்தால் ரெமுனரேஷன் இருக்கின்ற பகுதிக்கு மின்சாரம் தனியார் வழங்காமல் இருப்பதால் வரையில் வழங்கும்படியான துரித நடவடிக்கை எடுக்க தனியாருக்கு அரசாங்கம் ஆணையிட முன்வருமா ?

The Hon. Sri V. RAMAIAH : மின்சாரத்தைப் பொறுத்தவரையில் வட ஆற்காடு மாவட்டம் பொருத்தமட்டில் கிராம மின்சார விஸ்தரிப்பு ஸெர்வீஸ் பகுதியிலே நன்றாக ஆராய்ந்து எங்கெங்கே தாமதம் ஏற்படுகிறதோ அதையெல்லாம் கவனித்து துரித நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு முயற்சிக்கிறோம்.

*Water-supply Scheme (Kanyakumari and Suchindram)*

* 805 Q.—Sri T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to provide water-supply to the Kanyakumari and Suchindram villages?

The Hon. Sri M. A. MANICKAVELU : The Water-supply Scheme in respect of Kanyakumari is in an advanced stage of execution and will be brought into beneficial use by the end of March 1961.

The works connected with the Suchindram Water-supply Scheme have been completed and handed over to the Suchindram Panchayat. This will be brought into beneficial use, shortly.

It may be added that water is being supplied through a few taps in both the above places.

Sri T. S. RAMASWAMI : As early as three years back, the pipes have been laid and the taps have been made all right. But still for the last three years, water has not been let in. Fifty per cent of the contribution has been given by the people themselves. Everything is over. When such is the case, may I know the reasons for the delay? Agreement with regard to rates has also been reached between the panchayat and the municipality? What is the reason for the delay?

The Hon. Sri M. A. MANICKAVELU : I do not know to which the hon. Member is referring whether Cape Comorin or Suchindram?

Sri T. S. RAMASWAMI : Suchindram.

The Hon. Sri M. A. MANICKAVELU : The hon. Member says some amount was paid. I find that the scheme has been taken up under National Water-supply Scheme. That means only 5 per cent is expected from the beneficiaries. If the hon. Member puts a separate question I will give a detailed answer.

Sri T. S. RAMASWAMI : May I know whether Government are afere of the fact that more delay means the more the reputation of Government in general and the department in particular is at stake?

The Hon. Sri M. A. MANICKAVELU : Not at all. Even before the full scheme comes into operation, we have allowed some taps to function. Complete functioning of the scheme will take place as early as possible.

*Educated unemployed*

* 803 *Q.*—Sri T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state the total number of educated unemployed as on 1st April 1960 as registered in the Employment Exchange?

The Hon. Sri R. VENKATARAMAN : 41,576 (forty-one thousand five hundred and seventy-six only).

Sri T. T. DANIEL : May I know, Sir, the total number of persons who were able to get employment in that area and out of this number how many were Graduates and Under-Graduates?

The Hon. Sri R. VENKATARAMAN :

Graduates — 2,570.

Under-graduates—18,294.

So far as placement is concerned, I have got a long list. If the hon. Member, Sri T. T. Daniel, puts a separate question, I will place it on the table of the House.

Sri A. A. RASHEED : May I know, Sir, whether the Government have any new scheme to employ the educated unemployed persons?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, the Plan schemes are intended to increase the employment potential. The highest type of employment is now available. There is dearth of fitters, turners, moulders, etc. Month after month we report the shortage in the Employment Exchange. It is only the unskilled workers who are in abundance in this country and the educated also are unskilled because they do not have any training whatsoever and it is difficult to find them employment.

Sri T. T. DANIEL : May I know, Sir, what was the target of giving employment in the Second Plan and whether we will have the usual training and what is the target in the Third Plan?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, there will be a Demand for Grant for Labour in the next few days. I have circulated a note on this subject. The hon. Member, Sri T. T. Daniel can take up this matter then.

14th March 1961]

Sri N. MARUDACHALAM : வேலை தேடிக்கொடுக்கும் ஸ்தாபனம், சென்னையிலே ஒரு வேலை காலியாக இருந்தால கோவையில் உள்ள பத்து பேர்களுக்கு இண்டர்வியுக்கு அனுப்புகிறது. அவர்கள் கோவையிலிருந்து சொந்தச் செலவில் வரவேண்டியிருக்கிறது. அவர்களுக்கு சர்க்கார் போககுவரத்துச் செலவு கொடுப்பார்களா ?

The. Hon. Sri R. VENKATARAMAN : அந்த மாதிரி செய்ய இயலாது.

Sri P. G. MANICKAM : வேலை இல்லாமல் இருப்பவர்கள் கோவையில் எத்தனைபேர் ? அந்த விபரம் கொடுப்பார்களா ?

Mr. SPEAKER : தனிக் கேள்விதான் போடவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவையும் பற்றித் தனியாக கேள்வி கேட்டு நேரத்தை வீண் செய்யக் கூடாது.

*Missing of a child (Coimbatore Hospital)*

* 806 Q.—Sri A. A. RASHEED :
Sri A. VEDARATHNAM :
Sri T. S. RAMASWAMI :
} Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether any new-born child in the Government Headquarters Hospital, Coimbatore, has been missing for a month;

(b) the circumstances under which the child has been missing; and

(c) whether the child has been recovered?

The Hon. M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) On 2nd September 1960 the child under reference was lying with its mother in a cot in one of the wards of the maternity block of the hospital. At about 4-30 a.m. on that day, the mother gave milk to the child and slept. When she woke up at 4-45 a.m. she found the child missing. The exact circumstances under which the child was missing from his mother have not been established in spite of investigation of the matter by the Police.

(c) No, Sir.

Sri A. A. RASHEED : May I know, Sir, whether Government have taken any steps to prevent such incidents taking place in the hospitals?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir. It is a fact that the place is protected with net wiring on all the three sides. Only the entrance side is not fully protected with net wiring. Now this has happened within fifteen minutes. At 4–30 a.m the mother gave milk to the child and at 4–45 a.m. the child was missing—in the early hours of the morning. Unfortunately, that day the staff nurse had to go to another place for nursing. It is reported that a woman with a red saree was carrying a child. Another person who noticed it was some what drowsy. She did not pursue. She did not suspect any foul play.

SRI A. VEDARATHNAM: இந்தக் குழந்தையை நாய் தூக்கிக்கொண்டு போய்விட்டதாகச் சொல்லப்படுகிறதே, அது உண்மையா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அது வேறு சமாசாரம், நீலகிரியில்.

SRI T. S. RAMASWAMI: May I know, Sir, whether the child was handed over to the mother? There was a report that the child was abandoned near Perur, Coimbatore. Was this the same child?

THE HON. SRI M. A. MANICKAVELU: That is a different incident.

SRI A. A. RASHEED: May I know, Sir, whether the mother has been compensated for the loss of the child?

THE HON. SRI M. A. MANICKAVELU: I do not know. The hon. Member, Sri A. A. Rasheed, may suggest the method by which the loss of child could be compensated.

SRI N. MARUDACHALAM: இந்தத் தலைமை மருத்துவ மனையில் குழந்தை காணாமற் போனவுடனேயே அதிகாரிகள் அதைத் தேடுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டிருந்தால் பக்கத்திலேயே கண்டுபிடித்திருக்க முடியாதா? எத்தனை நாட்களுக்குப் பின்னர் குழந்தை காணாமற்போனதை அவர்கள் கண்டுபிடித்து நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதில் ஒன்றும் தாமதம் இல்லையே. விசாரணை முதலிய நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டார்கள்.

*Ayurvedic Hospitals*

* 807 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of Ayurvedic Hospitals in the State; and

(*b*) the manner in which the essential herbs and medicines are supplied to these hospitals?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) There are two Ayurvedic Hospitals in the State, one at Madras attached to the Government Hospital of Integrated Medicine and another at Devakottai, maintained by the municipality. Besides, there are 133 dispensaries of Ayurvedic Medicine maintained by the State and local bodies.

(*b*) Medicines for the use of the Hospital of Integrated Medicine, Madras, are prepared in the Pharmacy attached to the hospital. Essential herbs required therefor are secured on contract system.

14th March 1961]

Most of the local bodies get their requirements of Indigenous medicines, herbs, etc., from the Indian Medical Practitioner's Co-operative Pharmacy and Stores, Adayar, Madras. The Thanjavur District Board is having its own Pharmacy for the preparation of Indigenous Medicines. Supply of raw drugs, etc., to this Pharmacy is according to tender system.

Indigenous medicines are also prepared in Salem, Vellore and Dindigul municipal dispensaries for which raw drugs are procured on the basis of tender system.

*Agricultural implements (manufacture)*

*808 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961-ல் (i) நம் மாநிலத்தில் (ஜில்லா வாரியாக) (ii) மதுரை ஜில்லாவில் பெரியகுளம் தாலூகாவில் இரும்பினால் விவசாயக் கருவிகள் செய்ய எத்தனை லைசென்சுகள் வழங்கப்பட்டன ?

(இ) இந்த லைசென்சுதாரர்களுக்கு எந்த அடிப்படையில் இரும்பு சப்ளை செய்யப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : விவசாயக் கருவிகள் செய்வதற்காக வழங்கப்பட்டிருக்கக்கூடிய இந்த லைசென்சுகளை வைத்துக்கொண்டுள்ளவர்கள் இரும்புக் கோட்டாவை வாங்கினவுடன் விவசாயத்திற்குத் தேவைப்படும் கருவிகளைச் செய்வதற்குப் பதிலாக கள்ளமார்க்கெட்டில் விற்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? இனிமேலாவது விவசாயக் கருவிகளை செய்து கொடுக்கவேண்டுமென்ற முறையில் கவனம் செலுத்தப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தவறுதல் நடைபெறுவது அமைச்சர்களுக்குத் தெரியுமா என்றால் நடைபெறவில்லை என்று நான் எப்படிச் சொல்ல முடியும். நடைபெறலாம் என்றும் நான் கேள்விப்படுகிறேன். ஆனால் இம்மாதிரி கேள்வி போடுவதில் பயன் இல்லை. குறிப்பாக அவருடைய மாவட்டத்திலோ அல்லது வேறு எந்த இடத்திலோ இதுமாதிரியாகத் தவறுதல்கள் நடக்கின்றன என்கிற விஷயம் தெரிந்து அதைப்பற்றி அவரும் விசாரித்து எனக்குத் தகவல் கொடுத்தால் உடனடியாகக் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI T. S. RAMASWAMI : May I know, Sir, why no licence has been issued to Kanyakumari district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not know whether there has been any applicant from Kanyakumari district.

SRI K. R. NALLASIVAM : விவசாயக் கருவிகளைச் செய்யக்கூடிய இந்த ஸ்தாபனங்கள் அந்தக் கருவிகளை கூட்டுறவு சங்கங்களின் மூலமாகத்தான் விற்பனை செய்யவேண்டும் என்பதாக நடவடிக்கை ஏதாவது எடுக்க முடியுமா ?

---

a Printed as Appendix II on page 434 infra.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கூட்டுறவு சங்கங்களின் மூலமாகத்தான் விற்பனை செய்யவேண்டுமென்ற நிபந்தனையை விதிப்பது சரியல்ல. விற்பனை செய்ய அவர்கள் முன் வந்தால் தனிச் சலுகை காட்டப்படும்.

SRI S. NAGARAJA MONIGAR: இந்தக் கருவிகளில் டிராக்டர்கள் தவிர விவசாயிகளுக்கு அனுகூலமான இதர கருவிகள் தயார் செய்ய நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறீர்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்போது அதற்கு வேண்டிய உருக்கு, இரும்பு எல்லாம் கொஞ்சம் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அதோடு விவசாய இலாகாவே இதை எடுத்து விநியோகிப்பது என்ற முறையும் இனி கவனிக்கப்படும். இது எல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது.

*Agricultural schemes*

*809 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாயத் திட்டம் வகுக்கப் பஞ்சாயத்து யூனியன்களுக்கு தாக்கீது பிறப்பிக்கப்பட்டிருக்கிறதா?

(இ) அதன் விவரமென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) A copy of G.O. No. 3792, Food and Agriculture, dated 16th November 1960, containing the details is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM: மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற எட்டில் ப்ரொடெக்ஷன் ஆப் புட்க்ரெயின்ஸ் (production of foodgrains) 33% அதிகப்படுத்துவது என்றும், பெட்டர் பார்மிங் Better Farming மூலமாக 12½% என்றும், Further development of the use of Chemical Fertilisers 12½% என்றும், Further development of Irrigation facilities 8% என்றும் எதிர்பார்க்கப்படுவதாகக் கூறப்பட்டிருக்கிறது. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நம்முடைய லட்சிய இலக்கு எவ்வளவாக இருந்தபோதிலும் போதுமான வசதி இல்லாத காரணத்தினால் அதை அடைய முடியவில்லை. இந்த எட்டிலேயே நான்காவது பக்கத்தில் குட்டை, குளங்கள் இதிலிருந்து தண்ணீர் இறைத்துக்கொள்வதற்கு வசதியாக பம்பு செட்டுகள்கூடக் கொடுப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் தனித்தனியாக இதைச் செய்வது சாத்தியம் இல்லை. அரசாங்கம் தான் இதைச் செய்ய வேண்டும். அவர்கள் எடுத்துக்கொண்ட திட்டத்தை பூர்த்தி செய்யவில்லை. விவசாய இலாகா எடுத்துக்கொள்ளக்கூடாது என்று சொல்லிவிட்டது. இப்படி இருக்கையில் இந்தத் திட்டத்தை குறிப்பிட்டபடி நிறைவேற்ற முடியும் என்று அரசாங்கம் கருதுகிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் போட்டபடி ஈடேறவில்லை என்று சொல்வது சரியல்ல. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எவ்வளவு தூரம் எதிர்பார்க்கப்படுகிறதோ, அவ்வளவுதூரம் நிறைவேற்ற அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது. இதிலே 8% நீர்ப்பாசன வசதிகளை இன்னும் அதிகப்படுத்துவதனாலே உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கவனம் செலுத்தப்படும். தனித்தனியே விவசாயிகளுக்கு விப்பதற்கு போதுமான முறையில் கவனம் செலுத்தப்படும் என்று கனம் அங்கத்தினர்களுக்குக் கூறிக்கொள்கிறேன்.

---

a Printed as Appendix III on pages 434–453 infra.

14th March 1961]

*Marketing Co-operative Societies*

* 810 *Q.*—SRI S. RANGANATHA MUDALIAR (on behalf of SRI K. VINAYAKAM) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there are any Marketing Co-operative Societies in the City of Madras;

(*b*) if so, how many;

(*c*) whether they deal in food-grains like rice or other food products; and

(*d*) what are the other price controlled food-grains they deal in?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) One, viz., the Madras State Co-operative Supply and Marketing Society.

(*c*) & (*d*) The Madras State Co-operative Supply and Marketing Society does not deal in food-grains, but only food products like sugar and milk powder.

*Scheme for under-developed districts*

* 811 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் தீட்டுகின்றபோது பிற்பட்ட மாவட்டம் வாரியாக திட்டம் தீட்ட வேண்டுமென்று திட்டக் கமிஷன் ஆலோசனை கூறியுள்ளதா?

(இ) அப்படியாயின் இந்த சர்க்காரின் முடிவென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) No specific instructions have been received from the Planning Commission that schemes should be formulated for the Third Plan on the basis of backwardness of districts. However the Commission has envisaged that special consideration should be given for the development of backward areas in the State Plan. This has been taken into account while formulating the Third Plan proposal of this State.

SRI S. M. ANNAMALAI : அப்படியாயின் நம் மாநிலத்திலுள்ள எந்தெந்த மாவட்டங்களை பிற்பட்ட மாவட்டங்கள் என்று சர்க்கார் கருதுகிறது? அதற்காக என்னென்ன தனி சலுகைகள் தர உத்தேசிக்கப்பட்டுள்ளது?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரு ஜில்லாவில் எல்லா பகுதிகளும் பிற்பட்ட பகுதிகள் என்று எடுத்துக்கொள்ளமுடியாது. சில ஜில்லாக்களில் பல பகுதிகள் பிற்பட்ட பகுதிகளாகயிருக்கின்றன. சில ஜில்லாக்களில் சில சில பகுதிகள் பிற்பட்ட பகுதிகளாகயிருக்கின்றன. இவைகளை எல்லாம் மனதில் வைத்துக்கொண்டுதான திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : ஒவ்வொரு ஜில்லாவிலும் எந்தெந்த தாலுகாக்கள் அல்லது எந்தெந்த பிர்காக்கள் பிற்பட்ட பகுதிகள் என்று சர்க்கார் நிர்ணயித்து விட்டார்களா ? அப்படி நிர்ணயித்திருப்பின் அந்த லிஸ்ட்டை மேஜை மீது வைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனி கேள்வி போடவேண்டும்.

DR. (SRIMATHI) T.S. SOUNDARAM RAMACHANDRAN: நீர்பாசன வசதி குறைந்த வரண்ட பிரதேசங்கள் பிற்பட்ட பகுதியில் சேருகிறதா ? அதாவது நீர்ப்பாசன வசதி, அல்லது கைத்தொழிலில் பிற்போக்குள்ள பிரதேசங்கள் சேருகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இரண்டையும் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஒரு இடத்தில் நீர்ப்பாசன வசதியில்லாமல் நல்ல கைத்தொழில் வளம் இருந்தால் அதை பிற்போக்கு பகுதி என்று சொல்ல முடியாது. இரண்டும் இல்லாமலிருந்தால் பிற்போக்கு என்று சொல்லமுடியும்.

SRI J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லா ஒரு சிறிய மாவட்டம். அது மிகவும் பிற்போக்கான நிலையிலிருக்கிறது என்பதை சர்க்கார் கருத்தில் கொண்டு இதை முதலில் எடுக்க சர்க்கார் வற்புறுத்தியிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நீலகிரி ஜில்லாவை பிற்போக்கான பகுதி என்று சொல்வது தவறு என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

*Third Five-Year Plan (Cost)*

* 812 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total cost of the several schemes under the Third Five-Year Plan that were presented to the Planning Commission behalf of our State;

(*b*) the total cost of the schemes approved by the Commission; —

(*c*) the schemes which were not approved by the Commission ; and

(*d*) whether extension of railway line to the Kanyakumari district has been included in the Third Five-Year Plan by the Commission?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The outlay proposed in the Draft Third Plan of the Madras State is Rs. 398·82 crores.

(*b*) The total outlay agreed to at the discussions with the Planning Commission is Rs. 290·89 crores.

(*c*) The ceiling of outlay for the Third Five-year Plan of the State and the various heads of development were settled at the discussions with the Planning Commission. The Planning Commission also made suggestions for revising the Plan so as to conform to the ceilings fixed. The actual schemes to be included in Plan are being finalised. The finalised plan which is proposed to be published shortly will contain the details of all the schemes.

(d) The Tirunelveli-Cape Comorin Railway line is one of the schemes recommended by this Government for inclusion in the Central Third Five-Year Plan and the matter is under consideration of the Government of India.

SRI A. V. P. ASAITHAMBI: 100 கோடி குறைக்கப்பட்டு விட்டதால், இதில் விடப்பட்டது கன்னியாகுமரி மாவட்ட ரெயில்வே மட்டுமா? விருதுநகர்-மானாமதுரை ரெயில்வேயும் இதனால் கைவிடப்பட்டதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களுக்கு இருக்கக்கூடிய குழப்பம் எப்போதும் நீங்குவதில்லை. 290 கோடி நம் ராஜ்யத் திட்டங்கள். ரெயில்வே, மத்திய சர்க்கார் திட்டத்தைச் சேர்ந்தது. ஆகவே 100 கோடி அளவிற்கும், கன்னியாகுமரி ரெயில்வே திட்டத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது. ரெயில்வே திட்டங்கள் எல்லாம் மத்திய சர்க்கார் திட்டங்களில் சேரக் கூடியவை.

*Third Five-Year Plan Discussions (Ministers' and Officers' visit)*

*813 Q.—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI M. KALYANASUNDARAM): Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the number of Ministers and Officers who visited Delhi in November 1960 to meet the Planning Commission to finalize the Third Five-Year Plan; and

(b) the travelling and daily allowances drawn by them.

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Three Ministers including the Chief Minister, and twenty-three officers of the Government attended the Third Plan discussions in New Delhi in November 1960; and

(b) Rs. 15,584·18 nP.

SRI A. V. P. ASAITHAMBI: திட்டக்குழுவை சந்திப்பதற்கு இங்கிருந்து புறப்பட்ட அமைச்சர்கள், அவர்களிடம் கேட்டுக்கொண்டபோது, தொகையை குறைக்கக்கூடாது என்பதை வற்புறுத்துவதற்காகத்தானா? அல்லது மேற்கொண்டு ஏதாவது தொகை வேண்டுமென்று வற்புறுத்தவா? இந்த மாதிரி தொகையை குறைப்பதில் எந்தெந்த திட்டங்கள் இந்த சர்க்கார் சொன்னதில் இன்றையதினம் கைவிடப்படக்கூடிய நிலையிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: திட்டங்கள் எந்த முறையில் மாற்றியமைக்கப்படப்போகிறது என்பதுபற்றி போன கேள்வியில் சொன்னேன். இப்பொழுது கேட்பது யார் யார் போனது என்பதைப் பற்றி. திட்டத்தை எந்த முறையில் அமைக்கவேண்டுமென்பதுபற்றி திட்டக் கமிஷனுடன் விவாதிப்பதற்காக சென்றதல்லாமல் தொகையைக் குறைப்பதற்கோ, கூட்டுவதற்கோ அல்ல. எந்த முறையில் திட்டம் அமைய வேண்டும் என்று தேசிய அடிப்படையில் விவாதிப்பதற்காக.

[14th March 1961

*Weavers without looms*

* 814 *Q.*—SRI T. T. DANIEL: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of Industrial Co-operatives for loomless weavers district-war;

(*b*) the nature of the financial aid given by the Government; and

(*c*) whether there is any proposal to start an Industrial Weavers' Co-operative Society at Vilavancode taluk, in the Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*), (*b*) & (*c*) The information is furnished in the paper [a] placed on the table of the house.

SRI T. T. DANIEL: May I know whether the Government have taken a census of the exact number of loomless weavers in the whole State?

THE HON. SRI R. VENKATARAMAN: It is not possible to take a census of the loomless weavers. If a person does not have looms, it is very difficult to say whether he is a weaver or not.

SRI A. MARIAPPAN: இண்டஸ்ட்ரியல் கோவாப்பரேட்டீவ் சொசைடிகளை எல்லா ஜில்லாக்களிலும் அதிகப்படுத்த சர்க்காருக்கு உத்தேசம் உண்டா? சேலம் ஜில்லாவில் அதிகமாக தறிகள் இருப்பதால் அங்கு இன்னும் அதிகமாக வைக்க சர்க்காருக்கு உத்தேசமுண்டா என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: பொதுவாக இந்த இண்டஸ்ட்ரியல் கோவாப்பரேட்டீவ்ஸ் நம் ராஜ்யத்தில் வெற்றிகரமாக இருந்திருக்கிறது. மற்ற ராஜ்யங்களில் அவைகள் வெற்றிகரமாக நடக்கவில்லை என்று அபிப்பிராயம் கூறப்பட்டிருக்கிறது. சேலம் ஜில்லாவில் ஏற்கனவே ஒரு இண்டஸ்ட்ரியல் கோவாப்பரேட்டீவ் வைத்திருக்கிறது. இன்னும் அதிகரிப்பது பற்றி மூன்றாவது திட்ட காலத்தில் யோசனை செய்யலாம்.

SRI M. A. B. ARUMUGHASAMY: மதுரை ஜில்லாவில் இண்டஸ்ட்ரியல் கோவாப்பரேட்டீவ் சொசைடி ஒன்று ஏற்படுத்தப்பட்டிருப்பதாக அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த சொசைடீ எந்தயிடத்தில் இருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: மதுரை நகரத்தில் இருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR: தறியில்லா நெசவாளிகள் என்பது யாரைக் குறிக்கிறது? அப்பனின் மகன் அத்தொழிலில் ஈடுபட்டிருப்பதால் அவனை நெசவாளி என்பதா அல்லது நெசவுத் தொழிலில் ஈடுபட்டு ஆனால் தறியின்றி தவிப்பவர்களையா?

THE HON. SRI R. VENKATARAMAN: நெசவு வேலை தெரிந்தும், தறிகள் இல்லாத காரணத்தால் அதைப் பயன்படுத்த முடியாதவர்களைக் குறிக்கிறது.

---

a Printed as Appendix IV at page 454 infra.

14th March 1961]

*Policemen (Transfer from Kanyakumari)*

* 815 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Policemen transferred from Kanyakumari district and the districts to which they were transferred during this financial year;

(*b*) their scales of pay; and

(*c*) whether there is any circular to the effect that low-paid N.G.Os. should not ordinarily be transferred outside their native district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Twenty-six Head constables and 70 Police constables were transferred from Kanyakumari district to Madurai Urban, Madurai North, Ramanathapuram and Tirunelveli districts;

(*b*) The scale of pay of Head constables is Rs. 85—2—105, and that of Police constables is Rs. 65—1—70—2—90.

(*c*) No, Sir.

*Policemen (Transfer from Andhra Pradesh)*

* 816 *Q.*—SRI S. RANGANATHA MUDALIAR (on behalf of SRI K. VINAYAKAM) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the police constables who were transferred from Andhra Pradesh to Madras State under Pataskar Award are paid at the scales of pay that were obtaining in Andhra Pradesh when they were transferred; and

(*b*) when do the Government propose to apply the revised scales of pay to them as recommended by the Madras Pay Commission?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The Police constables transferred from Andhra Pradesh to this State under Pataskar Award, will be brought over to the Madras revised scale of pay, only after the equation of the posts and the integration of their services are determined by Government.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is there much disparity between the two scales of pay?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. There is some difference. This integration will be effected very soon.

### *Rental Housing Schemes*

* 817 *Q.*—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Industries be pleased to state the details of the projects that are under execution under the Rental Housing Schemes of the Government of India.

THE HON. SRI R. VENKATARAMAN : The Rental Housing Scheme is implemented by the City Improvement Trust and the Public Works Department in the city, for the benefit of low-paid State Government employees. The City Improvement Trust has taken up the construction of—

(*a*) Two hundred and sixty apartments (13 blocks of 20 tenements each at an estimated cost of Rs. 16.27 lakhs in the Foreshore Composite Scheme Area, Santhome, Madras, and

(*b*) Ninety-six apartments (16 blocks of 6 tenements each) at an estimated cost of Rs. 11.13 lakhs in the Kilpauk Garden Scheme, Madras.

(*c*) The Public Works Department is constructing 168 apartments at an esimated cost of Rs. 17·68 lakhs in Todhunter Nagar, Madras.

The total will be 524 apartments.

SRI A. A. RASHEED : May I know whether these houses are rented on a 'no-profit-no-loss' basis?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, on a 'no-profit-no-loss' basis.

SRI A.V.P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, இந்த வாடகைத் திட்டத்தை ஓரளவுக்கு மாற்றி இந்த வீடுகளில் குடி வந்தவர்களுக்கே சில வருடங்களுக்குப் பின்னால் வீடுகள் உரிமையாகக்கூடிய அளவுக்கு மத்திய அரசாங்கத்தினரைக் கேட்டு ஒரு திட்டம் வகுக்க அரசாங்கத்திற்கு நோக்கம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : வீடுகள் கொடுப்பதில் இரண்டு வகை திட்டங்கள் இருக்கின்றன. அரசாங்க ஊழியர்களுக்கு தனியாக பிளாட்டுகளை வாங்கி அதில் வீடுகளை கட்டிக்கொள்வதற்கு பணம் கடனாக கொடுத்து, அதை தவணையாக வருஷா வருஷம் கொடுப்பதற்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது. தவிரவும் அரசாங்க ஊழியர்கள் எல்லோரும் சென்னையிலேயே இருப்பார்கள் என்று நினைப்பதற்கில்லை. அவர்கள் ஓய்வு பெற்ற பிறகு தங்கள் ஊருக்கே திரும்பிப் போகக் கூடும். அவ்வாறு உள்ளவர்களுக்கு ரெண்டல் ஸ்கீம் உதவிகரமாக இருக்கும். அவர்களுக்கு சர்க்காரே வீடுகளைக்கட்டி வாடகைக்கு கொடுத்துக் கொண்டிருக்கிறது. இவ்விதம் இரண்டு விதமான திட்டங்கள் இருக்கின்றன. இந்தக் கேள்வி வாடகை வீடுகளைப்பற்றியதுதான்.

SRI. N. MARUDACHALAM : ஸார், இம்மாதிரி வாடகைக்கு வீடுகளை கட்டிக் கொடுக்கும் திட்டங்களை ஒவ்வொரு நகரத்திற்கும் கொண்டு வருவதற்கு அரசாங்கத்திற்கு ஏதாவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ளலாம் என்ற யோசனை இருக்கிறது.

[4th March 1961]

SRI P. G. MANICKAM ஸார், இந்தத் திட்டத்தின்கீழ் சென்னையைத் தவிர வேறு நகரங்களையும் கொண்டுவர சர்க்கார் முயற்சி செய்திருக்கிறதா? அப்படியானால் எந்தெந்த நகரங்களுக்கு என்பதை தெரிவிக்க வேண்டுகிறேன்.

MR. SPEAKER: கனம் மருதாசலம் அவர்கள் கேட்ட கேள்விக்கு கொடுக்கப்பட்ட பதில்தான் உங்கள் கேள்விக்குக்கும் பொருந்தும்.

*Houses for workers (Sivakasi)*

*818 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) ராமநாதபுரம் ஜில்லா, சிவகாசியில் தொழிலாளர்களுக்காக எத்தனை வீடுகள் கட்டப்பட்டன?

(இ) அதற்கு மத்திய சர்க்கார், ராஜ்ய சர்க்கார் மான்யம் அல்லது கடன் எவ்வளவு?

(உ) மேற்படி வீடுகள் கட்டி முடித்து எவ்வளவு காலம் ஆகிறது?

THE HON. SRI R. VENKATARAMAN: (a) 156 houses.

(b) Loan from Government of India, Rs. 2,53,500, grant from Government of India, Rs. 2,53,500, assistance from State Government—Nil.

(c) Construction work was completed in April 1959, but the provision of amenities was only completed in September 1960. When I say 'construction work' was completed, I mean only 'civil work' was completed.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், இந்த வீடுகளைக் கட்டி முடித்து எத்தனையோ மாதங்களுக்குப் பிறகு இந்த வீடுகளில் வாடகைக்கு வந்தார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: புதிதாக கட்டப்படும் காலனிகளில் முதல் முதலாக வீடுகள் கட்டப்படுகின்றன. அதன் பின்னால் குழாய்கள், சாக்கடை வசதிகள் முதலியவை செய்து கொடுக்கவேண்டும். வீடுகள் கட்டி முடித்தவுடன் எல்லாமே முடிந்துவிட்டது என்ற அபிப்பிராயம் ஜனங்களிடத்தில் ஏற்பட்டு வருகிறது. இதனால்தான் கட்டிடம் கட்டி முடிந்தும், குடி வைக்கவில்லையே என்று பலர் குறைபடுகிறார்கள். இந்த வசதிகள் எல்லாம் செய்து கொடுக்கப்படவில்லை என்றால் அந்த இடங்கள் அசுத்தமாகிவிடுகின்றன. இந்த கட்டிடங்களைப் பொறுத்தவரை, இவை அக்டோபர் மாதத்தில்தான் கட்டி முடிந்தன.

SRI V. K. KOTHANDARAMAN: ஒரு இலாகாவுக்கும் மற்றொரு இலாகாவுக்கும் இடையே வேலைகளில் ஏற்படுகின்ற தாமதத்தின் காரணமாகவும், மின்சார விளக்குகள் போடுவதில் ஏற்படுகின்ற தாமதத்தின் காரணமாகவும், தண்ணீர் வசதி கொடுப்பதற்கு ஏற்படுகின்ற தாமதத்தின் காரணமாகவும், அதிகமாக வாடகையை நிர்ணயித்திருப்பதின் காரணமாகவும் தான் இம்மாதிரி ஆறு, ஏழு மாதங்களுக்குப் பின்னால் வாடகைக்கு வந்தார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? இனிமேலாவது இவ்வித தாமதங்கள் நீடிக்காதவாறு அரசாங்கம் கவனிக்குமா?

[14th March 1961

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் மந்திரியாக வருகின்ற நேரத்தில் இம்மாதிரியான தாமதங்கள் எல்லாம் சாதாரணமானவைதான் என்பதை ஒப்புக்சொள்வார்கள் என்று நம்புகிறேன். இந்தக் காரணங்களினால்தான் தாமதம் ஏற்பட்டது என்று சொல்வது சரியல்ல.

(கனம் கோதண்டராமன் குறுக்கிட்டு பேசிக்கொண்டிருந்தார்)

MR. SPEAKER : (ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் அவர்களைப்பார்த்து) நீங்கள்தான கேள்வி கேட்டாய்விட்டதே, நான் அடுத்த அங்கத்தினரையும் அழைத்தாய்விட்டது. அதன் பினனால் நீங்கள் உட்காரந்துகொண்டே எப்படி பேசிக் கொண்டிருக்கமுடியும் ?

SRI V. SUBBIAH : "சிவகாசி (ஃபைர் வொர்க்ஸ்) வானவெடி" தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு மத்திய அரசாங்கம் விசேஷ மான்யம் ரூபாய் தருகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த வீடுகட்டும் திட்டமே "ஸப்ஸிடைஸ்ட் இண்டஸ்டரியல் ஹௌஸிங் ஸ்கீம்"-மில் தான் நடக்கிறது. இதில் 50 சதமானம் மத்திய அரசாங்கம் மான்யமாக தருகிறது. 50 சதமானம் ராஜ்ய சர்க்காரால் கடனாக கொடுக்கப்படுகிறது.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : மத்திய சர்க்கார் கொடுக்கும் மான்யத்தைக் கிராண்டாக எடுத்துக்கொண்டு, லோன்-ஆக கொடுக்கும் குறிப்பிட்ட தொகைக்குபட்டும்தான் வாடகை நிர்ணயிக்கப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆம், அப்படித்தான் நிர்ணயிக்கப்படுகிறது.

*Grama Sevaks (duties)*

* 819 *Q.*—SRI V. K. RAMASWAMY MUDALIAR (on behalf of SRI K. VINAYAKAM) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether Grama Sevaks in their respective blocks are instructed to explain to the Backward Classes and Harijans the facilities provided for them under the various schemes in their blocks; and

(*b*) the work done by Grama Sevaks in the matter of uplift of Backward and Scheduled Classes?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No specific instructions have been issued to the Grama Sevaks in this regard.

(*b*) In addition to their normal duties the Grama Sevaks will be attending to the work relating to the uplift of Harijan and Backward classes.

SRI A. V. P. ASAITHAMBI : அரசாங்க ஊழியர்களான இந்த கிராம சேவக்குகள் அரசாங்க வேலைகளைச் செய்யாமல் காங்கிரஸ் கட்சிக்கு பிரச்சாரம் செய்து வருவதாக அரசாங்கத்திற்கு புகார் வந்திருக்கிறதா ? அப்படியானால் அவ்விதம் செய்யக்கூடாது என்று ஏதாவது தடை விதிக்கப் பட்டிருக்கிறதா, இல்லையென்றால் அவ்விதம் தடை விதிக்க அரசாங்கம் முன் வருமா ?

14th March 1961]

THE HON SRI C. SUBRAMANIAM : சில இடங்களில் கிராம சேவககுகளை திராவிட முன்னேற்றக் கழக பிரசாரத்திற்காக உபயோகிக்க முயற்சி எடுத்துவருவதாக தெரிகிறது. அவ்விதம் செய்யக்கூடாது என்று நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

SRI A. V. P. ASAITHAMBI : ஸார், பாயின்ட் ஆப் ஆர்டர், திராவிட முன்னேற்றக் கழகப் பிரச்சாரம செய்வதற்கு கிராம சேவக்குகளை உபயோகிக்க முயற்சி செய்வதாக அரசாங்கத்திற்கு புகார் வந்திருந்தால், அது எப்போது, எங்கு, என்பதை தேதி வாரியாக விவரங்களை இந்தச் சபையில கொடுக்க அமைச்சர் அவர்கள் முன் வருவார்களா ?

MR. SPEAKER : நீங்கள் கேள்வி கேட்டீர், அதற்கு பதில் சொன்னார், இப்போது நீங்கள் கேட்பது எப்படி பாயின்ட் ஆப் ஆர்டராகும் ?

*Paddy (Production)*

* 820 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the average quantity of paddy produced in the State districtwar during 1960 so far; and

(*b*) how this statistics is collected?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A statement [a] is placed on the table of the House.

SRI T. T. DANIEL : May I know whether Tahsildars and Deputy Tahsildars', in preparing forecast reports, are ascertaining the quantity of paddy produced from the landholders?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The problem involved in crop forecasting on paddy crop consists of two parts : (1) estimating area, and (2) estimating yield per acre. It was on that basis that the estimate was prepared.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : What is the reason for so much of production so far as the Thanjavur district is concerned?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is in terms of paddy.

SRI T. T. DANIEL : May I know whether it is a fact that the producers of paddy are not at all consulted in preparing Statistics to find out the average production of paddy per acre in a particular village or taluk?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A few crop-cutting experiments are made and that is the basis of this assessment. Crop-cutting experiments cannot be made without consulting the agriculturists themselves.

a Printed as Appendix V on page 445 infra.

[14th March 1961

SRI V. SUBBIAH : ஸார், மேஜைமீது வைக்கப்பட்டுள்ள பதிலில் குறிப்பாக திருச்சியும் திருநெல்வேலியும் ஒரே அளவு என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் உடைய ஏக்கரேஜ் என்ன, ஒவ்வொரு ஜில்லாவிலும் விளைச்சல் எவ்வளவு? அதில் எது கூடுதல் குறைவு என்பதைச் சொல்ல முடியுமா?

THE HON. SRI. M. BHAKTAVATSALAM : எல்லா இடங்களிலும் அந்தந்த ஜூடத்திற்கு தேவைப்படுகிற பருவ மழை இல்லாமல் சில இடையூறுகள் ஏற்படுகின்றன. ஆகவே ஒவ்வொரு வருஷத்திலும் சராசரி எவ்வளவு கிடைக்கிறது என்பதை வைத்துக்கொண்டுதான் இந்தக் கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI N. R. THIAGARAJAN : ஸார், கிட்டத்தட்ட 50 லட்சம் ஏக்கர் நஞ்சை நிலத்தில் சுமார் 57 லட்சம் டன்தான் விளைச்சல் என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. தஞ்சை மாவட்டத்திற்கு அடுத்தபடியாக தென்னாற்காடு தான் அதிக விளைச்சல் உள்ளதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் திரா விட முன்னேற்றக்கழக அங்கத்தினர் திரு. அண்ணாதுரை அவர்கள் தஞ்சைக்கு அடுத்தபடி இரண்டாவதாக வட ஆற்காட்டில்தான் உற்பத்தி பெருகி இருக் கிறது என்று கூறினும் அதற்கு மாறாக தெற்கு தேயாமல் தென்னாற்காடு தான் நல்ல விளைச்சலை காட்டியிருக்கிறது என்று சொல்லுகிறார், உண்மை யில் தெற்கு அல்லவா வளர்ந்து அதிகமான விளைச்சலை பெற்றிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வட ஆற்காடு ஜில்லாவில் இந்த ஆண்டில் பருவ மழை தவறியது. ஆனால் தென்னாற்காடு ஜில்லா விலும் நல்ல விளைச்சல் ஏற்பட்டிருக்கிறது. கோயம்புத்தூரை எடுத்துக் கொண்டால், அங்கு எவ்வளவு நெல் சாகுபடி செய்யப்படுகிறது என்பதையும் நாம் பார்க்கவேண்டும். ஆகவே சராசரி கிடைக்கின்ற விளைச்சலை கணக் கெடுத்துப் பார்த்துதான் இந்தக் கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : May I know how the statistics relating to the production of paddy is collected for issuing prizes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This is done on a random sample basis. If the hon. Member is further interested to know how all that is done, I would ask the officers of the Statistics Department to take the hon. Member along with them when they go round and make this assessment.

SRI T. S. RAMASWAMI : May I know the acreage in each district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry I do not have those particulars with me just now.

SRI J. MATHA GOWDER : ஸார், மேஜை மீது வைக்கப்பட்ட குறிப்பிலே நீலகிரியிலே 7,000 டன் விளைச்சல் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அதிகமாக நெல் விளையக்கூடிய சர்க்கார் பூமிகள் இருப்ப தால் அந்த பூமிகளை நெல் விளைவிப்பதற்காகக் கொடுக்க அரசாங்கம் முன் வருமா

THE HON SRI. M. BHAKTAVATSALAM : மேலும் நெல் சாகுபடி செய்வதில் கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது.

14th March 1961]

*Ex-Servicemen's Co-operative Farming Society (Aranboly)*

* 821 Q.—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) what action has been taken against the office bearers of the Ex-Servicemen's Co-operative Farming Society, Aranboly (Kanyakumari district), for the recovery of loans granted by the Government; and

(b) the amount of loan granted and the amount recovered so far?

THE HON. SRI R. VENKATARAMAN: (a) There is no Society by name Ex-Servicemen's Co-operative Farming Society at Aranboly in Kanyakumari district. If the hon. Member refers to the Weavers' Society of the same name, details will be furnished.

(b) Does not arise.

*Nylon threads (Supply to fishermen)*

* 822 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR): Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(i) the value of nylon threads supplied to fishermen;

(ii) the centres at which they are supplied; and

(iii) the basis on which they are supplied?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (i) Synthetic fish net twine valued at about Rs. 2.65 lakhs has been supplied to fishermen by the Fisheries Department during the years 1957–58, 1959–60 and up to 31st October 1960 in 1960–61.

(ii) The fishermen obtain their supply from the Fishermen Co-operative Societies and District Federations concerned or direct from the Department.

(iii) That usual subsidy of 33 1/3 per cent of the cost price is allowed on the value of the twine supplied to the Fishermen Co-operative Federations and Societies and groups of fisermen who have been supplied with mechanised boats by the Fisheries Department. The net cost of the material, i.e., the value of the twine sold at 66 2/3 per cent of the cost price, is recoverable in 18 monthly instalments spread over a period of two years, no recovery being effected for three months in a year during the off season.

*Nylon threads (licences for import)*

* 823 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR): Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) the number of licences issued to fishermen during the past two years for importing nylon threads; and

(b) the number granted so far?

[14th March 1961

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) From April 1958, till date about 180 applicatons for the issue of actual Users Imoprt Licences have been received by the Fisheries Department from various Fishermen Co-operative Organizations of the State.

(b) the Joint Chief Controller, Bombay, has so far issued 117 Actual Users Import Licences to various Fishermen Co-operative Organizations.

SRI A. A. RASHEED : May I know whether this Government have received from Union Government any grant towards 'nylon' threads? If so, may I know what is the amount received?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : From Union Government so far as these 'nylon threads' are concerned, we have not received anything?

*Bathing ghats at Rameswaram, etc.*

* 824 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. VINAYAKAM) : Will the Hon. the Minister for Works be pleased to state whether there is any proposal to construct bathing ghats on the sea shores of the sea at Rameswaram, Devipattinam, Sethukarai, near Tiruppulani, Ramanathapuram district, to enable pilgirms to take sea bath without risks?

THE HON. SRI P. KAKKAN : There is no proposal to construct bathing ghats by the Government, the Devasthanam or the Local Panchayat. It is, however, reported that there is a proposal for the construction of a bathing ghat at Rameswaram by His Holiness Sri Sankaracharya Swamigal of Kanchi.

*Ammonium Sulphate (distribution)*

* 825 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the total quantity of Ammonium Sulphate distributed in the State from April 1959 to April 1960;

(b) through what Agencies this manure was distributed; and

(c) whether the Government were able to meet the demands of the ryots?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) The quantities of fertilisers distributed were as below :—

| | |
|---|---|
| Ammonium Sulphate ... ... . | 83,700 tons |
| Urea ... ... ... ... ... | 26,472 ,, |
| Ammonium Sulphate Nitrate ... ... | 14,080 ,, |
| Calcium Ammonium Nitrate ... ... | 6,650 tons. |
| Total in terms of Ammonium Sulphate. | 168,216 tons. |

14th March 1961]

(*b*) The fertilizers were distributed through the following agencies :—

(i) The Government stockholders in the districts and the retail distributors, who are co-operatives; and

(ii) the manure-mixing firms.

(*c*) No, Sir. The demand from the ryots could not be met in full owing to inadequate supply of fertilizers.

SRI T. T. DANIEL : May I know whether this inadequate supply of fertilizers was due to the fact that we did not get in tune the necessary quantity that is needed for the ryots, from the Central Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Necessary quantity of fertilizers is available for distribution. Every effort is being made to get it in tim and to distribute it in time.

SRI N. R. THIAGARAJAN : ஸார், இந்த ரசாயன உரம் ராஜ்யங்களுக்கு எந்த அடிப்படையில் கொடுக்கப்படுகிறது ? ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் கொடுத்தது எவ்வளவு என்று விவரத்தைக் கொடுக்க முடியுமா ? நம் ராஜ்யத்திற்குக் கிடைத்ததில் ஒவ்வொரு ஜில்லாவிற்கும் எவ்வளவு கொடுக்கப்பட்டது என்று கூற முடியுமா ? தஞ்சை ஜில்லாவிலிருந்து லாரி மூலமாக ஏராளமான உரம் எங்கள் ஜில்லாவிற்கு வருகிறதே—சமீபத்தில்கூட சில லாரிகளைப் பிடித்திருக்கிறார்களே—அதனால் தஞ்சைக்கு அதிகமாகக் கொடுத்தார்களா ? அப்படி அதிகமாகக் கொடுத்திருந்தால் அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சை ஜில்லாவில் அதிக நிலம்—நஞ்சை நிலம்—இருக்கிறது. அதோடு தீவிர சாகுபடித் திட்டமும் நடக்கிறது. அதற்கு வேண்டிய அளவுக்கு கொடுக்கப்படுகிறது. அங்கிருந்து மதுரைக்குப் போவதாக இருந்தால் அதைப்பற்றி கனம் அங்கத்தினர் சந்தோஷப்படவேண்டும். கூடியவரையில் அங்கங்கே கொடுப்பது அங்கங்கே உபயோகப்படவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். அதைப்பற்றி கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. ஒரு சென்டரல் பூல் இருக்கிறது; அதிலிருந்து ராஜ்யங்களுக்கு சரிசமமாகப் பகிர்ந்து கொடுக்கிறார்கள். ஒவ்வொரு ராஜ்யத்தின் தேவை எவ்வளவு, எவ்வளவு பங்கு கொடுக்க முடியும் என்று பார்த்து பகிர்ந்து கொடுக்கிறார்கள்,

SRI K. ANBAZHAGAN : இந்த உர வினியோகம் நடைபெறுவதில் சில குறைபாடுகள் ஏற்படுகின்றன என்ற காரணத்தினால் உரத்தை வழங்குவதில் கையாளுகின்ற முறையில் ஏதாவது மாற்றம் செய்திருக்கிறார்களா ? அல்லது என்ன புதியமுறை கையாளப்படுகிறது என்று தெரிவிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அன்று மான்யத்தின் மீது நடந்த விவாதத்தின்போது கூறியதுபோல, இதுவரையில் நமது ராஜ்யத்திலிருந்து பக்கத்து ராஜ்யத்திற்குப் போய்க்கொண்டிருந்தது. செங்கல்பட்டு, வட ஆற்காடு ஜில்லாக்களிலிருந்து சித்தூருக்குப் போய்க்கொண்டிருந்தது. இப்போது ஒரு ராஜ்யத்திலிருந்து வேறு ராஜ்யத்திற்குப் போவதில் தடை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி மத்திய அரசாங்கத்திடம் சென்றோம். மற்ற சில ராஜ்யங்களும் இதற்கு இணங்கியது. இப்போது மத்திய அரசாங்கம் உத்திரவு போட்டிருக்கிறது. இது ஓரளவு பலன் அளிக்கும் என்று நினைக்கிறோம். மூவ்மெண்டுக்கு தடை விதிக்கலாம் என்று யோசனை இருக்கிறது. அதைப்பற்றி இன்னும் முடிவு

செய்யப்படவில்லை. இப்போது கூட்டுறவு ஸ்தாபனங்கள் கொடுப்பதை தனி நபர்களுக்குக் கொடுத்திருந்தோம். கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலமாக இருந்தால் தவறு இருக்காது. ஒன்றிரண்டு தவறுகள் இருந்தாலும் தனிப்பட்ட நபர்களிடத்தில் இருக்கக்கூடிய தவறுகள் இருக்காது என்று இப்போது கூட்டுறவு ஸ்தாபனங்களிடத்தில் கொடுத்திருக்கிறோம். இதனால் தவறுகள் குறைந்தும் இருக்கின்றன.

SRI S. NAGARAJA MONIGAR: இந்த உர விநியோகத்தில் குறைகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. இவைகளை மதிப்பு வாய்ந்த தமிழ் மக்களா செய்கிறார்களா? அல்லது வேறு யாராகிலும் செய்கிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்போது விநியோகம் 100-க்கு 75 பங்கு கூட்டுறவு ஸ்தாபனங்களினால் நடத்தப்படுகிறது. இதனால் தவறுகள் குறைந்திருக்கின்றன என்றும் சொன்னேன். மற்றும் கால் பங்கு மென்யூர் மிக்ஸிங் பெர்ம் என்ற அவர்களால் விநியோகிக்கப்படுகிறது.

### *Drinking water to City from Cauvery*

* 826 Q.—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) with reference to Question No. 246 answered on 18th August 1960 whether any scheme for the supply of drinking water to the Madras City from Cauvery has been prepared by the Government; and

(b) if so, the details thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) The investigation report is awaited.

(b) Does not arise.

SRI T. S. RAMASWAMI: May I know the grade of the officer who is investigating this? The same reply was given on 18th August 1960. May I know the reason why this has taken so long?

THE HON. SRI M. A. MANICKAVELU: A separate division under an Executive Engineer is looking into the matter. I may inform the House that a rough idea was given as to the number of points from which water could be tapped, from as many as five or six points. For instance, if water could be tapped from one point, the cost would come to Rs. 57 crores. From another point the cost would come to Rs. 7 crores. Drawing water from a particular point involves affecting the existing irrigation rights. There is also an idea to supply water to 14 lakhs of people in the way. So the matter requires detailed investigaton and that is being done.

### *"Mining" Engineering Diploma*

* 827 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR): Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether the "Mining" Engineering Diploma of the Central Polytechnic, Guindy, has been recognised by our Government;

14th March 1961]

(b) if not, the reasons therefor; and

(c) the names of the approved educational institutions whose Diploma in Mining Engineering has been recognised?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) The Diploma has been prescribed as a qualification for recruitment to the post of Superintendent, Factory for Crushing Quarts and Limestone, Salem. The question of according general recognition is under the consideration of the Government.

(c) No other Diploma in Mining Engineering has been recognized.

*Block Development Areas and Fisheries Block (Ramanathapuram)*

* 828 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. VINAYAKAM) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there are Block Development areas in Ramanathapuram district; and

(b) whether there are Fisheries Blocks in Ramanathapuram?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) No, Sir.

*Thiruvattar and Alagiamandapam blocks (formation)*

* 829 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) when will the Thiruvattar and Alagiamandapam blocks be formed in the Kanyakumari district; and

(b) the reason for the delay?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) There is no block called Alagiamandapam in the Kanyakumari ditrict. Of the nine blocks into which the district has been delimited seven have been taken up already under the Community Development Programme. The two blocks remaining to be taken up are Thuckalay and Thiruvattar. There has been no avoidable delay in taking up these blocks. According to the present policy of Government, these blocks will be taken up before October 1962 (for pre-extension work).

*Working of the Co-operative Societies (foreign countries)*

* 830 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the number of persons sent or to be sent from the Co-operative Department for studying the working of the Co-operative Societies in foreign countries;

(*b*) to which foreign countries; and

(*c*) the basis on which they are selected?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Two officers of the Co-operative Department were sent to foreign countries for training in Co-operation.

(*b*) One officer was sent to Canada and the other to U.S.A.

(*c*) The officers are selected on the basis of qualifications prescribed by the Government of India.

SRI T. S. RAMASWAMI: May I know, Sir, why United Kingdom and Canada were preferred as against Denmark and Sweden?

THE HON. SRI R. VENKATARAMAN: These are the countries which offered facilities and invited candidates.

SRI N. MARUDACHALAM: அப்படி அனுப்பப்பட்டவர்களில் தாழ்த்தப் பட்டவர்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI R. VENKATARAMAN: அந்த விவரம் என்னிடத் தில் இல்லை.

MR. SPEAKER: Questions are over.

NNTE.—An asterisk(*)at the commencement of a speech indicates revision by the Member

II.—LEAVE OF ABSENCE TO A MEMBER

MR. SPEAKER: I have received a notice of motion from Sri P. G Karuthiruman. He may now move it.

SRI P. G. KARUTHIRUMAN: Sir, I move—

'That under Rule 11 of the Madras Legislative Assembly Rules, leave of absence be granted by this House to Sri A. Y. S. Parisutha Nadar, till the end of June 1961, from the date of his absence.'

The motion was duly seconded.

The motion was put and carried.

III.-VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1931-62—*cont.*

DEMAND XXV—HARIJAN UPLIFT.

* THE HON. SRI P. KAKKAN: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 3,05,73,000 under Demand XXV—Harijan Uplift.'

MR. SPEAKER: Motion moved—

'That the Government be granted a sum not exceeding Rs. 3,05,73,000 under Demand XXV—Harijan Uplift.'

14th March 1961]

MR. SPEAKER : I understand that the hon. Member Sri N. K. Palanisami, is moving his cut motion under this Demand. He may move it now.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

'That the allotment of Rs. 3,05,73,000 under Demand XXV—Harijan Uplift be reduced by Rs. 100.'

MR. SPEAKER : Now the Demand and the cut motion are before the House for discussion.

How long will the Hon. Minister require for replying?

THE HON. SRI P. KAKKAN : I may require forty minutes, Sir.

MR. SPEAKER : I have got a list with me containing 21 names given by the Government Whip. I do not know how many more will be coming from the opposition parties. Even if I give 10 minutes for each hon. Member, only 18 hon. Members can participate in the discussion. I leave it to the House to suggest either to reduce the time limit or to sit for a longer time if necessary.

SRI P. G. KARUTHIRUMAN : I suggest that the House can meet in the afternoon between 3 and 5.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : If we meet in the afternoon generally there may not be quorum. I suggest that we may sit till 2 o'clock and if necessary reduce the time limit alloted to each hon. Member.

SRI K. ANBAZHAGAN : I suggest that each hon. Member may be given 7 minutes.

MR. SPEAKER : I hope the House agrees to the suggestion that it will continue to sit till 2 o'clock and that each hon. Member be given 7 minutes only. In that case, I will call the Hon. Minister to reply to the debate at 1-20.

* THE HON. SRI P. KAKKAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜனத்துறை மானியத்திலே வருடாவருடம் அதிகமாக இந்த அரசாங்கம் செலவு செய்து வருகிறது என்பதற்கு நான் முன்னுரையாக நிகழ்த்தவேண்டிய சொற்பொழிவை அச்சிட்டுக் கொடுத்திருக்கின்றேன். அதிலிருந்து பார்த்தால் இந்த அரசாங்கம் அதிகமாக செலவு செய்கிறது என்பது தெரியும். ஆதிவாசிகள், பின் தங்கிய வகுப்பினர், இன்னும் ஜாபிதாவிலிருந்து நீக்கப்பட்ட மக்களுக்கு எல்லாம் எவ்வாறு உதவி செய்யப்பட்டு வருகிறது என்பது நன்கு தெரிந்து கொள்ளலாம். நான் கொடுத்துள்ள அச்சிட்ட சொற்பொழிவிலே சில அச்சுப் பிழைகள் இருப்பதினாலே, அதை மதிப்பிற்குரிய அங்கத்தினர்கள் திருத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன். "குப்பைக்காரர்களும், தோட்டிகளும்" என்று போடப்பட்டிருப்பதற்குப் பதிலாக "நகர சுத்தித் தொழிலாளர்கள்" என்று திருத்திக் கொண்டால் நல்லமுறையிலே இருக்கும். அதை அந்தமாதிரி திருத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

பக்கம் 8-ல், கடைசி பாராவின் முதல் வரியில் " இருந்தன " என்று இருப்பதற்குப் பதிலாக, " இருக்கின்றன " என்று திருத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

பக்கம் 11-ல, முதல் பாராவில் 7-வது வரியில் " 15·42 லட்சம் " என்றிருக்கிறது. அதை " 16·42 லட்சம் " என்று திருத்திக் கொள்ளு மாறு கேட்டுகொள்கிறேன்.

பக்கம் 12-ல 4-வது பாராவிலே, கடைசி வரியில் " 2 வாரங்களாக " என்றிருக்கிறது. அதை " 2 மாதங்களாக " என்று திருத்திக் கொள்ளு மாறு கேட்டுக்கொள்கிறேன்.

பக்கம் 17-ல், 7-வது வரியில் ஜாப்தாவிலிருந்து நீக்கப்பட்ட வகுப்பினர் என்பதற்கு நேரில் " 1·71 " என்று போடப்பட்டிருக்கிறது. அதற்குப் பதிலாக " 6·50 " என்று திருத்திக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

பக்கம் 35-ல், பொருளாதார முன்னேற்றம் என்ற தலைப்பில் மொத்தப் பொருளாதார முன்னேற்றம் என்பதற்கு நேராக " 1·50 " என்று போடப்பட்டுள்ளதற்குப் பதிலாக, " 1·70 " என்று திருத்திக் கொள்ளு மாறு கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு கனம் அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் அன்பான ஆலோசனைகளைக் கூறுமாறும் கேட்டுக்கொள்கிறேன்.

Mr. SPEAKER : கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் ஏழு நிமிஷங்கள்தான் பேசலாம். நான் மணி அடித்தவுடன் தயவுசெய்து அவர் கள் உட்கார்ந்துவிடவேண்டும். மேலும் தொடர்ந்து பேசவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri V. SUBBIAH : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தின் வெட்டுப்பிரேரணைகளை பிரேரேபித்து ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இன்றைய ஹரிஜன மான்யமாக 3,05,73,000 ரூபாய் வழங்கப்பட்டிருக்கிறது. இந்த மான்யத்திலே குறிப்பாக சில குற்றச் சாட்டுகளைச் எடுத்துக்காட்டி, அதை நிவர்த்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ள ஆசைப்படுகின்றேன். இன்று இந்த மான்யத்தின் பேரால் வீடு கட்டும் திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டு, கட்டப்படும் வீடுகளில் 100-க்கு 90 வீடுகளைத் தவிர, மற்ற 10 % வீடுகள் இன்றைக்கு குடியிருக்க லாயக்கற்ற நிலைமையில் இருப்பதைப் பார்த்தால், பல லட்சக்கணக்கான ரூபாய்கள் இந்தத் திட்டத்தின்மூலம் வீணாக்கப்படுகிறது என்பது தெரியும். இதை யாரும் குறை சொல்ல முடியாத அளவிலே, இன்று எல்லாக் ஜில்லாக்களிலும் பரவலாக உள்ள இந்தக் குறையை நீக்குவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, மாடுகள் வாங்கும் திட்டத்திலேகூட, 400 ரூபாய் கூடுதல் க கொடுக்கப்பட்டிருந்தாலும்கூட 'அதுவும்கூட இன்றைய விலை வாசியினால் நல்ல தரமான மாடுகளை வாங்க முடியவில்லை. குறைந்தது 1,000 ரூபாயாக இருந்தால்தான், நல்ல ஜோடி மாடுகள் வாங்கப்பட்டு, நல்ல முறையிலே விவசாயத்தைச் செய்ய முடியும். அதேபோல் விவசாயத் துறையிலே பிற்பட்ட வகுப்பினர்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் கொடுக்கக் கூடிய நிலங்கள் எப்படி இருக்கிறதென்றால், அவர்களுக்கு வழங்கக் கூடிய நிலங்கள் மிக மட்டரகமாகவும், கரம்பாகவும், விவசாயத்திற்கே லாயக்கற்றதுமான நிலங்கள்தான் அவர்களுக்கு ஜாரி செய்யப்படுகின்றன. அப்பேர்பட்ட நிலங்களிலே, இவர்களுக்கு கொடுக்கப்படும் மாடுகளை வைத்துக்கொண்டு எப்படி நல்ல முறையிலே அவர்கள் விவசாயம் செய்ய முடியும்? ஆகவே அவர்கள் இந்தமாதிரியான நிலங்களை வைத்துக்கொண்டு விவசாயம் செய்வதற்கே முடியாமல் இருக்கிறார்கள்.

இந்த நிலைமை மாறவேண்டும். அதற்கு அவர்களுக்கு நல்ல நிலங்களாக ஜாரி செய்யப்படவேண்டும். தவிர டிராக்டர் போன்ற என்ஜின்களைக் கொண்டு அவர்களுக்கு நிலத்தைப் பண்படுத்திக் கொடுத்தால்தான், அவர்களுக்கு நல்லமுறையிலே விவசாயத்தைச் செய்ய முடியும் தவிர, மாடுகள் இன்று விற்கக்கூடிய நிலைமையில், அதிகமாக 400 ரூபாய் கொடுத்தாலும் அது போதவே போதாது. அதற்காக இன்னும் கொஞ்சம் கூடுதலானத் தொகையை ஒதுக்கி, குறைந்தபட்சம் 700 ரூபாயாவது அவர்களுக்குக் கொடுத்தால்தான், நல்ல ஜோடி மாடுகளை வாங்கி விவசாயம் செய்ய முடியும். ஆகவே கூடுதலான தொகை ஒதுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன வகுப்பிற்குள்ளேயே மிகவும் பிற்போக்கு அடைந்த வகுப்பினர்கள், அருந்ததியர், செக்கிலியர் என்று சொல்லப் படுகிறவர்கள் ஹரிஜன மக்களுக்குள்ளேயே தீண்டப்படாதவர்களாக வாழ் கிறார்கள். குறிப்பாக அவர்கள் 3 பிரிவினர்களாக இருக்கிறார்கள். செக்கிலியர், தோட்டி வேலை செய்யக்கூடியவர்களுக்கு நகராப் பகுதிகளிலே கட்டிடங்கள் கட்டி வசதிகள் செய்திருந்தாலும் கூட, கிராமப் பகுதிகளில் அவர்கள் புறக்கணிக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற குறை பரவலாக எங்கள் ஜில்லாவிலே இருந்துகொண்டிருக்கிறது. இந்தக் குறை நீக்கப்பட வேண்டும். அந்த மக்களுக்கு நல்ல வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். அவர்களுடைய குழந்தைகள் படிப்பதற்கும் மற்றும் அவர் களுக்கு வேண்டிய சுகாதார வசதிகளும் கிராமப் பகுதிகளிலே அவர் களுக்கு அரசாங்கம் செய்துகொடுக்க வேண்டும். அருந்ததியர்கள் ஹரிஜன வகுப்பிற்குள்ளேயே தீண்டப்படாதவர்களாக இருக்கிறார்கள் என்பதை மனதில் வைத்து அவர்களுக்கு விசேஷமான சலுகைகள் அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். 9-30 a.m.

தொழில் துறையிலே தோல் பதனிடும் தொழிலில் அவர்களை ஈடுபடுத்துவதற்கு அவர்களுக்கு முதன்மையான இடம் கொடுத்து, முக்கியத்துவம் கொடுக்கவேண்டும் என்பதை அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். பல இடங்களில் அவ்வித சலுகைகள் அளிக்கப்படவில்லை என்ற குறைகள் இருக்கின்றன. அந்தக் குறைகள் நீக்கப் படவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஹாஸ்டல் வசதிகளை ஹரிஜன மாணவர்களுக்கு செய்து கொடுப்பதிலே அந்த ஹாஸ்டல்களை தனிப்பட்டவர்கள் இடத்திலே கொடுப்பதால், அந்தக் குழந்தைகளுக்கு நல்ல அரிசி, காய் கறி போன்றவைகளும், அவர் களுக்கு வேண்டிய சுகாதார வசதிகளும் செய்து கொடுக்கப்படவில்லை. அவர்களை சரிவர கவனிப்பதில்லை என்று எல்லா இடங்களிலும் குறைகள் பல சொல்லப்படுகின்றன. ஆகவே, அரசாங்கமே இந்த ஹாஸ்டல்களை நேரடியாக எடுத்து நல்ல நிர்வாகிகளை போட்டு அவைகளை நிர்வகிக்க வேண்டும் என்பது என்னுடைய யோசனை.

மேலும், அரசாங்கம் பிற்பட்ட வகுப்பினர்களுக்கு ஸ்காலர்ஷிப் வழங்கும் விஷயத்தை ஜில்லாவாரியாக உள்ள ஹரிஜன வெல்பேர் ஆபீசர்களிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். அது சட்ட மன்ற உறுப்பினர் களுக்கு மிகமிக கஷ்டமாக இருக்கிறது. என்னைப் பொறுத்தவரையிலே 3, 4 ஜில்லாக்களிலே எங்கள் பகுதியிலே மாணவர்கள் வாசிக்கிறார்கள். எல்லா ஜில்லா தலைநகரங்களுக்கும் சென்று அங்கு இருக்கக்கூடிய ஆபீஸர்களை பார்ப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அந்த நிலையை நீக்கிவிட்டு எப்பொழுதும்போல் சென்னை நகரத்திலேயே அந்த ஸ்காலர்ஷிப்களை வழங்குவதற்கு ஏற்பாடு செய்வதுதான் வெகு சுலபமான முறையாக இருக்க முடியும். அதுதான் நல்லதாக இருக்கும் என்று நினைக்கிறேன். ஜில்லா வாரியாக இருப்பது பெரும்பாலான மக்களுக்கு கஷ்டமாக இருக்கிறது. அதை நிவர்த்தித்து கஷ்டமான நிலை இல்லாமல் செய்யவேண்டும்.

[Sri V. Subbiah] [14th March 1961

அடுத்தபடியாக, ஜாதிவாரியாக பிற்பட்ட வகுப்பினர்கள் என்று குறிப்பிடும்போது, இந்த நாட்டிலுள்ள விவசாயத் தொழிலிலே இருக்கக் கூடியவர்கள் சிலரை பிற்பட்ட வகுப்பினர் ஆக்காமல் முற்பட்ட வகுப்பின ராக செய்யப்பட்டிருக்கிறது. ஆந்திர ராஜ்யமும் நம்மோடு சேர்ந்து இருந்த காலத்தில் சில மந்திரிகள், அதாவது திரு சந்திரமௌளி, திரு பட்டாபிராம ராவ் ஆகியோர்கள் கம்மவார் நாயுடு வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். ஆந்திரா பிரிந்த பிறகு தமிழ் நாட்டிலே கம்மவார் நாயுடு வகுப்பினர்களை பிற்பட்ட இனத்தவர்களாக சேர்க்கப்படவில்லை. அவர்கள் பிற்பட்ட இனத்தவர்களாக சேர்க்கப்பட வேண்டும். முக்கியமாக வடுகர்களுக்கு சலுகைகள் கொடுக்க வேண்டும். ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் அவர்கள் இது சம்பந்தமாக வெட்டுப் பிரேரபணை கொடுத்திருக்கிறார்கள். பல இடங்களில் இதனால் தகராறுகள் ஏற்பட்டிருக்கின்றன. சங்கரன்கோயில், கோவில்பட்டி ஆகிய இடங்களில் தாசில்தார் சர்டிபிகேட் கொடுப்பது நிறுத்தப்பட்டு பல சிக்கல்கள் ஏற்பட்டிருக்கின்றன. கம்மவார் நாயுடு ஏன் பிற்பட்ட வகுப்பினர்களாக இருக்கக் கூடாது என்பது என்னுடைய கேள்வி. 100-க்கு 90 பேர்கள் கிராமங்களிலே விவசாயத்தை நம்பி வாழக்கூடியவர்கள். அவர்களுக்கு அரசாங்கம் முக்கியமாக சலுகைகள் கொடுக்கவேண்டும். அவர்களை பிற்பட்ட வகுப்பினர்களாக ஆக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI M. C. MUTHUKUMARASWAMY:—கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மான்யத்தை ஆதரித்து என்னுடைய கருத்துகளை சொல்ல முன்வருகிறேன். அமைச்சர் அவர்கள் ஏறக்குறைய 50, 52 பக்கங்களுக்குமேல் நல்ல முறையில் பரிசீலனை செய்து ஒரு அறிக்கையை சமர்ப்பித்திருக்கிறார்கள். அந்த அறிக்கையிலே குறிப்பாகச் சொல்லவேண்டுமானால், ஹரிஜன ஹாஸ்டல்களை அரசாங்கம் எடுத்துக்கொள்ளப்போவதாக சொல்லியிருக்கிறார்கள். தயவு செய்து அவர்கள் எடுத்துக்கொண்டால் பாதகம் விளையுமே தவிர, சாதகம் விளையாது என்பதை நான் உறுதியாக சொல்லிக்கொள்ளுகிறேன். ஏனென்று கேட்டால், மாயவரத்திலுள்ள ஹாஸ்டலை எடுத்துக்கொண்டால், அது ஆரம்பித்து 4, 5 வருஷங்களாக நடக்கிறது. நாற்பது பிள்ளைகள் அங்கே இருக்கிறார்கள். வருஷா வருஷம் அதே 40 பிள்ளைகள்தான் இருக்கிறார்கள். ஆனால் மற்ற பகுதிகளில் இருக்கிற ஹாஸ்டல்களை எடுத்துக்கொண்டால், இன்றைக்கு 40-ஆக இருப்பது 50, 60, 70 இம்மாதிரி ஏறிக்கொண்டு போகிறது. கொடுக்கக்கூடிய தொகை குறைவாக இருந்தாலும்கூட, அதை வைத்துக்கொண்டு அவர்கள் பிரயாசையால் பல பிள்ளைகளைச் சேர்த்து முன்னுக்கு கொண்டுவருவதற்கு வசதி இருக்கிற காரணத்தினால் அதை எடுத்துக்கொள்ளக்கூடாது என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மதிய உணவு திட்டத்தை எடுத்துக்கொண்டால் இந்தத் திட்டத்திற்கு பல லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தாலும்கூட. அது போதவில்லை என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றைக்கு மூட்டை ரூ. 22 விற்கிற நேரத்தில் அந்த ரூபாயை வைத்துக் கொண்டு அவர்கள் ஹாஸ்டல் நடத்துவது என்று சொன்னால் மிகவும் கஷ்டம், விலைவாசிகள் அதிகமாக ஏறியிருக்கிற காரணத்தினால். ஏற்கனவே எல்லாப் பொருள்களும் சகாயமாக விற்ற நேரத்தில் எந்த தொகை கொடுக்கப்பட்டதோ, அந்த தொகையைத்தான் இப்பொழுதும் கொடுத்துவருகிறார்கள். ஆகவே, அந்தத் தொகையை கொஞ்சம் அதிகப்படுத்திக் கொடுக்குமாறு நான் அரசாங்கத்தை மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, இந்தத் தீண்டாமை விஷயத்தைப்பற்றி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். தீண்டாமை நாட்டிலே பரவி இருக்கிறது. தீண்டாமை ஒழிந்ததாகச் சொல்லுவதற்கு இல்லை. இதைப் போக்க டெபூடி சேவக்குகள் போட்டு ஆங்காங்கு பிரசாரம் செய்து வருகிறார்கள், கோவில் நுழைவு எல்லாம் நடைபெறுகிறது என்று சொன்னார்கள்,

14th March 1961] [Sri M. C. Muthukumaraswamy]

ஆனால் அங்கு எல்லாவற்றையும் சரியாக கவனித்தார்கள் என்று சொல்லுவதற்கு இல்லை. அவர்கள் மாதாமாதம் அனுப்புகிற ரிப்போர்ட்டுகளை தணிக்கை செய்து, சரியாக அந்த ரிப்போர்ட்டுகளை அனுப்புகிறார்களா என்று அங்கே உள்ள ஜில்லா கலெக்டர்கள் கவனம் செலுத்தவேண்டும். இல்லையானால் அவர்கள் நல்ல முறையிலே பணியாற்றமாட்டார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, புறம்போக்கு நிலங்களை எடுத்துக்கொண்டால் இன்றைக்கு 10, 15 வருஷங்களாக அந்த நிலம் ஹரிஜன மக்களின் பாதுகாப்பில் இருந்தால்கூட, அந்த நிலங்களை அவர்களுக்கு கொடுக்காமல், ஏதோ பல காரணங்களைச் சொல்லி அந்த நிலங்களிலிருந்து அவர்களை விலக்கி விடுவது வழக்கமாக இருந்துகொண்டுவருகிறது. அவர்கள் வருஷக்கணக்கில் உழுதுவந்த நிலங்களை அவர்களுக்கே பட்டா செய்துகொடுக்குமாறு நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸ்தல ஸ்தாபனங்களை எடுத்துக்கொண்டால், யாராவது உத்தியோகங்களுக்கு மனுச் செய்துகொண்டால், அந்த இடங்களில் அவர்களுக்கு உத்தியோகங்கள் கொடுக்கப்படவில்லை. அதற்கு என்ன காரணம் என்று கேட்டால், அவர்கள் எந்தவிதமான காரணமும் சொல்லாமல் தட்டிக் கழித்துவிடுகிறார்கள். விகிதாசார முறையில் அவர்களுக்கு உத்தியோகங்கள் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தத் தீண்டாமை விஷயத்திலே போலீஸ்காரர்களுடைய உதவி தேவைப்படுகிறது. இந்த விஷயத்தை போலீஸ்காரர்களிடத்திலே ஒப்படைத்துவிட்டால் அவர்கள் செல்லுகின்ற இடங்களில் பல கிளப்புகளில் டம்ளர் மற்றவைகளெல்லாம் ஹரிஜனங்களுக்கு என்று தனியாக வைத்திருப்பதை கண்டித்து அவர்கள் மாதாமாதம் கொடுக்கிற ரிபோர்ட்டுகளில் விவரமாக கூறமுடியும், அப்படி அவர்களிடம் தனியாக விடாமல் டெப்யூடி சேவக்குகள் அவை கவனிப்பது என்றால், அவர்கள் நடவடிக்கை எடுக்கும்பொழுது போலீஸ் உதவியை நாடவேண்டியிருக்கிறது. அதை போலீஸ்காரர்களிடத்திலேயே பூராவும் விட்டுவிட்டால் மிகவும் நன்றாக இருக்கும்.

THE HON. SRI P. KAKKAN : போலீஸ்காரர்கள் அதைப் பார்த்தாலும் அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுக்க கடமைப்பட்டிருக்கிறார்கள். ஹரிஜனங்களை ஏதாவது கேவலமாக நடத்தினால் அதை உடனடியாக கவனித்து நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று பெரிய போலீஸ் அதிகாரிகளுக்கு உத்திரவு இடப்பட்டிருக்கிறது. டெப்யூடி சேவக்குகள் மாத்திரம் தான் இதைச் செய்யவேண்டுமென்பது அல்ல. போலீஸ்காரர்களும் இதில் கவனம் செலுத்தவேண்டும் என்று அரசாங்கம் உத்தரவிட்டிருக்கிறார்கள்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : சில இடங்களிலே அவர்கள் பராமுகமாகப் போவதையும் நான் பார்த்திருக்கிறேன். போலீஸ்காரர்களுடைய பொறுப்பில் விட்டுவிடுவார்களேயானால், அவர்கள் பொறுப்போடு செய்வார்களே தவிர, பொதுவாக அவர்களிடத்தில் விட்டுவிட்டால் ஏதாவது ரிப்போர்ட் போய்க் கொடுத்தாலொழிய, அவர்கள் நடவடிக்கை எடுக்கமாட்டார்கள் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே அரசாங்கம் நல்ல முறையில் நடக்கும்படி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வீடு கட்டும் திட்டம் விஷயமாக எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர்கள் புகார் சொன்னார்கள். நூற்றுக்கு 99 வீடுகளில் ஹரிஜனங்கள் குடி ஏற முடியாது என்று சொன்னார்கள். அது அவ்வளவு பொருத்தம் அல்ல. தஞ்சை ஜில்லாவிலே பார்த்தால் இன்றைக்கு 100-க்கு 100 வீடுகளில் ஜனங்கள் நல்ல முறையில் வாழ்கிறார்கள் என்பதைத்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. அங்கங்கேயுள்ள சட்ட மன்ற உறுப்பினர்கள் கட்டப்படுகிற வீடுகளில் கவனம் செலுத்தி அவர்களுடன் தொடர்புகொண்டு செய்வார்களேயானால் நல்ல முறையில் வீடுகளைக் கட்ட முடியும் என்பதை நான் வற்புறுத்திச் சொல்லுகிறேன்.

அடுத்தபடியாக அரசாங்கத்தில் எத்தனையோ லைசென்சுகள் வழங்கப் படுகின்றன. இனறைக்கு ஹரிஜன மக்களுக்கு குறிப்பாக டிரான்ஸ்போர்ட் சம்பந்தமாக எந்தவித லைசென்சும் கொடுக்கப்படாமல் மிகவும் கஷ்டப்படு கிறார்கள். அரசாங்கத்தின் இன்றைக்கு கூட்டுறவு சொசைட்டிகள்மூலமாக வைத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னாலும், ரெஜிஸ்டிரார் அவர்களைக் கண்டு நேரில் கேட்கும்பொழுது, 85 சதவிகிதம் அவர்களுக்கு ஒதுக்கிக்கொடுக்க வேண்டுமென்றும், மீதி இருப்பதைத்தான் எடுத்துக் கொள்ளவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். இதை எல்லாம் பார்க்கும் பொழுது, உழைக்கக்கூடிய ஒரு சமூகம் இந்த நாட்டிலே இருக்கிறது என்று சொன்னால் அது ஹரிஜனமாகத்தான் இருக்கவேண்டுமா என்று நான்கேட்க விரும்புகிறேன். எண்பத்தைந்து சத விகிதம் அவர்களுக்குக் கொடுத்துவிட்டால் மீதியை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்பது புரியவில்லை.

(மணியடிக்கப்பட்டது.)

*Dr. (Srimathi) T. S. SOUNDARAM RAMACHANDRAN: தலைவர் அவர்களே, நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அறிக்கையைப் பார்த்தால மனதிறகு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறது. "கற்றது கைமண் அளவு கல்லாதது உலகளவு" என்பது போல, இன்னும் பொருளாதாரத் துறையிலே எவ்வளவோ முன்னேற்றம் காணவேண்டியிருக்கிறது. இந்தபிற்பேக்கு வகுப்பினர், ஹரிஜன வகுப்பினர், ஆதிவாசிகள் என்று சொல்லும் பொழுது, இவர்கள் எல்லோரையும்விட மோசமான நிலையில இருக்கிறவர்கள் பல இடங்களிலே இருக்கின்றனர். முக்கியமாக வேதாரண்யத்திலுள்ள கோடிக் கரையிலும், மதுரையில் ஐயலூர், நத்தம் போன்ற வட்டாரங்களிலும், திருச்சியில் மருங்காபுரி என்று சொல்லப்படுகிற மலைப் பிரதேசங்களிலும் அம்பலம் என்று சொல்லப்படுகிறவர்கள் இருக்கிறார்கள். ஆனால் கீழே உள்ள அம்பலங்களுக்கும் அவர்களுக்கும் ஒற்றுமை காணப்படுவதில்லை. ஹரிஜனங்களைக் காட்டிலும் பிற்போக்கான நிலையில் நிராதரவாக இருக்கிறார்கள் என்று சொன்னால் மிகையாகாது. மந்திரி அவர்களும் பார்த்திருக்கிறார்கள். நான் ஒன்றும் அதிகமாகச் சொல்லவில்லை அவர்களையும் ஷெட்யூல்டு வகுப்பினராகச் சேர்த்து, இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்திலே பிற்போக்கு வகுப்பினர், ஷெட்யூல்டு வகுப்பினர் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறார்களோ, அந்த அளவுக்கு மூன்றாவது திட்டத்தில் அவர்களும் முன்னேற்றமடையவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன விடுதிகள் நடப்பதிலே பல அபிப்பிராயங்கள் கூறப்படலாம். சர்க்கார் நடத்துவது நியாயமானதுதான் என்று சொன்னாலும். தனிபட்டவர்கள் கொஞ்சம் சேவை உணர்ச்சியுடன் நடத்த முன்வருவார்களேயானால், அங்கே பிள்ளைகளை நல்லமுறையில் பராமரித்து கல்வியின் தரத்தையும் காக்க முடியும் என்பது என்னுடைய அபிப்பிராயம். எங்கெங்கே நன்றாக நடத்துகிறார்களோ அங்கேயுள்ள ஹரிஜன மாணவ விடுதிகளை மாற்றவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். பெண்களுக்குப் போதுமான விடுதிகள் இல்லை. போதுமான பெண்கள் வரவில்லை என்று சொல்லலாம். விடுதிகள் வைத்தால் நிச்சயமாக பெண்கள் சேர முன் வருவார்கள். பெண்கள கல்வி முன்னேற்றத்திற்காக மூன்றாவது திட்டத்தில் பெரிய திட்டங்களைப் போடுகிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். பின்தங்கிய வகுப்பு, ஹரிஜன வகுப்பு, ஆதிவாசிகளின் பெண்கள் ஆகியவர்களுக்கு கொடுக்கவேண்டிய முறைக்கு ஒரு திட்டம் கொண்டுவந்து, ஹாஸ்டல்களைப் பரவலாக அமைக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

கைத்தொழில் துறையிலே பாய் முடைகிறவர்கள், மீனவர்கள் ஏராளமாக சிலசில பிரதேசங்களில் இருக்கிறார்கள், ஆனைசகால்பட்டியிலே பாய் முடையும் சங்கம் இருப்பதாகத் தெரிகிறது. ஐம்பது குடும்பங்களுக்கு மேற்பட்டு இருந்தால் அந்த இடங்களிலே ஒரு கூட்டுறவு சங்கம் அமைக்க வேண்டும், அவர்களுக்கு வேண்டிய ரா மெட்டீரியல்களை, அதாவது கோரை முதலிய பொருள்களை, நியாய விலையில் கிடைக்கச் செய்யவேண்டும்.

14th March 1961] [Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

ஹரிஜனங்களிலேயே பொருளாதாரத்தில் மிகமிகக் கீழ் நிலையிலே இருக்கிறவர்கள் தோல் பதனிடுபவர்கள். அவர்களுக்காக வருஷா வருஷம் சோடிக்கணக்கிலே பணம் ஒதுக்கப்படுகிறது. ஆனால் வருஷா வருஷம் அந்தப் பணம் செலவழிக்கப்படாமல் திரும்பிப் போகிறது. முழுவதும் இல்லை ; கணிசமான அளவு திரும்பிப் போகிறது. இங்கே இருக்கும் ஹரிஜன நலத்தில் அக்கரை கொண்ட எல்லா அங்கத்தினர்களையும் கேட்டுக் கொள்கிறேன். ஒவ்வொரு கிராமத்திலும் தோல் பதனிடும் தொழிலை எந்தவிதம் நடத்தவேண்டுமென்று கேட்டுத் தெரிந்துகொண்டு, அவர்களுடைய பூரண ஒத்துழைப்பைக் கொடுத்து, மூன்றாவது திட்டத்தில் பொருளாதாரத் துறையில் அவர்களுக்கு விசேஷ வாய்ப்பைக் கொடுக்கும்படி நான் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த அறிக்கையிலே ஒரு சிறிய தவறு இருக்கிறது. என்று நினைக்கிறேன். காந்திக் கிராமத்திலுள்ள கிராமீய கல்லூரிக்கு உபகாரச சம்பளம் கொடுக்கப்படுகிறது. பெரியநாயக்கன் பாளையத்திலுள்ள இராமகிருஷ்ண வித்தியாலயத்திற்கும் உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. பெரிய நாயக்கன்பாளையம் இராமகிருஷ்ண வித்தியாலய கிராமக் கல்வி நிலையத்தைச் சேர்ந்த பொறியியல் பள்ளிக்கும், விவசாயப் பள்ளிக்கும் ஹரிஜன நலத்துறையிருந்து உபகாரச் சம்பளங்கள் வழங்குவதை அங்கீகரிப்பது சம்பந்தமாக அரசினர் ஆலோசித்து வருகின்றனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. விவசாயப் பள்ளியைப் பொறுத்த வரையில் ஏற்கெனவே கொடுக்கப்பட்டு வருகிறது. பொறியியல் பள்ளிக்குக் கொடுப்பது விசாரணையில் இருக்கிறதோ என்னமோ.

ஹரிஜனப் பெண்கள் எல்லோருமே கல்லூரி வகுப்புகளுக்குப் போக முடியாது. தையல் முதலிய கைத்தொழில்களை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க அதிகமாக நிலையங்கள் வேண்டும். சென்னையிலும், மதுரை போன்ற பெரிய நகரங்களிலும் மட்டும் வைத்தால் போதாது. எங்கெங்கே ஹரிஜனக் குடும்பங்கள் அதிகமாக இருக்கிறார்களோ, அந்த இடங்களிலே எல்லாம் தையல் தொழிலை ஊக்குவிக்க வேண்டும். இப்பொழுது ஏராளமான அளவிலே துணிகள் வைத்துக் கொடுக்கிறார்கள். இதை விட்டுவிட்டு, அந்தந்தப் பள்ளிகளிலே, அந்தந்த ஹாஸ்டல்களிலே இருக்கிறவர்களுக்குத் துணிகள் வாங்கிக் கொடுத்து தகுந்த அளவுக்குத் தைக்கச் சொன்னால் நன்றாக இருக்கும். 5 வயதுக் குழந்தை 8 வயதுக் குழந்தையின் பாவாடையையும் சட்டையும் போட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதே மாதிரி 12 வயதுக் குழந்தை 7 வயதுக் குழந்தையின் பாவாடையைப் போட்டுக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட வயது அளவை வைத்துத் தைத்து விடுகிறோம். அது எல்லாக் குழந்தைகளுக்கும் சேருவதில்லை. சர்க்கார் நடத்தும் விடுதிகளில் மட்டுமல்ல, தனியார் நடத்தும் விடுதிகளிலும், துணியை வாங்கிக் கொடுத்து, அந்தந்த நிர்வாகத்தினரே தைத்துக் கொடுக்கும்படிச் செய்தால் பெண் குழந்தைகள் சந்தோஷமாகப் போட்டுக் கொள்வார்கள்.

கல்வித் துறையில் கணிசமான அளவுக்கு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைந்தால் சமுதாயத்திலே இருக்கிற குறைகளும் தானாகவே நீங்கிவிடும்.

ஆகவே இம்மாதிரி கைத் தொழில் பள்ளிகள், ட்ரெயினிங் கம் ப்ரொடக்ஷன் சென்டர்கள் என்று சொல்லுகிறார்களே அவற்றைப் பரவலாக பல இடங்களில் இயங்க வைக்கவேண்டும், ஹரிஜன மாணவர்கள் தொடர்ந்து படிக்காமல் நடுவில் ஸ்டாகனேஷன் வந்துவிடுகிறது என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்குத் தொழில் முறைப படிப்பு எவ்வளவு அவசியம் என்பதை அவர்களுக்கு எடுத்து உணர்த்தி கைத் தொழில் பள்ளிகளில், உற்பத்தி நிலையங்களில் தொடர்ந்து படிக்கச் செய்யவேண்டும். அவ்விதம் செய்து பொருளாதாரத் துறையில் அவர்கள் முன்னேற்றத்திற்கு வழிகாண வேண்டும். அப்பொழுது தான் அவர்கள் சமுதாயத் துறையில் அவர்களுக்கு முன்னேற்றம் காண வாய்ப்பு தோன்றும்.

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran] [14th March 1961

தோட்டிகளைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லி முடிக்கிறேன். சில சமுதாயக் குறைகள் நாம் பார்க்காமல், நமக்குத் தெரியாமலே இருப்பதாலேயே அவை இல்லை என்று மறந்து விடுகிறோம். இந்த நகர் சுத்தி தொழிலாளிகளைப் பற்றி மாவ்கான போன்றவர்கள் விவரமாக எழுதியிருக்கிறார்கள். அவர்கள் செய்யும் தொழில் மிகவும் பரிதாபமானது. கூடைகளிலே மலத்தை எடுத்துச் செல்லும் வழக்கம் அடியோடு ஒழிய வேண்டும். அல்லது அவர்களுக்கு ஒழுகாத இரும்புக் கூடைகளாவது வழங்கவேண்டும். இந்த மூன்றாவது திட்டத்திலும் அதைச் செய்து அவர்களுக்கு சமுதாயத்தில் நல்ல நிலையை ஏற்படுத்தாவிட்டால், நாம் எந்தத் துறையிலும் முன்னேறியதாக ஆகாது. இந்தப் பணியில், சர்க்காரும், முனிசிபாலிடிகளும், பஞ்சாயத்துக்களும் தீவிர சிரத்தை எடுத்துக் கொண்டு, ஒழுகும் மலத்தைக் கூடைகளில் கொண்டுபோவதையாவது ஒழிக்க வேண்டுவது நம் கடமை என்பதைச் சொல்லி என் உரையை முடிக்கிறேன்.

* SRI T. IRUSAPPAN : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் இந்த நாட்டு பழங்குடிகளான ஆதி திராவிட மக்கள் பிரச்சினை பற்றி என்னுடைய குறைகளைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். சமுதாயத்தின் முதுகெலும்பாகிய அவர்கள் அல்லல் படுகிறார்கள்.

(Sri V. K. Krishnamurthy in the Chair.)

சமுதாயத்தில் தீண்டாமையை ஒழித்துவிட்டோம் என்று பேசுவதில் அர்த்தம் இல்லை. தீண்டாமை இன்னமும் ஒழியவில்லை என்பதை அமைச்சர் அவர்களும் அறிவார்கள், எல்லோருக்கும் தெரியும்.

THE HON. SRI P. KAKKAN : ஒழியவில்லை என்று சொல்வது அவ்வளவு சரியில்லை. குக்கிராமங்களிலே கொஞ்சம் கொஞ்சம் இருக்கலாம். பெரிவாரியாக ஒழிந்துவிட்டது என்று வேண்டுமானால் சொல்லமுடியும். ஆனால், ஒழிந்திருக்கிறது. கொஞ்சம் இருக்கிறது உண்மைதான்.

SRI T. IRUSAPPAN : அதை ஏன் நான் குறிப்பிடுகிறேன் என்றால், தனிப்பட்ட வீட்டில் இவர்களை விடாமல் இருந்தால். அது பற்றி கவலையில்லை. ஆனால், தேனீர் விடுதி உணவு விடுதி இவைகளில் கிராமப் புறங்களில் இவர்களை விடுகிறதில்லை என்கிற மனோபாவம் இன்னமும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது பற்றி பல முறைகளில் ஆளும் கட்சிக்குச் சொல்லியும், ஒரு பஞ்சாயத்து போர்டுக்கு அதுமாதிரி விடுதிகளுக்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டாம் என்று கேட்டுக்கொண்டும் அது நடக்கவில்லை. ஆதி திராவிட மக்களுக்கு போலீஸ் கண்காணிப்பும் மிகக் குறைவாக இருக்கிறது. ஏதாவது சென்று முறையிட்டால், அவர்கள் என்ன ஐயா சாட்சி இருக்கிறது, எப்படி ஐயா கேஸ் தொடங்குவது என்கிறார்கள். அந்த நிலை மாறவேண்டும்.

வீடு கட்டுவதிலும் சர்க்கார் கொடுக்கும் 550 ரூபாய் மானியம் போதாது என்பதை எல்லோரும் எடுத்துச் சொல்லுகிறார்கள். அதை உயர்த்த வேண்டும் என்று கேட்டும் இந்த அறிக்கையில் இந்த ஆண்டு கொடுப்பதாகவும்......

THE HON. SRI P. KAKKAN : என்னுடைய சொற்பொழிவை நன்றாகப் படிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். 250 ரூபாயாக இருந்தது 500 ஆக மாற்றப்பட்டு இந்த வருஷத்திலிருந்து அது 1,000 ரூபாயாக இருக்கிறது. அதிகப்படியாக 250 ஸப்ஸிடியாகவும், 250 ரூபாய் கடனாகவும் கொடுக்கப்படும்.

SRI T. IRUSAPPAN : அதை நான் பாராட்டுகிறேன். அது நீலகிரி மாவட்டத்திற்கு மட்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது....

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURTHY) : Two minutes more.

SRI T. IRUSAPPAN : ஆத்தூர் தாலூகாவில் ஆதிவாசி மலைவாசிகளுக்கு உணவு விடுதி வேண்டும் என்று வெகுகாலமாகக் கேட்டு வருகிறோம். தம்மம்பட்டி சின்னக் கல்ராயன் மலை, கரியாக் கோயில் இந்த

14th March 1961] [Sri T. Irusappan]

இடங்களில் கொடுக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. ஆத்தூரில் குறவர் விடுதி இருக்கிறது; அதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. பல முறை அதிகாரிகளை கண்டு சொல்லியும் ஒன்றும் நடக்கவில்லை. குற்ற பரம்பரைக சேர்ந்தவர்களுக்கும ஆதி திராவிட மாணவர்களுக்கும் தகராறுகள் ஏற்படுகின்றன. அவர்களுக்குத் துணி கொடுக்கிறார்கள்; இவர்களுக்கு கொடுப்பதில்லை. குறவர்களுக்கு துணி கொடுக்கும்போது ஆதி திராவிட மக்களுக்கு ஏன் அங்கே துணி கொடுக்கக் கூடாது. அதனால் சச்சரவு ஏற்படுகிறது. அவர்களுக்கு ரூ. 15 போதாது அதை 18 ஆக்க வேண்டும், அப்பொழுதுதான் விலைவாசி ஏற்றத்தினால் அவதிப்படாமல் இருப்பார்கள்.

நாவலூரில் கூட்டுறவுப் பண்ணை ஏற்பட்டிருக்கிறது. அம்மாதிரி ஆத்தூரில் ஏற்படுத்த சங்கம் நிறுவி, அங்கத்தினர்களைச் சேர்த்தார்கள். ஒரு ட்ராக்டரைக் கொண்டு உழுதார்கள். ஆனால் மெசின் கெட்டுவிட்டது. அதன் மேல் உழ முடியவில்லை. இந்த கூட்டுறவுப் பண்ணை வந்தால் தான் அங்குள்ள ஆதி திராவிட மக்கள் நல் வாழ்வு வாழ முடியும். அதைச் செய்ய......

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURTHY): அங்கத்தினர்.

SRI P. APPAVU: சட்ட மன்ற தற்காலிகத் தலைவர் அவர்களே, ஹரிஜனத் துறை மானியக் கோரிக்கையை ஆதரித்து நானும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஹரிஜன முன்னேற்றம் என்று சொல்லும் போது, கல்வித் துறை மிக முக்கியமானது. கல்வித் துறையில் முன்னேற்றம் கண்டு இருக்கிறோம் என்று பெருமைப்பட்டாலும், அவர்களுக்கு அளிக்கும் உபகாரச் சம்பளம் சம்பந்தப்பட்டவரை காலதாமதம் தீர்ந்த பாடில்லை. உபகாரச் சம்பளம் கொடுக்கும் இடத்தை மாற்றுகிறார்களே தவிர விரைவில் வழங்க முன்வரவில்லை என்று கூறி வருந்துகிறேன். உற்ற காலத்தில் கொடுக்கப்படவில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள அதிகாரிகள் அங்குள்ள பள்ளிப் பிள்ளைகளுக்கு பலகை புத்தகங்கள் வழங்குவது வருஷம் பூரா ஆகிவிட்ட பிறகு, இந்த மார்ச்சு மாதத்தில் மாதக் கடைசியில் கடந்த ஆண்டுக்கு உண்டானவைகளைக் கொடுக்கிறார்கள். அப்படிப்பட்ட அதிகாரிகளிடமே கல்லூரி மாணவர்கள் சம்பளத்தையும் கொடுக்காமல் இன்னமும் தாமதம் தான் ஏற்படும். பாவாடை சட்டை கொடுப்பதெல்லாம் ஆண்டின் இறுதியில்தான் கொடுக்கிறார்கள்; அவசர அவசரமாகக் கொடுக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் கல்லூரிச் சம்பளத்தையும் சீக்கிரத்தில் கொடுக்கமாட்டார்கள். ஆகவே அவர்களிடம் இதையும் கொடுக்கவேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: இந்த ஆண்டு இறுதியில் வழங்குவதாகச் சொல்கிறார்கள். உடை அளிக்கும் திட்டம் மாணவிகளுக்கு என்று இந்த ஆண்டிலிருந்துதான் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

SRI P. APPAVU: உடை வழங்குவதைப் பற்றி மகிழ்ச்சி அடைகிறோம். மாணவ மாணவி விடுதி பற்றிச் சொன்னார்கள். அதை தனியார் துறைக்குக் கொடுக்கவேண்டுமென்று. சர்க்கார் துறையில் நடைபெறுவது தான் சிறந்தது என்பது என்னுடைய அபிப்பிராயம். என்னுடைய செங்கல்பட்டு தொகுதியில் நடைபெற்ற விடுதி தனியாரிடம் இருந்தபோது மாணவர்கள் குறைவாக இருந்தார்கள். அரசாங்கத்தின் நிர்வாகத்தின் கீழ் வந்தவுடன் மாணவ விடுதியிலும் சரி, மாணவி விடுதியிலும் சரி எண்ணிக்கை அதிகமாகியிருக்கிறது. ஆகவே இப்படி சர்க்கார் துறையில் மாணவ மாணவி விடுதிகள் நடைபெறுவதற்கே அதிகச் சலுகை அளிக்க வேண்டும். இன்னொன்று, கடந்த ஆண்டு செலவழிக்கவேண்டிய பணத்தை இறுதிக்குள்ளாகவே செலவழிக்கவேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். 10 a.m.

என்னுடைய தொகுதியில் திருப்போரூரில் ஒரு மாணவர் விடுதி இருக்கிறது. அது தர்ம சத்திரத்தில் நடந்து கொண்டிருக்கிறது. அதற்குக் கட்டிடம் கட்டி வசதி செய்து தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்னையில் சுமார் எட்டு லட்சம் என்று நினைக்கிறேன்—செலவழித்து எம். ஸி ராஜா ஹாஸ்டல் என்று கட்டியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட கட்டிடத்தைக் கட்டி மாணவர்களுக்கு வசதி செய்து தர வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

குடிமனை ஆர்ஜிதம் செய்வதைப்பற்றி அறிக்கையில்கூட அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். காலதாமதம் ஆவதற்குரிய காரணங்களை காட்டியிருக்கிறார்கள். நமது உள்துறை அமைச்சர் அவர்களுடைய தொகுதியில்கூட ஸ்ரீபெரும்புதூர் தாலுக்காவில் நில ஆர்ஜிதம் பூர்த்தியாகவில்லை. மின்சார விளக்கு போடுவதிலும் ஹரிஜனங்களுடைய பகுதிக்கு இன்னும் போடப்படவில்லை. எனது நண்பர் திரு. எழுமலை தொகுதியாகிய திருவொற்றியூரில்கூட 1952-ம் ஆண்டில் இருந்தே அவர் முயற்சி செய்து வந்திருந்தபோதிலும் இன்னும் நில ஆர்ஜிதம் பூர்த்தி அடையவில்லை என்பதையும் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

காலனி கட்டும் முறையில் ஒரு வீட்டுக்கு 750 ரூபாய் கொடுத்துக் கொண்டிருந்ததற்குப் பதிலாக 1000 ரூபாய் கொடுக்கப்போவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மகிழ்ச்சி அடைகிறேன். இந்த நடைமுறை ஆண்டிலேயே கொடுக்கவேண்டும்.

THE HON. SRI P. KAKKAN : இந்த வருஷம் 1961-62 முதலே ஆயிரம் ரூபாய் கொடுக்கிறோம்.

SRI P. APPAVU : செங்கல்பட்டு தொகுதியில் மீனவர்கள் கடற்கரைப் பகுதியில் வாழ்கிறார்கள். சாமான்கள், அரிசி முதலியவை வாங்குவதற்கு திருப்போரூருக்குத்தான் வந்தாகவேண்டும். நடுவில் உப்பங்கழியை கடந்து அவர்கள் வரவேண்டியதாக இருக்கிறது. நடுவில் உள்ள பக்கிங்காம் கால்வாய்க்கு மரப்பாலம் கட்டிக் கொடுப்பதாகக் கடந்த ஆண்டில் கூடச் சொன்னார்கள். இதுவரையில் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*SRI V. CHINNIAH : தலைவர் அவர்களே, ஹரிஜன மானியத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். போன ஆண்டை விட இந்த ஆண்டில் அதிகப்படியாக நிதி ஒதுக்கியிருப்பதற்காக அரசாங்கத்தை பாராட்டுகிறேன். மேலும் ஹரிஜனங்கள் முன்னேற்றம் அடைவதற்குப் பல நல்ல காரியங்களை அரசாங்கம் செய்திருக்கிறது.

இருந்தாலும் தொழில் துறையில் ஹரிஜனங்கள் மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறார்கள். அதுவும் தனியார் நடத்துகிற கம்பெனிகளில் ஐயர் நடத்துவதாக இருந்தால் ஐயர்களுக்குத்தான் வேலை கொடுக்கப்படுகிறது முதலியார் நடத்துவதாக இருந்தால் முதலியார்களுக்குத்தான் வேலை கொடுக்கப்படுகிறது. இப்படி சாதி அடிப்படையில்.....

THE HON. SRI P. KAKKAN : எங்கே இப்படி செய்யப்படுகிறது ? நெய்வேலியிலா ?

SRI V. CHINNIAH : டி. வி. எஸ். கம்பெனியில் இருந்துதான் சொல்கிறேன். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சாதிக்காரர்களுக்கு வேலை கொடுக்கிறார்களே தவிர ஹரிஜனங்களுக்கு கொடுப்பதில்லை. ஆகவே வேலைக்கு ஆள் பொறுக்குகிறபோது ஒரு கமிட்டியைப் போட்டு அதில் ஹரிஜனப் பிரதிநிதி இருக்கும்படியாக செய்யவேண்டும்.

14th March 1961] [Sri V. Chinniah]

சர்விஸ் கமிஷனை எடுத்துக்கொண்டாலும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்களுடைய பிரதிநிதி அங்கே யாரும் கிடையாது. அதனால் ஹரிஜனங்களுக்குப் போதுமான சலுகை கிடைப்பதில்லை. படித்தவர்கள் பலர் இந்த சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் தெருவில் சுற்றிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே சர்விஸ் கமிஷனிலும் தாழ்த்தப்பட்டவர்களுடைய பிரதிநிதி ஒருவரைப் போடவேண்டும். அதேமாதிரி வேலை தேடித் தரும் ஸ்தாபனங்கள ஒவ்வொரு ஜில்லாவிலும் இருக்கின்றன. அந்த ஸ்தாபனங்கள் ஒவ்வொன்றிலும் தாழ்த்தப்பட்ட பிரதிநிதி ஒருவரைப் போட்டால்தான் போதுமான அளவு ஹரிஜனங்களுக்கு வேலை தேடித் தர வாய்ப்பு ஏற்படும்.

தனியார் நடத்துகிற ஹாஸ்டல்களை எல்லாம் அரசாங்கம் எடுத்துக் கொண்டு வருகிறது. இன்னும் பல ஹாஸ்டல்கள் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. அவற்றையும் சர்க்கார் எடுத்துக் கொண்டால்தான் மாணவர்களுக்குப் போதுமான வசதி ஏற்படும். இன்றைக்குத் தனியாரிடம் அவை இருப்பதனால் 70 பேர்கள் இருக்கக்கூடிய இடத்தில் 200 ரூபாய்களுக்கு மேல் வருவாய் அவருக்கு வருவதாகச் சொல்லப்படுகிறது. அவற்றையெல்லாம் அரசாங்கமே எடுத்துக்கொண்டாகவேண்டும், தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் ஹரிஜனங்கள் மிகவும் பின்தங்கிய நிலைமையில் இருக்கிறார்கள். அவர்கள் முன்னேற்றம் அடைய இப்படி பல வசதிகளை செய்வதோடுகூட பொதுவாக ஹரிஜனங்கள் . மற்ற சாதிக்காரர்கள் என்று சேர்த்து பணம் ஒதுக்கக்கூடாது. ஹரிஜனங்களுக்கும் என்று தனியாகவும் மற்ற சாதிக்காரர்களுக்கு என்று தனியாகவும் ஒதுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

Sri S. R. MUNUSWAMI : சட்டமன்ற தற்காலிக தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கோரியிருக்கும் மானியத்தின் மீது, இந்திய குடியரசுக் கட்சியின் சார்பில் என் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன் இந்த மானியத்திற்கு அமைக்கப்பட்டிருக்கும் பெயர்—நொளளைக் கண்ணனுக்கு தாமரைக் கண்ணன் என்று பெயர் வைத்திருப்பது போல இருக்கிறது. காரணம் வார்த்தையினால் சிறப்பு, ஆனால் வாழ்க்கையில் தாழ்வு எனகிற நிலைமைதான இருக்கிறது. ஹரிஜன மக்கள்—ஆண்டவனது குழந்தைகள் என்ற நல்லெண்ணத்தோடு இந்தப் பெயர் இவ்விலாகாவுக்கு, இந்தச் சமூகத்திற்கு வைக்கப்பட்டது. பெயரை வைத்து அவர்களுடைய வாழ்க்கையைப் பாதுகாப்பதற்குப் பதிலாக இவர்கள் மற்றவர்களுடைய வாழ்க்கையைப் பாதுகாக்கக்கூடிய அடிதளத்தில் வைக்கப்படுகிறார்கள். அதன் காரணமாகவே இந்த மானியத்திற்கு ஹரிஜன மானியம் என்று பெயர் வைப்பதில் அர்த்தமே இல்லை.

இதிலே போடப்பட்டிருக்கும் தொகைகளைக் கணக்கிட்டுப் பார்ப்போமானால் முதலிலே எந்த மக்களுக்கு ஒதுக்கப்பட்டதோ அந்த மக்களின் சீரமைப்புக்கு பயன்படுவது எவ்வளவு குறைந்த தொகை என்பதை கனம் அமைச்சர் அவர்கள் உணர்வார்கள். ஆனால நிர்வாக செலவிற்கோ, இதர செலவிற்கோ கருத்திற்கு பொறுத்தமற்ற பல காரியங்கள் தான் அதிகமாகச் செலவிடப்பட்டிருக்கிறதே தவிர மான்யத்திலே கண்டுள்ளபடி மக்களுக்கு எந்தவிதமான வசதியும் அதிகமாகக் கிடைப்பதில்லை என்பதை வற்புறுத்திக் கூறவிரும்புகிறேன். செலவினங்களையும் அதிகப்படுத்தியிருந்தும் அந்த மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரவில்லை எனபதைத்தான் நான் கஷ்டத்தோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஹரிஜனங்களுக்கு செலவிடுவதற்காக மான்யம் என்ற பெயர் இருப்பது அந்த மக்களுக்கு இழுக்கை உண்டாக்கக் கூடியதாகத்தான் இருக்கிறது. இந்த சர்க்கார் வந்திருப்பது ஹரிஜன மக்களுடைய வளர்ச்சிக்காகத்தான் என்று சொல்லிக்கொள்கிறேன் ஆண்டுக்கு ஆண்டு ஒதுக்குகிற எல்லாத்தொகையும் ஹரிஜன மக்களே அடைந்துவிடுகிறார்கள் என்று சொல்லி ஹரிஜன மக்களுக்கு இழுக்கை உண்டாக்கி வைக்கிறார்களே தவிர இதனால் ஹரிஜன மக்கள் முற்போக்குநிலை அடைந்திருக்கிறார்களா என்று பார்த்தால் கிடையாது.

[Sri S. R. Munuswami] [14th March 1961

ஹரிஜன மக்களுக்கு குடியிருப்பு மனையை வாங்கிக் கொடுப்பதாக 10 ஆண்டு காலமாக சொல்லிவருகிறார்கள். ஆனால் என்னுடைய தொகுதியில் உள்ள ஆம்பூர் கஸ்பாவில இதற்காக நகரசபை தீர்மானம்போட்டு மான்யம் ஒதுக்கி இருந்தும 10 ஆண்டுகள் ஆகியும் இன்னும் கிடைக்கவில்லை. காரணம் அங்குள்ள பெரும் நிலச்சொந்தக்காரர்களுடைய நிலத்தை சர்க்கார் வாங்க முடியவில்லை அப்படியென்றால் இந்தச் சர்க்கார் பணக்காரர்களுடைய கைபொம்மைகளாக இருக்கிறார்களே தவிர உண்மையிலே மக்களுடைய நலனுக்காகப் பாடுபடுவதாகத் தெரியவில்லை. இதைக் குறித்து வருத்தப்படவேண்டியிருக்கிறது.

வேலூர் நகரத்தில் உள்ள கஸ்பாவில் வாழும் ஹரிஜன மக்களுக்கு வீட்டு மனை கொடுக்கவேண்டுமென்று திட்டம் போட்டு பணம் ஒதுக்கியும் குறிப்பிட்ட நிலம் ஆனது அந்த மக்களுக்குக் கொடுக்கப்படாமல் முஸ்லீம்கள் குடியேறியிருக்கிறார்கள். பிச்சைக்காரர்களுக்கு விடுதி கட்டுகிறோம் என்று சொல்லி பங்கு போட்டுக்கொண்டு ஹரிஜனங்களுக்குக் கொடுக்க முடியாது என்று மறுத்து விட்டார்கள்.

அடுத்தபடியாக நாட்டில் வகுப்புவாதம் ஒழியவேண்டுமென்றால் நம்முடைய தொழில் அமைச்சர் அவர்கள் அதிக கவனம்செலுத்தி கிராமப்புறங்களிலே தொழில்களைப் பரப்பவேண்டும். எந்த இடத்தில் தொழில் பரவி இருக்கிறதோ அந்த இடத்தில் வகுப்புவாதம் குறைந்து இருக்கிறது. தனியார் யாராவது தொழில் நடத்துகிறார்கள் என்றால் அவ அவர்களுடைய இனத்தவர்களைத்தான் வேலைக்கு அமர்த்திக்கொள்ளுகிறார்கள். அதிகாரிகளும், மற்றத் தலைவர்களும் அவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவர்களைத் தான் அந்தத் தொழிலில் சேர்த்துக்கொள்ளுகிறார்கள். ஹரிஜன மக்களை அதிகமாகச் சேர்த்துக்கொள்வதில்லை. ஆகையால் ஹரிஜன மக்களை அதிகமாகத் தொழிலிலே ஈடுபடுத்தும்பொருட்டு கிராமப்புறங்களிலே தொழிற்சாலைகள் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கல்வித் துறையிலே அப்படித்தான் இருக்கிறது. உண்மையிலே வகுப்புவாதம் ஒழிந்துவிடவில்லை. உதாரணமாக இன்றைக்கு கந்தநேரி கிராமம் புள்ளிக்கொண்டான் கிராமங்களையும் கவனித்தால் அங்கு வகுப்புவாதத்தை ஒழிப்பதற்கு சரியான திட்டம் ஒன்றுகூட இல்லை. திட்டம் இருந்தாலும் அதை அமுல் நடத்த சர்க்கார் தவறிவிட்டது, எஸ். ஆர். முனுசாமி ஏன் அப்படி குழப்பம் பண்ணிக்கொண்டிருக்கிறாரே என்று சொல்லலாம். ஆங்காங்குள்ள கொந்தளிப்பை எத்தனை தடவை எடுத்துக்கட்டினாலும், அங்கங்கே இருக்கும் அதிகாரிகள் ஒத்துழைப்பதில்லை. தேனீர் கடையிலே என்ன நடக்கிறது ? உதாரணமாக கரடிகுடியில் தாழ்த்தப்பட்ட மக்கள் ஜாதி ஹிந்துக்கள் கடையில் தேனீர் குடிக்கிறார்களா என்று பார்த்தால் உண்மையிலே வகுப்புவாதம் ஒழிந்தபாடில்லை என்பது தெரியும். சர்க்கார் இதில் கவனம் செலுத்தவேண்டியிருக்கிறது என்று சொல்லவிரும்புகிறேன்.

* SRIMATHI A. S. PONNAMMAL : கனம் தலைவர் அவர்களே, நம்முடைய அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இங்கே பேசும்போது கனம் அங்கத்தினர் கூறினார் "வீடு கட்டிப் போட்டாலும்கூட 100-க்கு 90 வீடுகளில் ஹரிஜன மக்கள் குடியிருக்க முடியாமல் இருக்கிறார்கள் என்று கூறினார்கள். மாற்றுக் கட்சித்தான் அவர்களைப் பார்த்து அந்த வீடுகளில் ரிப்பேர் ஆகிவிட்டாலும்கூட அங்கே நீங்கள் சென்று குடியிருக்க வேண்டாம். உங்களுக்கு சர்க்காரே அதைப் பழுதுபார்த்துக் கொடுக்கும்" என்ற அளவிற்கு அவர்களிடத்தில் இம்மாதிரி தப்பான கருத்தை அவர்களுடைய மனதிலே ஏற்படுத்திவிடுகிறார்கள். அதன் காரணமாகத்தான் குடியேறிய வீடுகளில் பழுது பார்க்க முடியாத நிலைமையில் இருக்கின்றன. எனக்கு முன்பு குடியரசு கட்சி சார்பாக பேசிய அங்கத்தினர் ஒருவர் அவருடைய கருத்தைச் சொன்னார்கள். உள்ளதும் போச்சு நொள்ளைக் கண்ணா அதுவும் போச்சு அரோகரா......என்ற பழமொழி உண்டு.

14th March 1961] [Srimathi A. S. Ponnammal]

இதுபோன்று ஒன்றும் செய்யவில்லை செய்யவில்லை என்று சொல்லிக் கொண்டே இருப்பது நல்லதல்ல. அமைச்சரவையும், மத்திய சர்க்காரில் இருக்கக்கூடியவர்களும் ஹரிஜனங்களுக்கு எவ்வளவோ காரியங்கள் செய்திருக்கிறார்கள் என்று கிராமத்திலேகூட கூறுகிறார்கள்.

ஜாதி ஹிந்துக்களுக்கு வரவேண்டிய பணத்தை ஹரிஜனங்களுக்கு மாடு வாங்குவதற்குக் கொடுத்துவிடுகிறார்கள் என்றெல்லாம் மற்றவர்கள் கூப்பாடு போட்டுக்கொண்டிருக்கும்போது ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்த அங்கத்தினரே ஒன்றும் செய்யவில்லை என்று பேசிக்கொள்வது நல்லதல்ல என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். வகுப்புவாதம், ஜாதித் துவேஷம் இன்னும் ஒழியவில்லை என்று குறிப்பிட்ட கனம் அங்கத்தினருக்கு நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன், அவர்களுடைய தொகுதியில் இன்னும் ஒரு பிரச்னையும் தீரவில்லையென்றால் அந்தப் பகுதியில் இருந்து வந்திருக்கும் அங்கத்தினர் ராஜினாமா செய்துவிட்டு வெளியேறுவதுதான் பொறுத்தம் என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எந்தெந்த பொது இடங்களில் அவர்கள் தொகுதியில் உள்ள மக்களை அழைத்துச் சென்றபோது அவர்கள் தடுத்து நிறுத்தப்பட்டார்கள் என்று தெரியவில்லை. எனவே அவர்கள் குறிப்பிட்ட குறை அவர்களைத்தான் சாரும் என்பதை நான் சுட்டிக்காட்ட ஆசைப்படுகிறேன். எங்கு ஹரிஜன மக்கள் செல்ல முடியவில்லையோ அங்கு அவர்களை அழைத்துக்கொண்டு போய் சம வாய்ப்பை ஏற்படுத்திக்கொடுப்பது அந்தந்த தொகுதி அங்கத்தினர்களின் கடமையாகும். அடுத்து அமைச்சர் அவர்களுக்கு நான் கூறிக்கொள்ள விரும்புவது என்னவென்றால் ஹரிஜனங்கள் கோரக்கூடிய எல்லாக் குறைகளையும் கவனிக்கப்பட வேண்டுமென்றால் கதர் போர்ட் மின்சார போர்ட் என்று அமைக்கப்பட்டிருக்கிறதே அதுபோல் தனியாக ஒரு போர்ட் ஹரிஜனங்கள் நலனுக்காகவும் இன்னும் இதர பின்தங்கிய மக்களின் நலனுக்காகவும் தனியாக ஒரு போர்ட்டை அமைத்து அதன் மூலமாக எல்லா காரியங்களையும் செய்தால் இன்னும் தீவிரமாக காரியங்கள் நடைபெறும் என்று நம்புகிறேன்.

வீடுகள் கட்டுவதற்கு 750 ரூபாய் என்று இருந்ததை இந்த ஆண்டிலிருந்து ஆயிரம் ரூபாய் என்று உயர்த்தியதற்கு கனம் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். பாராட்டுவதோடு மட்டும் அல்லாமல் வீட்டு மனையை வாங்கிக் கொடுப்பதற்காக 20 ஆயிரம் குடும்பங்களுக்கு 10 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பணம் போதாது என்று நான் கருதுகிறேன். காரணம் என்னவென்றால் வீட்டு அடிமனை இல்லாமல் அங்கு மக்கள் எல்லா ஜில்லாக்களிலும் மிகவும் நெருக்கடியான நிலைமையில் இருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது ஹரிஜன மக்களுக்கு வீட்டு அடிமனை இல்லை என்ற குறை நீங்குவதற்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் பணம் அதிகமாக ஒதுக்கி எங்கெங்கு வீட்டு அடிமனை வாங்கமுடியுமோ அதைச் செய்தால் ஹரிஜன மக்களுக்கு நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நகரசுத்தி தொழிலாளர்களுக்கு நாம் மூன்று லட்சம் ரூபாய் ஒதுக்கி அவர்கள் கூடையிலே மலத்தை அள்ளிக்கொண்டு போகாமல் கைவண்டியிலே எடுத்துக்கொண்டு போவதற்கு கைவண்டிகள் வாங்கிக் கொடுக்கப் போவதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப் பாராட்டுகிறேன். இருந்தாலும் அந்தப் பணம் போதாது. ஒருசில நகரசபை கார்பொரேஷனைச் சேர்ந்த பகுதிகளுக்குக்கூட இது போதாது. இன்னும் ஒரு ஆண்டு இரண்டு ஆண்டுகளுக்கு உள்ளாகவே நகரசுத்தி தொழிலாளர்களுக்கு பெருக்கும் வண்டியை வாங்கிக் கொடுக்கும் நிலை உருவாக வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள் மிகவும் மோசமான தொழிலைச் செய்து பிழைப்பிற்கு வழியில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சம்பளம் போதாத நிலைமையில் இருக்கிறது. அவர்களுடைய சம்பளத்தைச் சற்று உயர்த்தித் தரவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

லாண்ட் காலினிசேஷன் ஸ்கிம் என்று வகுத்து தரிசு நிலங்களில் குடியேறுவதற்கு சட்டம் போட்டு அதற்குப் பணம் ஒதுக்கியிருக்கிறும். எனனுடைய தொகுதியில் இரண்டு இடங்கள் இந்தத் திட்டத்தின்கீழ் கொண்டுவரப்பட்டுள்ளன. அங்கு இருக்கும் நிலங்கள் மேடாகவும் விவசாயத்திற்கு லாயக்கற்றதாகவும் இருக்கின்றன. உழுது. விதை விதைத்து அறுவடை செய்து அடிப்பது போன்ற எல்லாவிதமான விவசாய வேலைகளையும் செய்யக்கூடிய மல்டிபர்பஸ் டிராக்டர்களில் சிறிய யூனிட் ஒன்று வாவழிக்கப்போவதாக அறிகிறேன். ஒரு ஜில்லாவிற்கு ஒன்றோ இரண்டோ வைத்து எங்கெங்கே நிலக் குடியேற்றம் செய்யப்படுமோ அங்கே அனுப்பி நிலத்தை ஏற்படுத்தி நல்ல முறையிலே உற்பத்தியைப் பெருக்க வாய்ப்பு அளிக்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களுக்குக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

இதை விவசாய அமைச்சர் அவர்களிடம் கூறி வேண்டிய ஏற்பாடுகள் செய்வார்கள் என நம்புகிறேன். நானும் நான்கு வருடங்களாக ஹரிஜன மக்களுக்கு பொருளாதாரத் துறையில் நல்ல முன்னேற்றத்தை ஏற்படுத்தி கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறேன். அரசாங்கம் லைசென்ஸ் கொடுத்து தனியார்கள் நடத்தக் கூடிய மில்கள் போன்றவை களில் ஹரிஜன மக்களுக்கு அதிகமாக வேலை கொடுப்பதில்லை. சிபாரிசின் பேரில் ஒன்றிரண்டு பேர்களுக்கு மட்டும் கொடுக்கப் படுகிறது. ஆகவே, இதுபற்றி தொழில் அமைச்சர் இவர்களோடு கலந்து, மத்திய அரசாங் கத்தோடு கலந்தும் பேசி தனிப்பட்ட நபர்கள் எங்கெங்கு தொழில்கள் நடத்துகிறார்களோ, எங்கெங்கு அவர்கள் மில்ஸ் நடத்துகிறார்களோ அவ்விடத்தில் 25 சதவிகிதமாவது ஹரிஜன மக்களுக்கு வேலை கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் நாங்கள் லைசென்ஸ் கொடுப்போம் என்ற அடிப் படையில் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். (பெல்) பதவி உயர்வு கூட அப்படித்தான் இருக்கிறது. பீ.ஏ., எம்.ஏ. படித்து விட்டு உத்தியோகத்திற்கு வருகிறார்கள் ஹரிஜன மக்கள். ஆரம்பத்தில் அவர்கள் ஸ்லோவாக வேலை செய்வதாக எழுதி அதைப் பிரமாதப்படுத்தி உயர்வு கொடுக்கவேண்டுமென்று வரும்போது முன்பு அவர்கள் நன்கு வேலை செய்யவில்லை என்று கூறி உயர்வு கொடுக்க மாட்டோம் என்று சொல்கிற நிலையிருக்கிறது. தகுதியில்லாதவர்களுக்கு கொடுக்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆனால் முதலில் ஸ்லோ வாக இருந்தார்கள் என்று, பின்னர் அவர்கள் நன்கு வேலை செய்தும் கூட அவர்களுக்கு பதவி உயர்வு கொடுக்காமல் இருக்கக் கூடாது. ஆயிரத்தில் ஒருவர்தான் பீ.ஏ., எம்.ஏ. படித்துவிட்டு வருகிறார்கள் ஹரிஜன மக்கள். ஆகவே அவர்களுக்கு தக்கபடி பதவி உயர்வு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்து கொள்கிறேன்.

* **Sri P. S. ELLAPPAN**: தலைவர் அவர்களே இந்த ஹரிஜன மான்யத்தின் பேரில் பேசும்போது ஏழு நிமிடங்கள்தான் கொடுக்கப் பட்டிருக்கிறது. இதில் கூட, எங்கள் நிலைமை எப்படி இருக்கிறது என்று பாருங்கள். பாக்கியுள்ளவைகளுக்கு பத்து, பதினைந்து நிமிடங்கள் கொடுத்து விட்டு, யாரும் இல்லாவிடில் அரைமணி நேரங்கூட கொடுக்கப்படுகிறது. இது, தரித்திரமான சமாசாரம், நிறையச் சொல்ல வேண்டியிருக்கிறது. எல்லாவற்றையும் ஏழு நிமிடங்களில் சொல்லவேண்டுமென்றால் அது நடக்கக் கூடிய சமாசாரமா ? ஹரிஜனங்களுக்காக, நிறையப்பணம் ஒதுக்கப்படுகிறது. அதிகாரிகளும் போடப்பட்டிருக்கிறார்கள், " கற்பனையால் பாடுகிறேன், கண்ணீரும் கம்பலையும், சொற்பனத்துங்காணேன் என் செய்வேன் பராபரமே " என்று தாயுமானவர் பாடியிருக்கிறார்கள். அதேபோல் இங்கு நடப்பதும் கற்பனையே தவிர உண்மையில் ஹரிஜனங்கள் எப்படியிருக்கிறார்கள் ? எந்த நிலைமையில் இருக்கிறார்கள் ? எப்படி அவர்களை முன்னேற்றம் அடையச் செய்வது ? என்பது பற்றி ஒன்றையும் காணோம்.

**The Hon Sri P. KAKKAN**: அங்கத்தினர் அவர்கள், மாடுகள் வாங்கிக் கொடுப்பதையும், வீடுகள் கட்டிக் கொடுப்பதையும் அறிவார்கள். அவரே ஒரு ஹாஸ்டல் நடத்துகிறார்கள். அங்கு பிள்ளைகள் படிப்பதையும்

14th March 1961] [Sri P. Kakkan]

அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுப்பதையும் அவர்களே பார்த்திருக்கிறார்கள்; அப்படியிருக்க, எல்லாம் கற்பனை என்று சொல்வது தவறு.

SRI P. S. ELLAPPAN : மாடுகள் வாங்கிக் கொடுக்கும் விஷயத்தைப் பற்றிச் சொன்னால், அது பரிதாபகரமான விஷயம். ஒரு வீடு கட்டிக் கொடுத்தால் அவர்கள் மூன்று மாதத்தில் வெளியேறவேண்டியிருக்கிறது. ஏனெனில் அது அதற்குள் இடிந்து போய்விடுகிறது. ஹரிஜனங்களுக்காக, பணம் ஒதுக்குவதிலும், சட்டங்கள் போடுவதிலும் நமது சர்க்கார் மாதிரி எந்த மாகாண சர்க்காரும் கிடையாது ! ஆனால் நிர்வாகந்தான் கவனிப்பாரற்று இருக்கிறது. நானும் இதுபற்றி ஒவ்வொரு வருடமும் சொல்லிக் கொண்டே வருகிறேன். ஆனால், நான் ஏதோ பாடம் படிப்பதாகத்தான் நினைக்கிறார்களே தவிர, அந்தக் குறைகளை நிறைவேற்றுவதில் கவனம் செலுத்துவது கிடையாது. ஹரிஜன வாரக் கொண்டாட்டம் என்று மாதா மாதம் 30-ம் தேதி அன்று மஹாத்மா நினைவு நாளாக வைத்து நடத்துகிறார்கள். மஹாத்மா அந்த சமூகத்திற்காக எப்படி வேலை செய்யவேண்டுமென்று கூறினார் ? என்பதை விளக்க, இந்த விழா கொண்டாடப்படுகிறது. ஆனால், இவைகள் சேரிகளில்தான் நடக்கிறது. நான் சொல்வது என்னவென்றால் இதை, கிராமங்களில் படித்தவர்களிடையே மேல்ஜாதியென்பவர்களிடையே போய் சொல்ல, நீங்கள் ஹரிஜனங்களை தப்பாக நினைக்கக் கூடாது, எல்லோரும் நம்மைப் போன்றவர்கள்தான், அவர்களை மோசமாக நடத்தக்கூடாது என்றெல்லாம் சொல்லி அவர்களைத் திருத்த வேண்டும். ஆனால் கூட்டம் போடுவது சேரியில் சேரியில், அவர்களிடம் இதைப்பற்றி என்னவென்று சொல்வது ? ஒரத்தி என்றவிடத்தில் டிசம்பர் 30-ம் தேதி ஒரு விழா நடத்தினார்கள். அங்கு விழா நடந்தபோது, ஹரிஜனங்கள் வந்துவிடுவார்களோ என்று நினைத்து, அங்குள்ளக் கோவில்களை சாத்தி தாழ்ப்பாள் போட்டுவிட்டுப் போய்விட்டார்கள். பின்னர் சேரியில் வைத்து நடத்தினார்கள். அங்கு என்னத்தான பேசச் சொன்னார்கள். நான் என்னபேசுவது ? எங்களால்தான் வேதம் உண்டாயிற்று. எங்கள் பெருமையைப்பற்றி நாங்களா பேசுவது ? ஆகவே, நான் சொல்வது, இந்த ஹரிஜன வாரக் கொண்டாட்டத்தை சேரியில் வைக்க வேண்டாம். பின்னர், கருப்புப் பிள்ளை, செகப்புப் பிள்ளை என்று படம் போட்டு முன் கருப்பாகவிருந்தவன் இப்பொழுது செகப்பாக மாறி வருகிறான் என்றெல்லாம் போட்டு எங்களை எவ்வளவு தூரம் கேவலப்படுத்த முடியுமோ அப்படியெல்லாம் வால்போஸ்டர்கள் போடுகிறார்கள். அவையெல்லாம் வேண்டாம். " எண்ணெய் செலவாயிற்றே ஒழிய பிள்ளை பிழைக்கவில்லை " என்ற பழமொழியைப் போல் ஹரிஜனங்கள் பேரில் கோடிக்கணக்கில் பணம் செலவு செய்யப்பட்டும் பிரயோஜனம் ஏற்படவில்லை. (மணியடிக்கப்பட்டது) பார்த்தீர்களா, மணியடித்து விட்டீர்கள். ஹரிஜனங்களுக்கு குடியிருப்பு மனை வழங்க வேண்டும். பத்து கிராமங்களுக்கு குடியிருப்பு மனை வழங்கவேண்டும் என்று சொன்னேன். இதுவரையில் அதைப் பற்றிப் பேச்சே இல்லை. ஆனால் அந்த மக்களை வெளியேறுங்கள் என்று சொல்லுகிறார்கள். அந்த நிலச்சொந்தக்காரர்கள். எல்லோரும், " எரிகிற வீட்டில் பிடுங்கினது ஆதாயம் " என்று நினைத்துக் காரியம் செய்கிறார்கள். வெள்ளத்தால் எங்கள் தாலுகா பட்ட பாட்டை சொல்ல முடியாது. குடிசைகள் எல்லாம் இடிந்து விழுந்திருக்கின்றன. அவர்கள், குருவிக்காரர்கள் மாதிரி தெருவில் நிற்கிறார்கள். ஆகவே அதிகாரிகளிடம் சொல்லி எங்கெங்கு ஹரிஜனமக்கள் அவஸ்தைப் படுகிறார்களோ, அங்கங்கு நன்கு விசாரணை செய்து அவர்களுக்கு வேண்டிய உதவிகள் எல்லாம் கொடுக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்து, அவர்கள் க்ஷேமமாக இருக்க, வேண்டியது செய்ய வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். ஏழு நிமிடங்களையும் ஏழு யுகங்களாக நினைத்து என் பேச்சை முடிக்கின்றேன்.

* SRI R. KANDASWAMY : தலைவர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். ஹரிஜன மான்யக் கோரிக்கை மீதுள்ள விவாதத்தை சாயங்காலம் வரை வைத்துக்கொள்ளலாம் என்று கருத்திருமன் அவர்கள்

[Sri R. Kandaswamy] [14th March 1961

சொன்னதற்கு, ஒரு மணிநேரம் நீட்டி வைத்துக்கொள்ளலாம் என்று எதிர் கட்சித் தலைவர் வி. கே. ராமஸ்வாமி முதலியார் அவர்கள் சொன்னார்கள், எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு ஆசைதம்பி அவர்களும், அன்பழகன் அவர்களும் அசையாமல் இருந்து கொண்டிருந்தார்கள். ஏழு நிமிடங்களில் எங்கள் ஹரிஜனங்களின் கஷ்டங்களை எப்படி கூறுவது என்று எல்லப்பன் அவர்கள் சொன்னார்களே, இப்படிச் செய்தது வி. கே ராமஸ்வாமி முதலியார் அவர்கள்தான் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இதிலிருந்து எதிர்கட்சிக்காரர்கள் ஹரிஜன முன்னேற்றத்தில் எவ்வளவு ஆர்வம் காட்டு கிறார்கள் என்பது தெரியும். அடுத்தபடியாக, கடந்த ஆண்டை விட இந்த ஆண்டு ஹரிஜன முன்னேற்ற விஷயத்திலும் பிற்போக்கு மக்கள் விஷயத்தில் கூடுதல் பணம் ஒதுக்கி வைத்திருப்பதைப் பார்த்து சர்க்காரையும் அமைச்சர் அவர்களையும நான் பாராட்டுகிறேன். ஹரிஜன டயரக்டர் அவர்கள் ஹரிஜன மக்களுக்கும், பிற்பட்ட மக்களுக்கும் காலாகாலத்தில் ஸ்காலர் ஷிப்ஸ் கொடுத்ததற்கு வேண்டி அவர்களுக்கு நான் எனது நன்றியைத் தெரிவித்துககொள்கிறேன்.

10-30 a.m. அது மட்டுமல்ல, எனக்கு முன்பு பேசிய எதிர்கட்சித் தோழர்கள், காலனி கட்டுவதில் 100-க்கு 99 பேர்கள் காலனிகளுக்குப் போவதில்லை என்று சொன்னார்கள். அவர்கள் சரியாகப் போய் பார்த்திருக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். அவ்விதம் சரியாக பார்க்கவில்லை என்றால், ஸ்ரீமதி பொன்னம்மாள் அவாகள சொன்னது மாதிரி, அது அவர்கள் குற்றம் தான், வேறு யாருடைய குற்றமும் அல்ல. என் தொகுதியைப் பொறுத்த வரையில், நல்ல வீடுகளை கட்டியிருக்கிறார்கள். அருமையான வீடுகளை 750 ரூபாயில் கட்டி, அதை நாங்களும் கனம் அமைச்சர் அவர்களும் அடிக்கடி திறந்து வைத்துக்கொண்டிருக்கிறோம். அந்த வீடுகள் எல்லாம் நன்றாக இருக்கின்றன. குறிப்பாக கருவேப்பம்பட்டி, மேலியபள்ளி, ஆனங்கூர், சாணார்பாளையம் போன்ற இடங்களில் கட்டப்பட்ட வீடுகள் மிகவும் நன்றாக இருக்கின்றன. மேலும் இப்போது 1000 ரூபாய்க்கு வீடுகளை கட்டுவதற்கு நடவடிககை எடுத்துவருவதாகத் தெரிகிறது. அதற்கான திட்டமும் உருவாகி வருவதாக தெரிகிறது, அது சீக்கிரமாகவே அமுலுக்கு வரும் என்று நம்புகின்றேன் ஆகவே எதிர்காலத்தில் இந்த மக்க ளுக்கு இப்போது ஒதுக்கியிருக்கின்ற $3\frac{1}{2}$ கோடி ரூபாய் போதாது, கூடுத லாக ரூபாயை ஒதுக்கி ஹரிஜன வேலைகளை துரிதமாக நடத்த வேண்டும் என்று இந்த சபையின் மூலமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஜில்லாக் கலெக்டர்களை நியமனம் செய்வதில், ஹரிஜன வெல்பேர் ஆபிஸர்களாக பணியாற்றியவர்களாக இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்க வேண்டும். அவ்விதம் இருந்தால், ஹரிஜனங்களுககு எந்த விதத்தில் நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொடுப்பது, அவர்களுடைய காரியங் களை எந்தெந்த முறையில் உடனடியாக செய்து கொடுக்க வேண்டும் என்பதைப்பற்றி கலெக்டர்கள் அறிந்திருப்பார்கள். ஆகவே கலெக்டர்களாக நியமனம் செய்யப்படுபவர்கள் குறைந்தது ஒரு வருடமாவது, ஹரிஜன வெல்பேர் ஆபீஸர்களாக பயிற்சி பெறறிருக்க வேண்டும் என்று நிர் ணயிக்க வேண்டும் என்று இந்த சபையின் சார்பாக அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அது மட்டுமல்ல, ஹரிஜனங்கள் விஷயத்தில் இப் போது எப்படி முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது, 20 வருடங்களுக்கு முன் னால் எபபடியிருந்தது என்பதை கனம் எல்லப்பன், கனம் இருசப்பன் இவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும் முன்னால் எல்லாம் எந்த கமிட்டியிலும் இருக்காதவர்கள் இப்போது எத்தனையோ கமிட்டிகளில் இருந்து வருகிறார்கள். நாஸ்திகர்கள் என்று சொல்லப்படுபவர்கள் கூட கோவில்களை நிர்வகிக்கின்ற ஏரியா கமிட்டிகளில் எல்லாம் இருந்து வருகிறார்கள், என்னைக் கூட ஒரு ஏரியா கமிட்டியில் போட்டி ருக்கிறார்கள். அது மட்டுமல்ல, ஹரிஜனங்களாக இருக்கக்கூடியவர்கள், கலெக்டர்களாக இருக்கிறார்கள், டெப்யூடி கலெக்டர்களாக இருக்கிறார்கள், எம், பி., பி. எஸ். படித்தவர்கள் இருக்கிறார்கள், இன்னும் பட்டம் பெற்றவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். இதையெல்லாம் சிந்தித்துப்பார்த்தால் கனம் எல்லப்பன், கனம் இருசப்பன் போன்றவர்கள்

14th March 1961] [Sri R. Kandaswamy]

இதை கொஞ்சம் கூட குறை கூற முடியாது. முன்னால் நந்தனார் இனத்தவராக இருந்தாலும் சரி, திருப்பாணர் இனத்தவராய் இருந்தாலும் சரி கோவிலுக்குள் போக வேண்டும் என்றால் போக முடியாது, இன்றைக்கு நம்முடைய காங்கிரஸ் ஆட்சியில் எந்தவிதமான உத்தரவும் இல்லாமல் கோவிலுக்குள் போகலாம். ஏதோ தீண்டாமை இருந்து கொண்டிருக்கிறது என்பதைப்பற்றி சொன்னார்கள். இருபது ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த சில சம்பவங்களைப்பற்றி சொன்னால் இப்போது எந்த அளவுக்கு நிலைமை மாறியிருக்கிறது என்பது தெரியவரும். அப்போது நடக்கக்கூடிய பார்ட்டியில் பக்கத்தில் பொப்பிலி ராஜா, பனகல் ராஜா, போன்றவர்கள் இருப்பார்கள். அப்போது என்னை கடைசியில் எம். ஸி. ராஜா பக்கத்தில் கொண்டு உட்கார வைத்தார்கள். அந்த நிலைமையை எண்ணிப் பார்த்தால் வெட்கம் இல்லையா என்று கேட்கவிரும்புகின்றேன். இன்றுள்ள நிலைமையை எண்ணிப்பார்த்தால், என் போன்றவர்கள் எந்தக் கூட்டத்திலும் முன்னால் இருக்கின்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே செய்த நன்றியை நாம் எந்தக் காலத்திலும் மறந்து விடக்கூடாது....
"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு." என்ற வள்ளுவர் வாக்குப்படி, நாம் எப்போதும் செய்த நன்றியை மறக்கக்கூடாது. வேண்டு மென்றால் சட்டசபையில் ஏதோ பேசிவிளாசி விட்டார்கள் என்று சொல்வதற்காக வேண்டுமென்றால் எதையாவது சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்றுதான் நான் நினைக்கிறேன். ஆகவே இனிமேலாவது கனம் எல்லப்பன் கனம் இருசப்பன் போன்றவர்கள் இம்மாதிரியாக அரிஜனங்களுக்கு வித்தியாசம் காண்பிக்கப்படுகிறது என்று சொல்வது சரியல்ல. அதற்கு மாறாக நல்லகாரியங்களை செய்திருப்பதற்காக நன்றியாகவும், ஏதாவது குறைகள் இருந்தால் அதையும் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்...

SRI P. S. ELLAPPPAN : தலைவர் அவர்களே.......

TEMPORARY CHAIRMAN (SRI V.K, KRISHNAMURTHY) : நீங்கள் இப்போது ஒழுங்குப்பிரச்னை ஒன்றை எழுப்பித்தான பேசமுடியும்....

SRI P. S. ELLAPPAN : ஆம், ஒழுங்குப் பிரச்சனை மீதுதான் பேசுகிறேன். நான் மதுராந்தகம் பகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட் ஒரு பிரதிநிதி. நானும் மந்திரியுமாக கோவிலுக்குப் போனபோது மூலஸ்தானத்திற்குப் போக முடியாது என்று மறுத்துவிட்டார்கள். அதை எண்ணிப்பார்க்க வேண்டும். நான் சும்மா எதையுமே சொல்லவில்லை, எனக்கு அரிஜனங்களின் சீர்திருத்தத்தைப் பற்றி நன்றாகத் தெரியும்.....

(குறுக்கீடு)

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURLHY) : இதில் ஒழுங்குப்பிரச்சனை ஒன்றும் இல்லை, கனம் கந்தசாமி அவர்கள் தொடர்ந்து பேசலாம்.

SRI R. KANDASWAMY : இந்த முறையில் ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கி அரிஜனங்களுக்காக பல வேலைகளை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரை ஒன்றிரண்டு வார்த்தைகளை கூற விரும்புகிறேன். எங்கள் தொகுதியில் திரிச்சங்கோட்டில் மழை பெய்யவில்லை, எல்லா இடங்களுக்கும் மழை பெய்திருந்தும் எங்கள் இடத்தில் மழை பெய்யவில்லை. எங்கள் துரதிஷ்டம் தானோ என்னவோ தெரியவில்லை. அதிலும் திருச்செங்கோடு, நாமக்கல், ராசிபுரம் போன்ற பகுதிகளில் அரிஜனங்கள் குடி தண்ணீர் இல்லாமல் மிகவும் கஷ்டப்படுகின்றார்கள். அவர்களுக்கு கிணறுகளை அதிகமாக வெட்டுவதற்கும் குடிதண்ணீர் வசதியை பெருக்குவதற்கும் அதிகமான அளவில் பணம் ஒதுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேட்டூர் காவேரி தேக்கத்திலிருந்து வெள்ளப்பெருக்கு ஏற்படும் காலத்தில் டதினாறு கண் வழியாக உபரியாக ஓடுகின்ற தண்ணீரை வாய்க்கால் வழியாக வெட்டி, பொன்னியாறில் கொண்டு விட்டு, அதிலிருந்து கொன்னியாறில் கொண்டு வந்து விட்டால், அதன் மூலம் சுமார் 56 ஆயிரம் ஏக்கர்கள் பாசன வசதி பெற முடியும்.

[14th March 1961

THE HON. SRI P. KAKKAN: இப்போது அரிஜன மான்யக் கோரிக்கையை பற்றி மட்டும் பேசுங்கள்.

SRI R. KANDASWAMY: இதுவும் ஹரிஜன விவசாயிகளையும் வேளாள பெருங்குடி மக்கள் விஷயம்தான். இவ்விதம் கொண்டுவருவதாக இருந்தால அங்குள்ள அரிஜனங்கள் நல்ல பலன் அடைய முடியும். அதோடு அங்குள்ள 46 ஏரிகள் நிரம்புவதற்கும், அதன் மூலம் அங்குள்ள கிணறுகள் எல்லாம் தண்ணீர் நிறைந்து அதன் மூலம் அந்தப் பக்கத்திலுள்ள எல்லா அரிஜன மக்களும் வேளாள குடிமக்களும் இதை உடனடியாக பலன் அடைவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொண்டு மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேன். இத்தனை நேரம் பேசுவதற்கு வாய்ப்புத் தந்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI T. V. SANNASI: அன்புமிக்க தலைவர் அவர்களே, இந்தக் கொடுமைக்குட்பட்ட சமூகத்தைப்பற்றி பேசுவதற்குக்கூட நேரம்கூட குறைவாகத்தானிருக்கிறது. இந்த கோரிக்கையைப்பற்றி கொஞ்சம்கூட குறை சொல்ல முடியாது. இப்போது அரிஜனங்களுக்காக வேலை செய்வதைப் போனறு சென்ற காலத்தில் எந்த அரசியல் கட்சியும் வேலை செய்ததில்லை. முன்னால் சேரர், சோழர், பாண்டியர் காலத்தில் எல்லாம் கல்வி அதிகமாக பரவியிருந்தது என்றெல்லாம் பெரிய படித்த நண்பர்கள், கூறுகிறார்கள். அக்கல்வியானது மன்னர்களை பாராட்டிப் பரிசு பெறும் அளவுக்குத்தான் இருந்து வந்ததே தவிர சேரிகளில் உள்ள பாமர மக்களைத் திருத்துவதற்குப் பயன்படவில்லை. பெரும்பாலும் காங்கிரஸ் கட்சிக்கு எதிர்ப்பு இருப்பதே இம்மாதிரி சேரிகளிலுள்ளவர்களுக்கு கல்வியைப் பரப்பி சீர்திருத்தி வருகிறார்களே என்ற வருத்தம் தானே என்னவோ பல கட்சியிலுள்ளவர்களும் பல விதத்தில் எதிர்த்துக்கொண்டே இருக்கிறார்கள். இதுவன்றி எங்களிலும் சிலரைப் பிடித்து எதிர்க்கச் சொல்கிறார்கள் நிற்க இது மிகவும் கொடுமையாக இருக்கிறது. சர்விஸ் கமிஷனில் எங்களில் ஒரு மெம்பர் இருக்கவேண்டும் என்று பல தடவை கேட்டிருக்கிறோம். இதுவரை அக் கோரிக்கை நிறைவேற்றப்படவில்லை. அதற்கான நேரம் இல்லையோ என்னவோ தெரியவில்லை

இரண்டாவதாக, மதராஸ் கார்ப்பரேஷனில் அரிஜனங்களுக்கு ஒரு தடவை மேயராக வருவதற்கு வாய்ப்புக் கொடுக்கின்ற ஒரு ஸிஸ்டம் மாதிரி எல்லா முனிசிபாலிட்டிகளிலும், எல்லா பஞ்சாயத்துக்களிலும் இருக்கவேண்டும். வோட்டிங் பலத்தாலதான் வரவேண்டும் என்று இருந்தால் அவ்விதம் எங்களில் யாரும் வரமுடியாது என்பதை கண் கெட்டவர்கள் கூட ஒத்துக்கொள்வார்கள்.

மேலும் அசெம்பிளியில் இருக்கின்ற அளவுக்கு அரிஜனங்களுக்கு மேல் சபையில் பிரதிநிதித்வம் இல்லை. அதையும் கவனிக்கவேண்டும். தியாகிகளுக்கு நிலங்கள் கொடுக்கும் விஷயத்தில் அவர்களுக்கு கொடுக்கப்படும் நிலங்களை விற்பதற்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அம்மாதிரி இவர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்று சொல்ல நான் முன் வரவில்லை. ஆனால் எவ்வளவோ பிற கிராமங்களில் அரிஜனங்களுக்கு நிலங்களை அஸைன் பண்ணிக்கொடுக்கிறார்கள். அதை 10 வருடங்களுக்கு விற்கக் கூடாது என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் இவ்விதம் பிற கிராமங்களில் கொடுக்கும் நிலங்களில் பெரும்பாகம் பக்கத்தில் ஜாதி இந்துக்களால் சேதப்படுத்தப்பட்டு விடுகிறது. இதனால் இப்படி பலவித தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. இம்மாதிரி நஷ்டப்படுபவர்களுக்கு வெளியூரிலிருக்கும் நிலங்களை விற்று உள்ளூரிலேயே நிலங்களை வாங்குவதற்கு வசதி செய்துகொடுத்தால் நல்லதாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இப்போது ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை சுத்தமாக போதாது என்றுதான் சொல்லவேண்டும். இந்த அளவுக்கு இரண்டு, மூன்று மடங்கு பணம் ஒதுக்கவேண்டும். நாட்டில் எவ்வளவோ சீர்திருத்தம்

மலிந்துவிட்டது என்று மேடை அளவுக்கு பேசிக்கொண்டிருக்கலாம். ஆனால் நாட்டில் உயர்ந்த பட்டப்படிப்பு படித்தவர்கள் கூட ஜாதியில்தான் உயர்ந்தவன் என்ற தலைகனத்தோடு தான் இருந்து வருகிறார்கள். அவர்கள் எங்கள் சமூகத்தின் பால் நல்லெண்ணம் கொள்ளவேண்டும். எங்கள் பக்கத்திலும் M. A. படித்தவர்களும் இருக்கிறார்கள், இருந்தாலும் அவர்களைக் கண்டவுடன் எங்களவர்கள் காலில் கிடக்கும் செருப்பைக் கழற்றிக் கையில் எடுத்துத்தான் மரியாதை செய்யவேண்டும். கழுத்தில் மாலையைப் போட்டுக்கொண்டு காலிலிருந்த செருப்பைக் கழட்டிப் பயன்படுத்துவது போல் அல்ல இது. உயரினத்தவரைக் கண்டால் தாழ்ந்த இனம் உடனே செருப்பைக் கழற்றிக் கொள்ளக்கூடிய முறை இந்நிலைமைதான் இன்னும் இருந்துகொண்டிருக்கிறது. அரிஜனங்களுக்கு வருடம் ஒன்றுக்கு மட்டுமல்ல. மாதம் ஒன்றுக்கு 10 கோடி ரூபாய் செலவு செய்து சீர்திருத்தம் செய்தாலும், முன்னேற முடியாது, நாட்டில் கற்றவர்களுடைய மனமும் ஓரளவுக்கு திருத்த வேண்டும். ஜாதி இழுக்கு என்பதை அவர்களுடைய உள்ளத்திலேயிருந்து துடைத்தால் தான் இந்த சமூகத்தில் சீர்திருத்தம் ஏற்பட முடியும். அதுவரையில் இந்த சமூகம் முன்னேற முடியாது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உயர்ந்த சமூகத்திலுள்ளவர்கள் சற்று இறங்கி வந்து இடம் கொடுக்கவேண்டும். நம்முடைய மந்திரி சபையைப் பொறுத்த வரையில் தமிழகத்தில் எல்லோரும் புகழக்கூடிய வகையில் இந்த அமைச்சரவை இடம் பெற்றிருக்கிறது. இதுவரை எந்த அமைச்சரவையும் பெற்றிருக்காத அளவுக்கு பெருமையை இந்த அமைச்சரவை பெற்றிருக்கிறது. இன்னமும் சொல்லுகிறேன். இப்போது ஹரிஜன இலாகாவை ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்த அமைச்சர் அவர்கள் நல்ல முறையில் நிர்வகித்து வருகிறார்கள். இதுவரையில் இவரைப் போன்ற தியாக பரம்பரையைச் சேர்ந்த எந்த ஹரிஜன சமூகத்தவரும் இந்த இலாகாவை நிர்வகித்தது இல்லை. அறிவாளிகள், உயர்ந்த படிப்பு படித்தவர்கள் என்ற முறையில் இருந்திருக்கலாம். ஆனால் நமது அமைச்சர் அவர்கள் அறம், ஒழுக்கம், பொறுமை, சத்தியம் இவைகளை அடிப்படையாகக் கொண்டு சேவைசெய்து வருகிறார். எங்களுடைய சமூகம் பிழைக்கவேண்டுமானால் இந்த காங்கிரஸ் ஆட்சி உலகம் இருக்கும்வரையில் நிலைத்து இருக்கவேண்டும்—அதற்காக இந்த சமுதாயம் அதுவரையில இழிவாக இருக்கவேண்டும் என்று சொல்லவில்லை. இந்த இழிவு போகவேண்டுமானால் அது காங்கிரஸ் அரசாங்கம் இருந்தாலதான் போகும்.

ஜாதிப்பூசல் இன்னமும் இருந்துகொண்டிருக்கிறது. வெள்ளை வேஷ்டி கட்டிக்கொண்டுபோனால் படித்தவர்கள் பறைப்பயலே, சக்கிலிப்பயலே என்று சொல்வதற்கு பதில் இப்போது நந்தன் பரம்பரை என்று நாசூக்காகச் சொல்லுகிறார்கள். இந்தமாதிரி சொல்லுவதால் மனம் ரொம்பவும் கஷ்டப்படுகிறது. ஜாதி ஒழிய தாழ்த்தப்பட்டவர்களின் நிலை திருத்தி அமைக்கப்படவேண்டும். பணம் கொடுத்தால் மாத்திரம் பிரயோசனம் இல்லை. 750 ரூபாய் போட்டு வீடு கட்டிக் கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதில் பெரும்பாலும் காண்டிராகட் என்ற சனியன் குறுக்கிட்டு பாதி விழுங்கி விடுகிறது. அவர்களைக் கேட்டால் நாங்கள் என்ன செய்கிறோம், எங்கள் செலவு, மத்தியில் உள்ளவர்கள் செலவு எல்லாம் சேர்த்துத் தானே கொடுக்கிறார்கள், நாங்கள் என்ன செய்வது என்று கேட்கிறார்கள்.

ஹாஸ்டல்களை அரசாங்கம் எடுத்துக்கொள்ளக்கூடாது என்று பலபேர்கள் சொன்னார்கள். அவ்வாறானால் சட்டசபை மெம்பராக இருந்தால் மட்டும் ஹாஸ்டல் வைத்திருக்கலாமே தவிர மற்றவர்கள் வைத்துக்கொள்ளக்கூடாது என்று உத்திரவுபோட்டு மற்றவைகளை அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri A. GOVINDASAMY :** அவைத்தலைவர் அவர்களே, ஆதித் திராவிடர் மானியத்தின்மீது நான் கொடுத்திருக்கிற வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 1950-51-ம் ஆண்டிலிருந்து 1960-61-ம் ஆண்டிலே பார்க்கும்போது 69 லட்சம் ரூபாயாக இருந்தது 355 லட்சமாக உயர்ந்திருப்பது கண்டு உண்மையிலேயே பெருமை

படக்கூடிய செய்திதான். ஆனால் ஜனத்தொகை அடிப்படையிலும், நிலைமை அடிப்படையிலும் பார்க்கும்போது, ஆதிதிராவிடர்களின் பொருளாதார நிலைமையையும், வாழ்க்கை நிலையையும் பார்க்கும்போது இப்போது அதிகரித்திருக்கும் தொகையும் போதாது என்பது எனது தாழ்மையான கருத்து. நிறைய செலவு செய்திருக்கிறோம். ஆனால் செய்த செலவு கடலிலே கரைத்த பெருங்காயமாகத்தான் ஆகியிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 15 கோடி ரூபாய் வரையில் செலவு செய்யப்பட்டதானது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 20 கோடியாக உயரும் என்று சொல்லப்படுகிறது. இந்தத் தொகை பூராவும் ஆதித்திராவிடர்களுக்குப் போய்ச் சேருகிறதா என்றால் இடையில் உள்ள தரகர்களுக்கும், காண்டிராக்டர்களுக்கும்தான் போய்ச் சேருகிறதேயல்லாமல் ஆதித்திராவிடர்களுக்குப் போய்ச் சேருவது கொஞ்சம்தான் என்பதை இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

ஆதித்திராவிட பள்ளிகளில் படிக்கிற பிள்ளைகளுக்கு மதிய உணவுக்காக 15 நயா பைசா ஒதுக்கியிருக்கிறார்கள். 15 பலம் சாதமும், 10 பலம் சாம்பாரும், காய்கறியும், போடவேண்டும். 15 நயா பைசாவில் போட முடியுமா என்றால் முடியாது. குறைந்தது 25 நயா பைசாவாகவாவது மாற்ற வேண்டும். 15 நயா பைசா என்று சொல்லும்போதிலும் முழுத் தொகையையும் உணவிற்காகவே செலவழிப்பதில்லை. இடையில் இருக்கக்கூடிய காண்டிராக்ட்காரர்கள் வேறு சாப்பிட வேண்டியிருக்கிறது. சேரியில் இருக்கும் பள்ளிகளுக்கான காண்டிராக்டை சேரிக்கு அப்பால் இருப்பவர்களுக்குக் கொடுத்தால் ஸ்டோர் வைக்க முடியவில்லை.

THE HON. SRI P. KAKKAN : காண்டிராக்ட் அநேகமாக ஹரிஜனங்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது.

SRI A. GOVINDASAMY : பெண் குழந்தைகளுக்கு ஆடைகள் வழங்கப்படுகிறது. வழங்கப்படுகின்ற ஆடை 5, 6 வயது குழந்தைகளுக்குத்தான் போதுமானதாக இருக்கிறது. 13 வயது உள்ள குழந்தைகளுக்கு இந்தச் சட்டையின் அளவு போதவில்லை. அதோடு பெண் குழந்தைகளுக்குக் கொடுத்துவிட்டு ஆண் குழந்தைகளுக்குக் கொடுக்காததால் அவர்களுக்கு ஏமாற்றத்தை அளித்து சங்கடம் ஏற்படுகிறது. ஆகையால் ஆண் குழந்தைகளுக்கும் கொடுக்கவேண்டும்.

மேலும், ஹரிஜன ஹாஸ்டல்களை எம்.எல்.ஏ-க்கள் நிர்வகிக்கிறார்கள். மண்டல காங்கிரஸ்காரர்கள் நிர்வகிக்கிறார்கள். அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு வேண்டியவர்களாக இருப்பதால் அதிகாரிகள் இவர்களை அடக்கி ஆள முடியவில்லை. தட்டிக்கேட்க முடியவில்லை. இவைகளையெல்லாம் அரசாங்கமே ஏற்றுக்கொள்ளவேண்டும். வளவனூரிலுள்ள ஹாஸ்டலில் 30 குழந்தைகள்தான் இருக்கிறார்கள். கனம் கக்கன் அவர்கள் அதை 50 ஆக உயர்த்தப்படும் என்று சொன்னார்கள். இடவசதி போதாமல் இருக்கிறது என்று இதை வேறுஇடத்திற்கு மாற்றப் பார்த்தார்கள். அந்த இடத்திற்குச் சொந்தக்காரர் ஒரு காங்கிரஸ்காரராக இருப்பதால் அந்த இடத்தை இன்னும் எடுத்துக்கொள்ளாமல் இருக்கிறார்கள். இப்போது உள்ள இடத்தில் ஒரு நாள் எலிப்புழுக்கைகள் சோற்றில் கலந்து குழந்தைகள் மயக்கம் போட்டு விழுந்தார்கள் என்பதும் கனம் அமைச்சருக்குத் தெரியும் என்று நான் நினைக்கிறேன்.

ஆதித்திராவிட மக்களுக்கு மனைக்கட்டுகள் வழங்கிவருகிறோம். விதிப்படி நடவடிக்கை எடுப்பதிலே 1956-லிருந்து தாமதம் இருக்கிறது. அப்போது முதற்கொண்டு மனைக்கட்டு வழங்குவதற்காகப் போராடி வருகிறோம். இன்னும் கிடைக்கவில்லை. அதேபோல சாலையாம்பாளையம், தொந்திரெட்டிபாளையம், பனையபுரம், மதுரப்பாக்கம், பகண்டை, மண்டகப்பட்டு போன்ற இடங்களில் மனைக்கட்டுகள் வழங்குவதில் காலதாமதம் ஆகிறது. நில ஆர்ஜிதம் செய்வதிலே ஹரிஜன நல இலாகாவும், கலெக்டரும் ஒத்துக்கொண்டாலும் ஹெல்த் ஆபீஸர் அவர்களால் தகராறு ஏற்படுகிறது.

14th March 1961] [Sri A. Govindasamy]

மகசூல் இருந்தால் எடுக்கக்கூடாது என்ற காரணத்தினால் வேறு கால தாமதம் ஏற்படுகிறது. வீடு கட்டும் திட்டத்தில் இருக்கிற குறையைப்பற்றிச் சொல்லும்போது, ஆதித்திராவிட மக்களுக்கு 1,000 ரூபாயல்ல 3,000 ரூபாய் கொடுத்தாலும் அது பலன் அளிக்காது என்பது எனது தாழ்மை யான அபிப்பிராயம். வீடு கட்டிக்கொள்வதற்கு பணம் கொடுக்கிறீர்களே தவிர மராமத்து செய்ய, மெயின்டினன்ஸுக்கு ஏதாவது ஒதுக்குகிறீர்களா. கோண்டூர் என்ற இடத்தில் ஹரிஜனங்களுக்காக வீடு கட்டியிருக்கிறார்கள். வீட்டுக்குப் போவதற்குள் வீடுகள் சரிந்திருக்கின்றன என்பதை அமைச்சர் அவர்கள் பார்க்கட்டும், காமராஜ் நகர் என்ற பேரால் ஒரு ஆதித் திரா விட மக்களுக்காக காமராஜ அவர்களே அஸ்திவாரக் கல் நாட்டி அவர் களே திறந்து வைத்தார்கள். அந்த வீடுகள் இன்றைய தினம் இடிந்து விழுந்திருக்கின்றன. எங்கள் கட்சியைச் சேர்ந்த நடராஜன் அவர்களும் ஆநந்தன் அவர்களும் போய்ப்பார்த்து ஒரு ஓட்டைக் கையில் எடுத்துப் பிடித்தவுடன் நொறுங்கி மண்ணாகிவிட்டது. இதைச் சொன்னவுடன் அமைச்சர் அவர்கள் எரிச்சலடைவது நல்லதல்ல. இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும். மேலும் பதக்கங்கள் வழங்குகிறார்கள். ஹரிஜனங்களோடு தொடர்பே கொள்ளாத சேரிக்கே போகாத ஒருவருக்கு பதக்கங்கள் வழங்கப்படுகிறது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆதித் திராவிடர்களுக்கு உயிரோடு இருக்கும்போது வாழவழி செய்யாவிட்டாலும் சுடுகாட்டுக்குப் போவதில் தடங்கல் செய்யக்கூடாது. அவர்களுக்கு அதற்கு பாதை ஒதுக்கித் தரப்படவில்லை. இன்றைய தினம் பல இடங்களில் போலீஸ் தயவில்தான் பிணங்கள் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டியிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் உணரவேண்டும். நஞ்சை நிலம் என்றும் கொடுக்கக்கூடிய பணம் போதாது என்று நிலத்தைக் கொடுக்காமல் இருக்கிறார்கள். 10% அல்லது 5% கூடக் கொடுத்தாகிலும் நிலத்தைக் கைப்பற்றியாக வேண்டும். முதுகுளத்தூர் மாதிரி சிதம்பரத்தில் ஆதித் திராவிட மக்கள் மாறுகிறார்கள். அதை அமைச்சர் அவர்கள் கவனித்து தடுத்து நிறுத்தவேண்டும். ஆதித் திராவிட மக்களுக்கும், பின்தங்கிய மக்களுக்கும் எந்தவித சச்சரவும் வரக் கூடாது என்று கேட்டு கொள்கிறேன். மௌனமாக இருந்தால் முதுகுளத்தூர் மாதிரி ஆகிவிடும். பின்னால் ஒன்றும் பிரயோசனப்படாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்......

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், ஜாதி ஹிந்துவாக இருந்தாலும், எங்கு அக்கிரமம் இருந் தாலும், அன்னியாயம் இருந்தாலும் அதைக் கண்டிக்க அரசாங்கம் இருக்கிறது. அரசாங்கம் ஒரு வர்க்க பேதமற்ற, வகுப்பு பேதமற்ற சமுதாயத்தை ஏற்படுத்தவேண்டுமென்றுதான் பாடுபட்டு வருகிறது. ஒரு சிலர் அந்த மாதிரி இருக்கலாம். அது இரு பக்கமும் இருக்கிறது. அப்பேர்ப்பட்டவர்களுக்கு புத்தி சொல்லி கனம் அங்கத்தினர்களெல்லாம் திருத்தவேண்டும்.

SRI A. GOVINDASAMY : அமைச்சர் அவர்கள் சொல்லியதுபோல அவராகவும் கூறியிருக்கிறார், நானும் கூறியிருக்கிறேன். எந்த சமூகமாக இருந்தாலும் இதை நிறுத்த முன்வரவேண்டும். முதுகுளத்தூர் மாதிரி ஆகவிட்டு பின்னால் தீயணைக்கும் படையைக் கொண்டுபோவது சரியாகாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய தினம் ஆதிதிராவிடப் பிள்ளைகள் 6-வது வகுப்பு முதல் 8-வது வகுப்பு வரை படிப்பதாக இருந்தால அவர்களுக்கு 18 ரூபாய் ஸ்டைபண்ட் கொடுக்கப்படும் என்று இருக்கிறது. அதை 30 ரூபாயாக உயர்த்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தவிர, ஒருசில உயர்ந்த படிப்புகளுக்கு 10, 20 என்று ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை குறிப்பிடப்பட்ட அவர்களுக்குத்தான் சலுகைகள் வழங்கப்பட்டு வருகின்றன. அந்த அளவுக்கு இல்லாமல், ஆதிதிராவிடர்கள் எத்தனைப் பேர்கள் படிப்ப தற்கு முன் வந்தாலும், அத்தனை பேர்களுக்கும் சலுகைகள் கொடுக்கப் படவேண்டும். அதேபோல், பிற்பட்ட வகுப்பினர்களுக்கும் ஒரு குறிப்பிட்ட

[Sri A. Govindasamy] [14th March 1961

தொகை ஒதுக்கப்படுவதால், அந்த வகுப்பைச் சார்ந்தவர்கள் அனைவரும் இன்றைக்கு படிக்க முடியாத நிலைமை ஏற்படுகிறது. அதையும் போக்குவதற்கு, அவர்களுக்கும் இந்தச் சலுகைகள் விஸ்தரிக்கப்படவேண்டும். இதிலே குறிப்பாக, சலவைத் தொழிலாளர்களைப்பற்றியும், க்ஷவரத் தொழிலாளர்களைப்பற்றியும் கோரிக்கை இப்போது அரசாங்கத்தின் கவனத்தில் இருந்து வருகிறது. ஆதிதிராவிடர்களுக்கு கொடுக்கப்படும் சலுகைகள் அனைத்தும் அவர்களுக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு நம் நாட்டிலிருந்து பம்பாய்க்குச் சென்று குடியேறி இருக்கும் ஆதி திராவிடர்களுக்கு அங்கு நம்முடைய ராஜ்யத்தில் கொடுக்கப்படும் சலுகைகள் அனைத்தும் கொடுக்கப்படவில்லை என்று சொல்லப்படுகிறது. அது சம்பந்தமாய சர்க்காரிடம தாக்கீது இருக்கிறது. ஆகவே இதிலும் கவனம் செலுத்தி ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

குறிப்பாக, ஹரிஜனங்களுக்கு குடிக்க குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும். ஸ்ரீ பரமேஸ்வரன் அவர்கள் அமைச்சராக இருந்த காலத்தில் 20 குடும்பங்கள் உள்ள ஒவ்வொரு இடத்திற்கும் குடிதண்ணீர் வசதி செய்து கொடுப்பதாகச் சொன்னார்கள். அது சம்பந்தமாக நான் என் தொகுதியிலிருந்து 120 சேரிகளைக் குறிப்பிட்டு அனுப்பினேன். ஏதோ 30, 40 கிராமங்களில்தான் கிணறுகள் தோண்டப்பட்டிருக்கிறதே தவிர, பாக்கி சேரிகளில் ஒருவித வசதிகளும் செய்யப்படவில்லை. ஆகவே அதையும் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு கனம் ஹரிஜன நல அமைச்சர் அவர்கள் ஆதி திராவிடர்கள் விஷயத்திலே அதிக அக்கறை எடுத்துக்கொண்டு நல்ல முறையிலே ஒத்துழைத்து வருகிறார். அதைப்பற்றி எந்தவிதமான ஆட்சேபனையும் கிடையாது. ஆனால் அவர்கள் கொஞ்சம் கட்சிக் கண்ணோட்டம் காட்டி வருகிறார். அதைத் தவிர்த்து, எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்வதையும், அவர்கள் சொல்லக்கூடிய நல்ல கருத்துக்களையும் கவனத்திலேகொண்டு, அதற்கும் வழிவகைகள் செய்வார்களானால் நல்லது என்று கேட்டுக் கொண்டு, இன்னும் பேசவேண்டிய விஷயங்கள் பல இருந்தாலும், நேரம் இல்லாத காரணத்தினால், வேறு ஒரு சந்தர்ப்பத்திலே சொல்வதற்கோ அல்லது எழுதியோ கொடுத்துவிடுகிறேன் என்று கூறிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN: எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்லும் எந்த விஷயங்களையும் கவனிப்பதில்லை என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லமுடியாது. அவர்கள் சொல்லக்கூடிய அநேக காரியங்கள் செய்யப்பட்டு, நடக்கிறது. அப்படிக் கட்சிக் கண்ணோட்டம் பார்த்திருந்தால், எந்த வேலையும் நடந்திருக்காதே என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* SRI V. VEDAYYAN: கனம் அவைத் தலைவர் அவர்களே, இந்த ஹரிஜன நல மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகின்றேன். இந்த ஹரிஜன நலத்துறை ஏற்படுத்துவது, அவர்கள் பொருளாதாரத் துறையில், பொருளாதார ரீதியில் மாத்திரம் முன்னேற வேண்டுமென்ற கருத்தோடு அல்ல. அவர்கள் சமுதாய ரீதியில் ரொம்பவும் பின்தங்கியவர்கள். பின்னால் தள்ளப்பட்டவர்கள். அதனால்தான் அவர்களுக்கு இந்த வெறும் பொருளாதார உதவி மாத்திரம் போதாது. அவர்கள் சமுதாயத்திலும் உயர்த்தப்படவேண்டும். அதற்கு தீண்டாமையை ஒழிக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்கு கிடைக்கக்கூடிய பொருளாதார சலுகைகள் எல்லாம் நன்றாகப் பயன்படவேண்டும். இந்த தீண்டாமையை ஒழிப்பதற்கு ஹரிஜனங்களை மாத்திரம் பொருளாதாரத் துறையிலோ, மற்றத் துறைகளிலோ முன்னேற்றமடையச் செய்தால் மட்டும் போதாது, ஜாதி இந்துக்களிடம் மனமாற்றம் ஏற்படவேண்டும். இதற்கு மற்ற ஜாதியினரும் ஒத்துழைக்க முற்படவேண்டும். அப்படி மனமாற்றம் ஏற்படுத்துவதற்கு நம்முடைய சர்க்கார் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளோடு, இந்தச் சபையிலுள்ள எல்லா அங்கத்தினர்களும், மற்ற அரசியல்

14th March 1961] [Sri V. Vedayyan]

கட்சிகளும்கூட நல்லதொரு முயற்சிகளை எடுத்துக்கொள்ளவேண்டும். அப்போதுதான் நாம் தீண்டாமையை ஒழிக்க முடியும். அப்படி ஒழித்தால் தான் அவர்களுக்கு பொருளாதார ரீதியில எல்லா உதவிகளும் நன்கு பயன் படும். ஆகவே இந்த தீண்டாமை ஒழிப்பைக் கொஞ்சம் தீவிரமாக்கவேண் டும். ஸ்டேட் வெல்பர் கமிட்டியிலும் சரி, ஜில்லா வெல்பேர் கமிட்டியிலும் சரி போலீஸ் அதிகாரிகள் அங்கத்தினர்களாக இருக்கவேண்டும். ஸ்டேட் வெல்பர் கமிட்டியிலே ஐ. ஜி. அங்கத்தினராக இருக்கவேண்டும். அத்துடன் ஜில்லா வெல்பர் கமிட்டியில் டீ.எஸ்.பி. அங்கத்தினராக இருக்கிறார்கள். ஆனால் கூட்டத்திற்கு வருவது கிடையாது.

THE HON. SRI P. KAKKAN: இப்போது ஐ. ஜி அவர்கள் மாகாண வெல்பேர் அட்வைசரி கமிட்டியில் அங்கத்தினராக இருந்து வருகிறார். அவர் கள் கூட்டத்திற்கு வரமுடியாத காலத்தில், அவருக்குப் பதிலாக டீ.ஐ.ஜி. அல்லது ஏ.ஐ.ஜி. போன்றோர் வருவார்கள். அதேபோல் ஜில்லாக் கமிட்டிக் கூட்டத்திற்கு டீ.எஸ்.பி. அங்கத்தினர். அவர் வர முடியாவிட்டால், டிப்டி எஸ்.பி. வருவார்.

SRI V. VEDAYYAN: போலீஸ் அதிகாரிகள் அங்கத்தினர்களாக இருந்தாலும்கூட, பெரும்பாலான கூட்டங்களுக்கு அவர்கள் வருவதே கிடையாது. அவர்கள் வராததால், அவர்களிடத்திலே குறைகளை எடுத்துக் சொல்வதற்கு முடியாமல் இருக்கிறது. ஏனென்றால், இப்போது தீண்டா மையை ஒழிப்பதற்காக டிப்டி சேவக்குகளை நாம் நியமித்திருக்கிறோம். அவர்கள் கிராமங்களுக்குச் சென்று சில விஷயங்களை விசாரிப்பது என்றால், கஷ்டமான நிலைமை சில சமயங்களில் ஏற்படுகிறது. குற்றவாளிகள் டிப்டி சேவக்குகள் முன் ஆஜராக மறுத்து விடுகிறார்கள். அப்படிப்பட்ட சமயங் களில அந்தக் கேஸ்களை போலீஸாரிடம் கொடுத்தால், வேலை ஜரூராக நடக்கும். அப்படி அவர்களுக்கு இந்த கேஸ்களைக் கொடுக்கும்போது, இத்தனை கேஸ்கள் செய்தால் இவ்வளவு Reward என்று ஏற்படுத்தி அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும். அப்படி இந்த மாதிரியான முறை யிலே இதைச் செய்தால், அவர்களை நன்றாகப் பயன்படுத்தமுடியும்.

பெரிய உத்தியோகங்களுக்கு சர்வீஸ் கமிஷனிலே இவ்வளவு உத்தி யோகங்களை இவர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று ரிசர்வேஷன் செய்யப்பட்டிருக்கிறது. மற்றபடி சர்க்காரிலே நியமிக்கப்படும் உத்தியோகங் களுக்கு ரிசர்வேஷன் கிடையாது. அநேகமாக, பியூன்கள் முதலிய சிறிய சிறிய வேலைகளுக்கு இவர்களை நியமிக்கப்படுவதே இல்லை. இந்த உத்தி யோகங்களுக்கு அநேகமாக இவர்களை ஏற்றுக்கொள்ளப்படுவதே கிடையாது. அப்படிப் பார்த்தாலும் ரொம்பவும் குறைவாக இருக்கும். ஓரிரண்டு அதிகாரிகள் வேண்டுமானால் ஒன்றிரண்டு பேர்களை இந்த வேலைகளுக்கு அமர்த்திக்கொண்டு இருக்கலாம். ஆகவே இந்தமாதிரியான எல்லா உத்தியோகங்களுக்கும் ரிசர்வேஷன் இருக்கவேண்டியது அவசியம். அத்துடன் உத்தியோகத்திலே ஒவ்வொரு ஸ்டேஜிலும் இந்தமாதிரி ரிசர்வேஷன் இருக்கவேண்டும். உதாரணமாக, இந்த வகுப்பைச் சார்ந்தவர் டிப்டி கலெக்டர் பதவிக்கு நேரடியாக வந்துவிட்டால், அவர் அதேநிலையில் 15, 20 ஆண்டுகள் ஆனாலும் அப்படியே இருக்கக்கூடிய நிலைமையைப் பார்க்கின்றோம். ஹரிஜனாக இருப்பதால் அவர்களுக்குப் பல Handicaps இருக்கிறது. ஆகவே இப்படிப்பட்டவர்களுக்கு ஒவ்வொரு ஸ்டேஜிலும் இத்தனை வருஷங்கள் சர்வீஸ் ஆகிவிட்டால் உத்தியோக உயர்வு கொடுக்கப்பட வேண்டும் என்று இதிலேயும் ஒரு நியதியை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்.

இன்றையதினம் தேவஸ்தானங்களை எடுத்துக்கொண்டால், அங்கு ஒரு எக்சிகுடிவ் ஆபிசரைக்கூட இந்த வகுப்பைச் சார்ந்தவர்களைப் பார்க்க முடிவதில்லை. இப்போது சமீபத்திலே நிறைய, அதாவது 100, 200 காலி இடங்கள் இப்பதவிக்கு ஏற்பட இருக்கிறது என்று தெரிகிறது. அதிலே பெருமபாலும், அதாவது முக்கால் பங்கை இவர்களுக்கு ஒதுக்கி, இவர்களை எக்சிகுடிவ் ஆபீசர்களாக போடவேண்டும். சாதாரணமாக, மடாலயங்கள், தேவஸ்தானங்கள், கோவில்களில்தான் வைதீக மனப்பான்மை அதிகமாகக்

[Sri V. Vedayyan] [14th March 1961

காணப்படும். ஆகவே இப்படிப்பட்ட இடங்களில் இவர்களை இப்பதவிக்கு நியமிப்பது மிகவும் பொருத்தமாக இருக்கும். ஆகவே மடாலயங்கள், தேவஸ்தானங்கள் போன்ற இடங்களில் அவசியம் ஹரிஜனங்களுக்கு இடங்கள் அளிக்கப்பட வேண்டும்.

அதேபோல் தனியார் தொழிலிலும் ஓரளவு இவர்களுக்கு ரிசர்வேஷன் இருக்கவேண்டும். குறைந்தது நூற்றுக்கு 15, 20 பேர்களுக்காவது கொடுக்கவேண்டும். சர்க்கார்தான் இப்படிப்பட்டத் தொழில்களுக்கு லைசன்ஸ் கொடுத்துக்கொண்டு வருவதால், ஹரிஜனங்களில் இத்தனை சதவீதம் வேலைக்கு அமர்த்தப்பட வேண்டும் என்று ஒரு கண்டிஷன் போட வேண்டும். ஆகவே ஹரிஜனங்களை தொழிலில் அமர்த்துவதற்காக, சட்ட திட்டங்களை திருத்தி அமைக்கவேண்டும்.

மனைக்கட்டுகள் வழங்கும் விஷயத்திலும் கொஞ்சம் கால தாமதம் ஏற்படுகிறது. அவைகளையும் துரிதமாக வழங்குவதற்கு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். இந்த மனைக்கட்டுகள் வழங்குவதில் சில இடங்கள் பள்ளமாக இருக்கிறது. எங்கள் ஜில்லாவில் நஞ்சை நிலங்களை அடமானம் செய்கிறார்கள். அதைத் திருத்தி, சமப்படுத்துவதற்கு ஓரளவு தொகைத் தேவைப்படுகிறது. ஆகவே நிலத்தைத் திருத்தியமைக்கத் தேவைப்படின், அதற்கும் ஓரளவு தொகை வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்தக் காலனிகள் கட்டுவதிலே ஒரு யோசனைச் சொல்ல விரும்புகிறேன். காலனி கட்டுவதை நிறுத்திவிட்டு, அதற்குப் பதிலாக தேவைப்படுகிறவர்களுக்கு கூரை வீடுகள் கட்டிக்கொள்ள மான்யங்கள் கொடுக்கவேண்டும். இப்படிக் காலனி கட்டுவதால், அது யாருக்கு உபயோகப்படுகிறது என்று பார்த்தால், யார் 200 ரூபாய் கொடுப்பதற்கு வசதியுள்ளவர்களாக இருக்கிறார்களோ அவர்களுக்குத்தான் இந்த காலனி கட்டுவது உபயோகப்படுகிறது. அந்த நிலைமையில் இல்லாமல் மிகவும் ஏழ்மையிலிருப்பவர்களுக்கு உபயோகமாவதில்லை. எந்தெந்த வீடுகள், குடிசைகளாக வசிப்பதற்கு லாயக்கில்லாத நிலைமையில் இருக்கின்றன என்று பார்த்து, அப்படி லாயக்கற்ற குடிசைகளுக்குக் கூரை வீடுகள் கட்டிக்கொள்வதற்கு 200, 250 ரூபாய் என்று மானியமாக வழங்கினால், அவர்கள் நல்ல முறையில் மண் சுவர் வைத்து ஸ்தல நிலைமைக்கு ஏற்ப நல்ல வீடுகளைக் கட்டிக்கொள்வார்கள். ஆகவே, காலனி முறை அவசியமில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம்.

அதற்குப் பிறகு, ஹரிஜனப் பிள்ளைகளுக்கு என்று தனியாக எலிமெண்டரி பள்ளிகள் தேவையில்லை. அந்தத் தொகையை நாம் இப்போது கணக்கில் வைத்துக் கொண்டிருக்கிறோம். இப்போது ஆங்காங்கு யூனியன் ஏற்பட்டு, அங்கெல்லாம் பள்ளிகள் ஏற்பட இருக்கிறது. தவிர, இப்போது ஹரிஜனங்களுக்கென்று தனிப் பள்ளிக்கூடங்கள் தேவையில்லை, அந்த நிலை இப்போது மாறிவிட்டது. எல்லாப் பிள்ளைகளுடனும் அவர்களும் சேர்ந்து படிக்கிறார்கள். சர்க்கார் தீண்டாமையை ஒழிப்பதற்கு முயற்சி எடுத்துக்கொண்டதினால், இப்போது ஜாதி இந்துக்கள் இடத்திலும் நல்ல மனப்பான்மை நிலவி வருகிறது. ஆகையால் அந்தப் பள்ளிகளையெல்லாம் எடுத்துவிட்டு, அந்தப் பணத்தை மேலும் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரத்திற்கு நல்ல முறையில் பயன்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே தனியாக அவர்களுக்கென்று பள்ளிகள் இருக்க வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம்.

11 a.m. * SRI T. T. DANIEL: Mr. Chairman, Sir, while supporting this Demand, may I place some facts for the consideration of the Government. At the very outset, I feel it is my duty to congratulate our Government for the useful schemes that they have launched for the uplift of the Harijan community and the Backward community. I must congratulate the Hon. Minister and all the

public servants in this department for their extreme pains which they have taken in executing successfully the various schemes promulgated by the Government.

Sir, in the matter of giving concession there seems to be a difference made between the Christian Harijan and the Hindu Harijan. So far as our State Funds are concerned there is no difference. But there is difference maintained in the matter of giving concessions out of the Central Government aid. India has become a secular State and it is the fundamental spirit of our Constitution that there shall not be any religious discrimination. I will press our Government that they must take very strong representation with the Central Government to alter the definition of the word ' Harijan ' as it stands in the Standing Order of 1950. As the definition now stands it says that what the Central Government means by Harijans is only the Hindu Harijans. I also find from that very nature of the census that has been gathered it will not be possible in future to find out exactly the total number of Christian Harijans in the country. I am afraid that if this is not altered and if the total percentage of non-Hindu Harijans are also taken, perhaps it may work very great hardship for the Harijan community in general, in this country.

So far as the matter of giving noon meals is concerned, our Government is paying proper attention. This noon meal programme must be extended to the Middle Schools and High Schools for the benefit of the Harijan children. Further in the matter of distribution of clothes, we should not confine to distribute the clothes to those pupils belonging to the Harijan community who are studying in the primary schools alone. We must enlarge the system so that we may be in a position to distribute clothes for all the poor Harijan students, who are studying in the middle and high schools. Among the poor people that are studying in the middle schools and high schools large bulk of these students actually come from the Harijan Community. The way in which these people are ill-clad we have to notice that they are in more or less in utter poverty stricken condition. Girls and boys who are studying in the Middle Schools and High Schools are attending all the 250 days of the school, with only one dress and that too unclean and tattered. This ghastly sight must be removed from society. I would say, Sir, that instead of asking Harijan students to pay the S.S.L.C. examination fee, if some sort of policy is evolved by the Government stating that the Harijan students need not pay the S.S.L.C. examination fee it would go a long way to help them. At present, the students who fail in the first year and who continue their studies in the S.S.L.C. in the second year they are getting only educational fee concession and they are not getting the S.S.L.C. examination fee concession. That also must be given to the Harijan students.

We find, especially in the colleges maintained by private managements, the managements insist that the Harijan students must pay the hostel fee. The Harijan students find it difficult to find out money for two or three months, till the Government pass orders

[Sri T. T. Daniel] [14th March 1961

and intimate the managements the list of names of Harijan students, who are entitled to the hostel fee concession. I must say that the Government should issue a Government Order immediately to all the private management schools that all the Harijan students should be fed freely in all the college hostels and they should not insist in getting the fee.

So far as the houses are concerned at present Rs. 750 is given It is not sufficient. The Government should increase this amount to Rs. 1,500 at least, so that the houses may be conveniently and strongly built.

In the matter of giving pump sets, either the Government should give freely or they should give the pump sets on hire basis or at least hire-purchase agreement basis.

(Mr. Speaker in the Chair.)

Out of the excess lands that might be got after the passing of the legislation of the Land Ceiling Act a large majority of the lands must be distributed among the landless Harijans. The Government also should distribute the available poramboke lands and also the cultivable waste lands in the midst of Reserve Forests to the Harijans.

So far as Kanyakumari district is concerned we have been making several representations on behalf of the poor Harijans. They are unnecessarily harrassed by the eviction proceedings by the officers and some times on the ground that the lands they have occupied are required for public purposes. The wet lands where the Harijans are living and the lands where the Harijans got some house-sites and who have been living for a long time, those lands must be assigned to them and they should be made absolute owners of those house-sites where they have put up small houses.

I would also say, Sir, that in eradicating the social backwardness and the economic backwardness of the Harijan community our Government should pass a sort of legislation by which they should encourage inter-caste marriages, marriages between Harijans and non-Harijans and in that legislation there should be provision for giving some grant or stipend to the parties of the marriage and also some sort of stipend to the off-springs of such marriages. If that is done, I think in due course there may not be a separate creed in our society and the Harijans will be absorbed in the society among the members of other societies.

There is difficulty also for the extension of lights to Harijan villages. At present according to the panchayat regulation, there seems to be a limitation for the panchayat in affording electricity facilities. Only 15 per cent of the panchayat revenue is set apart for this electrification and on that account the panchayat also is not in a position to extend the light to these Harijan villages. I would, therefore, urge the Government that they must allot separate funds for this purpose so that the Harijan villages adjacent to other villages may also get electricity facilities.

14th March 1961]

SRI N. MARUDACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தின் மீது கொண்டு வரப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையின் மீது என்னுடைய கருத்தை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஹரிஜனங்களுக்காக இந்த மாநிலத்தில் இன்றைக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை ரூ. 35,73,000. இந்தத் தொகை சென்ற வருஷத்தைக் காட்டிலும் அதிகம் என்றே சொல்லலாம். ஹரிஜன மான்யத்திற்கு தொகை உயர்ந்து கொண்டே போகிறது. ஆனாலும் ஹரிஜனங்களுடைய வாழ்க்கை நிலை உயர்ந்ததா என்று பார்க்க வேண்டும். ஹரிஜனங்களுடைய வாழ்க்கை நிலையானது அதே மாதிரிதான் இருக்கிறது அல்லது அதைவிட கீழ்த்தரமான கட்டத்திலே தான் போய்க்கொண்டிருக்கிறது. இன்றைக்கு ஒவ்வொரு மான்யத்திலும் ஹரிஜனங்களுக்காக பல சலுகைகள் செய்து கொடுப்பதாக இந்த ஹரிஜன மான்ய வெட்டிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் வீடு கட்டும் திட்டத்திலே, இன்றைக்கு ஹரிஜனங்களுக்காக வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. மனைகள் வழங்கப்படுகின்றன என்று கூறப்படுகிறது. ஹரிஜனச் சேரியிலே வாழ்ந்துகொண்டிருப்பவர்களுக்கு, அங்கே வீடுகளைக் கட்டிக் கொடுத்து அது ஒரு காலனி ஆக்கப்பட்டிருக்கிறதே தவிர, வேறு ஒன்றும் இல்லை. சேரி என்பது காலனி என்று மாற்றப்பட்டிருக்கிறதே தவிர ஹரிஜனங்கள் மாற்றப்படவில்லை. ஹரிஜனங்கள் ஹரிஜனங்களாகத்தான் இருக்கிறார்கள்.

சேரி என்பது காலனியாக மாற்றப்பட்டிருக்கிறது. ஆகையால் இதிலே எந்த முறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்று சொல்லுவதற்கில்லை. அந்த சமயத்திலே ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகையை மத்தியிலே இருக்கிறவர்கள் கொள்ளை அடிக்கிறார்கள் என்பது உண்மை. ஹரிஜன நலவிலாக்கா கண்டிராக்டர்கள், சூபர்வைசர்கள் இவர்கள் எல்லாம் கொள்ளை அடிக்கிறார்கள். சாதாரண ஹரிஜன மக்களுக்குப் போய்ச் சேருவதில்லை. இதை எல்லாம் தாசில்தாருக்கு விட்டு, ஹரிஜன வெல்பேர் ஆபீசர் சூப்பர்வைஸ் செய்யும்படி செய்தால் உண்மையிலேயே ஹரிஜன மக்களுக்குப் போய்ச் சேருவதற்கு வாய்ப்பு ஏற்படும். இதை அரசாங்கம் உடனடியாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு ஹரிஜனங்களுக்கு என்னென்ன கெடுதல்கள் இருக்கின்றனவோ, அவைகளை அரசாங்கம் நிவர்த்திக்கவேண்டுமென்று எதிர்க்கட்சியிலுள்ள நாங்கள் சொல்லுகிறோம். ஆனால் ஆளும் கட்சியிலுள்ள என்னைப் போன்ற பல அங்கத்தினர்கள் அந்தக் கெடுதல்களை மறைத்து அரசாங்கம் நன்மையே செய்கிறது என்று கூறுகிறார்கள். இது உண்மையை மூடி மறைப்பதாகும். ஹரிஜனங்களுடைய வாழ்க்கை வளம்பெற வேண்டுமானால், அவர்கள் பொருளாதாரத் துறையில் முன்னேற வேண்டும். இந்த மான்யத்திற்கு கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் ஒரு வெட்டுப் பிரேரணையைக் கொண்டு வந்திருக்கிறார். 25 சதவிகிதம் தாழ்த்தப்பட்ட மக்களை தனியார் துறையில் இருக்கக்கூடிய மில்களிலே எடுத்துக்கொள்வதற்கு சட்டம் கொண்டுவரவேண்டுமென்று கூறியிருக்கிறார். அப்படி ஒரு சட்டத்தை அரசாங்கத்தின் தரப்பிலே கொண்டு வருவார்களானால், அவர்களுடைய வாழ்க்கை வளம் பெறுவதற்கும், பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைவதற்கும் உத்தரவாதம் அளிக்கும். சர்க்கார் இதை உடனடியாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டாலும் அது ஹரிஜனங்களுக்குப் போய்ச் சேருவதில்லை.

அடுத்தபடியாக ஹரிஜன மாணவர்களுக்கு கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப்பைப் பற்றி சொல்ல விரும்புகிறேன். நான் பல பள்ளிக்குச் சென்று பார்த்திருக்கிறேன். 35 சதவிகிதம்தான் ஸ்காலர்ஷிப் கொடுத்திருக்கிறார்கள். பாக்கி மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கப்படுவதில்லை. ஒவ்வொரு பள்ளியின் கணக்கை எடுத்து அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறேன். இதற்குக் காரணம் என்னவென்று தெரியவேண்டும்.

[14th March 1961

THE HON. SRI P. KAKKAN : ஸ்காலர்ஷிப் கொடுப்பதெல்லாம் அலாட்மென்டைப் பொருத்தது. ஒதுக்கிய பணத்திற்குக் கொடுத்துவிட்டு, மீண்டும் நிதி இலாகாவிற்த எழுதி வாங்கிக் கொடுக்கிறோம். சிலபேருக்குக் கொடுக்காமல் இருக்கலாம். கூடுமான வரையில் எவ்வளவு பேருக்குக் கொடுக்கமுடியுமோ, அவ்வளவு பேருக்கும் கொடுத்து வருகிறோம். களுக்குக் கொடுத்தால், அவர்களுக்கு எல்லாம் கொடுப்பதற்குப் பணம் இல்லை. கொடுக்கப்படாதவர்கள் இன்னும் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள்.

SRI N. MARUDACHALAM : பெயர் அளவிலே ஸ்காலர்ஷிப் கொடுக்கிறோம் என்று சொல்லுவது அவ்வளவு நல்லதல்ல. சிங்கநல்லூர் பள்ளியிலே 200 பிள்ளைகளுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படவில்லை. கென்னடியின் ஸ்கூலிலே 235 பிள்ளைகளுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படவில்லை. அவர்கள் எல்லோரும் விண்ணப்பங்கள் அனுப்பியிருக்கிறார்கள். ஒரு பள்ளியிலே ஒரு சிலருக்குக் கொடுக்கவில்லையென்றால் சகஜம்தான். ஆனால் இவ்வளவு பிள்ளைகளுக்கும் கொடுக்கவில்லையென்றால்.......

THE HON. SRI P. KAKKAN : ஹாஸ்டலில் சேர்ந்து படிக்காத பிள்ளைகளுக்கு கிடைக்காது. எவ்வளவு பேருக்குக் கொடுக்கமுடியுமோ அவ்வளவு பேருக்கும் கொடுத்து வருகிறோம்.

SRI N. MARUDACHALAM : ஹாஸ்டலில் சேர்ந்து படிக்கிற பிள்ளைகளுக்குத்தான் கிடைக்கும், மற்ற பிள்ளைகளுக்குக் குறைந்தபட்ச அளவுதான் கிடைக்கும் என்று சொல்லுவது சரியல்ல. எல்லாப் பிள்ளைகளுக்கும் ஸ்காலர்ஷிப் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு ஹரிஜன இலாகாவிற்கு ஒதுக்கப்பட்ட பணங்களை அவர்களே தின்றுவிடுகிறார்கள். (சிரிப்பு). (குறுக்கீடு). குறிப்பிடவேண்டுமென்று சொன்னால் நான் குறிப்பிடுகிறேன். ஆகவே ஒவ்வொரு ஜில்லாவிலேயும் ஒரு கமிட்டி போட்டு, இந்த ஹரிஜன இலாகா ஆபீஸர்களையும், மற்ற கட்சிகளைச் சேர்ந்த அங்கத்தினர்களையும் சேர்த்து, வீடு கட்டுவதற்கு, கைத்தொழில்களுக்கு இவைகளுக்கு எவ்வளவு பணம் வேண்டும் என்பதை பரிசீலனை செய்து பணம் ஒதுக்க முன்வரவேண்டும். தனியார் துறையிலே உள்ள மில்களிலே 25 சதவிகிதம் அவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்வதற்கு சர்க்கார் தரப்பிலே சட்டம் கொண்டுவர வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

*SRI K. B. S. MANI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்திலே இப்பொழுது விவாதத்திலிருக்கும் இந்த மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். உண்மையிலேயே இந்தக் கோரிக்கையைப் பற்றி குறை சொன்ன சிலரும், இதை ஆதரித்துப் பேசியவர்களும் இதை இன்னும் அதிகப்படுத்துவதற்கான வழிகளைக் கூறினார்கள். அதைத் தவிர நான் அதிகமாகக் கூறப்போவது ஒன்றும் இல்லை. எனினும் இந்த சபையிலே இந்த மானியத்திற்கும் அதற்குரிய மக்களுக்கும் இருக்கிற மதிப்பைப் பற்றியும் கூறி என்னுடைய உரையை முடிக்கவேண்டுமென்று நினைக்கிறேன். தமிழ் நாட்டிலே "ஏறு பிடிச்சவன் இளிச்சவாயன், பூட்டிய எருதுகூட மச்சான் முறை கொண்டாடும்" என்கின்ற பழமொழி உண்டு. இதைப் போலத்தான் இருக்கிறது இந்த மன்றத்திலே நடக்கிற பேச்சும் அதற்குக் கொடுக்கிற மதிப்பும். நமது கனம் மந்திரி அவர்களைப் பற்றி ஒருவர், நந்தன் பரம்பரையிலிருந்து வந்தவர் என்று சொல்லுகிறார். மற்றொருவர் சொல்லுகிறார், கக்கன் மந்திரியாக இருக்கும்பொழுது நான் ஏன் இருக்கக்கூடாது என்று. நாங்கள் தான் இளிச்சவாயர்களா? யாருக்கு யார் தரம் குறைந்தவர்கள்? யாருக்கு யார் நேர்மை அற்றவர்கள்? யாருக்கு யார் எந்தத் துறையிலும் ஈடுகொடுக்க முடியாமல் இருப்பவர்கள்? எதற்காக இப்படி இழுக்குக் கூற முற்பட்டிருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா? ஏழு நாட்களுக்கு விவாதிக்கவேண்டிய இந்த மானியக் கோரிக்கையின் மீது பேசுவதற்கு ஏழே நிமிஷங்கள் ஒவ்வொரு அங்கத்தினருக்கும் கொடுக்கப்படுவதிலிருந்தும்,

14th March 1961] [Sri K. B. S. Mani]

மந்திரி அவர்கள் பகல் பூராவும் வைத்துக்கொள்ளலாம் என்று சொல்லியும் எதிர்க்கட்சித் தலைவர் இரண்டு மணி அளவோடு சபையை மூடிவிடலாம் என்று சொல்லுவதிலிருந்தும், இந்த நாட்டிலுள்ள ஹரிஜனங்கள் மீது எதிர்க் கட்சியிலுள்ளவர்களுக்கு எவ்வளவு அக்கறை இருக்கிறது. எவ்வளவு அனுதாபம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். இதற்கு மானம் இல்லையா, இதற்கு ரோஷம் இல்லையா, இதற்கு வெட்கம் இல்லையா என்று கேட்கிறேன். அமைச்சரைப் பார்த்து எதுவேண்டுமானாலும் பேசிவிடலாம் என்ற நிலைமை இருக்கிறது. வேண்டுமானால் அரசாங்கம் செய்யவில்லை அல்லது செய்துவிட்டது என்று சொல்லலாம். ஆனால் இப்படிச் சொல்லுகிறவர்களுடைய தொகுதிக்குச் சென்று பார்த்தால் என்ன நடக்கிறது என்று தெரியும். உதாரணமாக, நான் பல பகுதிகளை இங்கே குறிப்பிட முடியும். வேதாரண்யம் பிர்காவில் அமைச்சரைக் கொண்டுபோய்க் காண்பித்தேன். பஞ்சாயத்து போர்டில் ஹரிஜன மெம்பராக இருக்கிறவர் ஆபீஸில் உள்ளே சென்று கூட கையெழுத்துப் போட முடியாத நிலைமை இருக்கிறது. இன்னும் எதிர்க் கட்சியிலே உள்ள அங்கத்தினர்கள் தொகுதியைப் பார்த்தால், குறிப்பாக தென் ஆற்காடு, வட ஆற்காடு மாவட்டங்களிலே, உலகத்திலேயே மக்கள் எவர்களை இழிவானவர்கள் என்று சொல்லுகிறார்களோ அவர்களுடைய வீட்டு வாசலுக்குக் கூட ஹரிஜனங்கள் போகமுடியாத நிலைமை இருக்கிறது. சட்டத்தினால் இவற்றை திருத்தி அமைக்க முடியாது. பல முறை சொல்லியிருக்கிறோம். செயல்பட அரசாங்கம் முன்வரவேண்டும். அப்படி அரசாங்கம் செய்யவில்லை என்றால், எங்களை விட்டுவிடுங்கள் தனியாக. மற்றவர்களைப் போல் நாங்களும் வாழத்தான் பிறந்தோம்.

இவர்களுக்கு வாழ்வதற்கு உரிமையில்லையா? எத்தனை நாளுக்கு இவர்களை, பொறுங்கள், சிறுகச் சிறுக படிப்படியாகப் போவோம் என்று சொல்லிக்கொண்டு இருப்பது? இந்த ஹரிஜன நல இலாகாவிற்கு அதிக அதிகாரிகளை நியமித்திருப்பதற்காக நன்றி செலுத்துகிறோம். ஆனால் அவர்களுக்குப் போதிய அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை. பணம் இருக்கிறது, வசதிகள் இருக்கின்றன, வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால் அவர்களுக்கு எதையும் செய்ய அதிகாரம் இல்லை. அதிகாரங்களெல்லாம் ரெவின்யூ ஆகட்டும் ரெவின்யூ அதிகாரிகளுக்குத்தான் இருக்கிறது. ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டு குடியிருப்பு அடமானம் சம்பந்தப்பட்டவரை நிலச் சொந்தக்காரர்கள் அனுமதியளிக்கவில்லை என்று நடவடிக்கைகள் கைவிடப்படுகின்றன. உதாரணமாக என் பகுதியில் ஆச்சாபுரம் என்ற இடத்தில் மேட்டுப்பாங்கான பாகத்தை அதிக துரிதமாக எடுக்க நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஆனால், நேற்று சென்று நான் பார்த்தேன்; பாக்கும்பேது, அவ்விடத்தில் பெரிய தென்ன மரங்களும், கொடிக்காலும் இருக்கிறது. அதை எப்பொழுது ஆர்ஜிதம் செய்வது, இவர்களுக்கு வழங்குவது? இம்மாதிரி ஒரு இடம், இரண்டு இடமில்லை ஆயிரக்கணக்கான இடங்கள் இருக்கின்றன. வீடு கட்டிக் கொடுக்கும் காண்ட்ராக்ட் முறையிலும் கடுமையான முறையை கையாள வேண்டும். 19-5-60-ல் வேதாரணியம் பகுதியில் புயல் நிவாரண வேலை நடந்த காலத்தில், மகராஜபுரம் பக்கத்தில் காமராஜபுரம் என்று ஏற்படுத்தி 80 வீடுகள் கட்டிக்கொடுத்தார்கள். அதில் இப்பொழுது இருப்பது 12 வீடுகள்தான். பாக்கியெல்லாம் அழிந்து விட்டது. அமைச்சரவர்கள் இது விஷயமாகக்கேட்டு குறிப்பு வாங்கலாம். நான் நேரில்சென்று எண்ணி எடுத்து வந்த குறிப்பைச் சொல்லுகிறேன். அதற்குக் காரணம் என்ன? அந்தந்த வட்டார மக்களுக்கு சர்க்கார் எந்த அளவுக்கு உதவி செய்ய முன் வருகிறதோ அந்த அளவுக்கு உற்சாகத்தோடு பணியாற்றுகிறவர்கள் அதிகாரிகளாக இல்லை. அவர்களுக்கு அந்த எண்ணம் இல்லை.

இந்த ஹரிஜன விழாவில் சொன்னேன். இந்த விழாவை அக்கிரகாரங்களில், எங்கு ஜாதி மமதைக்காரர்கள் இருக்கிறார்களோ அவர்கள் தாழ்ந்தவர்கள் இல்லை, அவர்கள் இவர்களைவிட உயர்ந்தவர்கள் இல்லை என்று சட்ட ரீதியாகவும், இதிகாசங்கள் மூலமாகவும் எடுத்துக் காட்டி ஹரிஜன தினங்களை அப்பகுதிகளில் நடத்தவேண்டும்

THE HON. SRI P. KAKKAN: கனம் சபாநாயகர் அவர்களே, ஹரிஜன வாரத்தை ஹரிஜனங்கள் இருக்கும் பகுதியிலேயே நடத்துகிறோம் என்று சொல்வது சரியில்லை. ஹரிஜனங்கள் இருக்கும் பகுதிகளிலும், ஜாதி ஹிந்துக்கள் இருக்கும் பகுதிகளிலும் நடத்துகிறோம். எங்கெல்லாம் நல்ல முறையிலே, தீண்டாமை ஒழிப்பில் அக்கறை கொண்டு பணியாற்றுகிறார்களோ அப்பகுதிகளில் தக்க ஏற்பாடுகளைச் செய்து கலெக்டர் அவர்கள் மூலம் கொண்டாடுகிறோம். ஆனால் மற்ற இடத்தில் கொண்டாடுவதில்லை என்பது சரியில்லை.

SRI K. B. S. MANI: இந்த மானியத்தில் பேசிய கனம் அங்கத்தினர்களில் சிலர் சொன்னார்கள், இந்த டிபார்ட்மெண்டில் எஸ்டாப்ளிஷ்மெண்டுக்கு அதிகச் செலவாகிறது என்று. பானை இல்லாமல் சோறு பொங்க முடியாது. நெருப்பில்லாமல் வேகவைக்க முடியாது என்பது போல, நிர்வாகக் குழு வேண்டும். அதன் மூலமாகத்தான் அதிலிருக்கும் ஆபீசர்கள் மூலமாகத்தான் நல்ல முறையிலே வேலைகளைச் செய்ய முடியும்.

எங்கள் ஜில்லாவைப் பொறுத்த வரையில், தாழ்த்தப்பட்ட விவசாயிகள், இரண்டு மாதத்திற்கு முன்பு வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிலங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் மோசமான நிலையில் இருக்கிறார்கள். கொடுக்கவேண்டிய குத்தகையும், வாரமும் கொடுக்க முடியாமல் தவிக்கிறார்கள். அதே சமயத்தில் அரசாங்கம் உதவிய கடன் தொகையையும் திருப்பிக்கொடுக்கும்படி நிர்ப்பந்தம் செய்கிறார்கள். நிலச் சொந்தக்காரர்கள் போகத்தைக் கொடுக்காவிட்டால், வெளியேற்றும் நிலைமை இருக்கிறது. அடுத்து வரும் வருஷத்தில் கொடுத்துவிடுகிறோம் என்று சொல்லுகிறார்கள், அதையொட்டி எந்த விவசாயியும் வெளியேற்றப்படாமலும் சர்க்கார் கடனை அந்த வருஷம் தள்ளிப்போட்டும், உதவியளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER: ஸ்ரீ ஆர். சுப்பிரமணியம்.

* SRI R. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே இந்த மானியத்தை ஆதரித்து ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன்.

நம் மாநிலம் பொறுத்தவரை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்ப காலத்தை விட 33 கோடி ரூபாய் அதிகமாக செலவழித்திருந்தாலும், ஹரிஜனங்களுக்காக ஒதுக்கிய பணத்தில், 51 லட்ச ரூபாய் செலவிடாமல் இருந்திருக்கிறது. அதிகப்படியாக 33 கோடி செலவிட்டிருந்தும், ஹரிஜன நல இலாகா மட்டும் ஏன் குறைந்த தொகையையே செலவழித்திருக்கிறார்கள்? இந்தத் தொகையையும் செலவழித்திருக்கலாம். மூன்றாவது திட்டத்தைப் பார்த்தால், இரண்டாவது திட்டத்தில் இருந்ததைவிட 180 லட்சம் குறைவாகவே ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கும் காரணம் என்ன என்று தெரியவில்லை. திட்டம் போட்டுக்கொண்டே போகும்போது, அதிகமான தொகைகள் ஒதுக்கிக்கொண்டே போகும்போது, ஹரிஜன நலத்துறைக்கு மட்டும் ஏன் குறைந்துகொண்டே போகிறது என்பதற்குக் காரணம் புரியவில்லை. அமைச்சரவர்கள் பதில் சொல்லும்போது இதை விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த இலாகா நல்ல முறையில் பணியாற்ற வேண்டுமானால் சில மாறுதல்களைச் செய்யவேண்டும் என்று நினைக்கிறேன். அவைகளில் முக்கியமானது, இந்த ஹரிஜன நல இலாகாவை ஒரு டைரக்டர் அவர்கள் கவனிக்கிறார்கள். ஜில்லாவைப் பொறுத்தவரை வெல்பேர் ஆபீசர்கள் இருக்கிறார்கள். கலெக்டர் இடையே இருக்கிறார். கலெக்டர் இதில் டைரக்டருக்கு கண்ட்ரோல் கிடையாது. கலெக்டர் ஜில்லாவில் நல்லவராக இருந்தால், வேலைகள் நன்றாக நடைபெறும்; அப்படி இல்லாவிட்டால்,

14th March 1961] [Sri R. Subramaniam]

சரிவர நடக்காது. ஆகவே, டைரக்டருக்கு கலெக்டர் மீது கண்ட்ரோல் இருக்கவேண்டும். ஆகவே, இந்த டைரக்டர் பதவியை ஒரு ரெவினியூ போர்ட்டு மெம்பர் வகிக்கவேண்டும். அப்படியில்லையென்றால், டைரக்டர் அவர்கள் எக்ஸ்-அபிஷியோ செக்ரட்ரியாக இருக்கவேண்டும். இப்பொழுது அம்மாதிரி இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டில் இருக்கிறது, பல பணிகள் நல்ல முறையில் நடக்கிறது. அம்மாதிரி நல்ல முறையிலே இந்தத் துறையும் இயங்கச் செய்யவேண்டும். இந்த இலாகாவிற்கு போதிய ஊழியர்கள் கிடையாது. இருக்கக்கூடிய ஊழியர்கள் செய்யும் வேலையையும் எடுத்துப் பார்த்தால் திருப்தியாக இல்லை. உத்தியோகஸ்தர்கள் தாசில்தார், ரெவின்யூ இன்ஸ்பெக்டர் இவர்களைப் போடுகிறார்கள். இவர்கள் இந்த இலாகா வேலையைப் புரிந்துகொண்டு வேலை செய்ய ஆரம்பிக்க மூன்று மாதமாவது ஆகும். இந்த இலாகாவில் 6 மாதத்திற்கு மேல் வேலை செய்தால், பிறகொண்ட அந்த சர்வீஸ் ரெகுலர் சர்வீஸ் ஆகாது என்ற ரூல் இருப்பதால், எந்த உத்தியோகஸ்தரும் சிரத்தையுடன் இங்கே வேலை செய்வதில்லை. ஆறு மாதந்தானே என்று காலத்தைக் கடத்திவிடலாம் என்று பணி செய்கிறார்கள். இதைப் பற்றி சர்க்காருக்கும் எழுதியிருந்தேன். சர்வீஸ் எவ்வளவு நாளானாலும் அதை ரெகுலர் சர்வீஸாக மாற்ற முடியாது என்று பதில் கொடுத்திருக்கிறார்கள். எனக்குப் பதில் அப்படி வந்தாலும் பரவாயில்லை. சர்வீஸை ரெகுலராகச் செய்ய நடவடிக்கை எடுத்து நல்ல முறையிலே வேலைகள் நடக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று அமைச்சரவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். போதிய ஊழியர்கள் இல்லாததால் இந்த இலாகாவில் இன்னும் சில மாறுதல்களைச் செய்யவேண்டும். இப்பொழுது கல்வியைப் பொறுத்தவரை இனிமேல் புதிதாக ஹரிஜன டிபார்ட்மெண்ட் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்துவதில்லை என்று சொல்லியிருக்கிறோம். கல்வி இலாகாவே நடத்தும், கவனிக்கும். இருக்கும் பள்ளிக்கூடங்களையும் நாம ஏன் நடத்தவேண்டும். அவைகளையும் கல்வி இலாகாவோடு இணைத்துவிட்டால், நமக்கு கிடைக்கும் ஊழியர்களைக்கொண்டு மற்ற பணிகளைச் செய்யலாம்.

ஜில்லாக்களில் நடக்கும் வேலைகளில் முக்கியமாகக் கவனிக்கப்படுவது வீடு கட்டுவது. இந்த வேலையில் தான் வெல்பேர் ஆபீசர் தன் எல்லா நேரத்தையும் செலவழிக்கவேண்டியிருக்கிறது. அதனால், அதில் முக்கியமான பகுதியான மனை ஆர்ஜிதம் செய்வதில் அவர்கள் தங்கள் கவனத்தை செலுத்த முடியவில்லை. ஆகவே வீடு கட்டும் வேலை, மனைக்கட்டு ஆர்ஜிதம் செய்வது பாதிக்கப்படுகிறது. ஆகவே இந்த வீடு கட்டும் வேலையையும் பீ.டீ.ஓ. வசமோ அல்லது வேறு ஆபீசர்கள் வசமோ கொடுத்துவிட்டால், வெல்பேர் ஆபீஸர்கள் வேறு முக்கியமான வேலைகளில் ஈடுபடமுடியும்.

இந்த வீட்டு மனை ஆர்ஜிதம் செய்யும் வேலையில் அதிகக் காலதாமதம் ஏற்படுகிறது என்பதை நானும் சொல்லுகிறேன்; பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். உதாரணமாக சிலவற்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். 4, 5 கிராமங்கள் சம்பந்தமாக நான் ஆறு வருஷகாலமாக முயற்சி செய்து வந்திருக்கிறேன்; ஆனால் பலனில்லை. ஏனென்றால், பல காலதாமதங்கள் ஏற்படுகின்றன. அஜன்வி க்ளாஸில் போட்டு இங்கே அனுப்பினால், இங்கே இருப்பவர்கள் ஏன் ஆர்டினரி க்ளாஸில் அக்வயர் செய்யக்கூடாது என்று கேட்டுத் திருப்புகிறார்கள். அங்கே உள்ள நிலை அங்கே இருப்பவர்களுக்குத்தான் தெரியும். இவர்களுக்குத் தெரியாது. யாராவது மற்றவர்கள் இண்டரஸ்டட் பார்டிகள் சொன்னால். ஆர்டினரி க்ளாஸில் போடக்கூடாதா என்று கேட்கிறார்கள். இம்மாதிரி தாமதங்கள் இருப்பதால் சட்டத்தைத் திருத்த சீக்கிரம் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இன்னொன்று ஏதோ கேட்கிறவர்களுக்குத்தான் வீடு, மனைக்கட்டு என்று வேலை நடந்துவருகிறது. அப்படி யார் கேட்க முடியும். வசதி உள்ளவர்கள், போக்குவரத்து வசதி உள்ளவர்கள்தான் அப்படிச் செய்ய முடியும். எல்லா மக்களும் செய்ய முடிவதில்லை. உள் பட்ட கிராமங்களில் உள்ளவர்கள் கவனிக்கப்படாமல் போய்விடுவார்கள். ஆகவே இதற்கென்று ஒரு தனி ஐந்தாண்டுத் திட்டம் போட்டுக்கொண்டு ஐந்து வருஷத்திற்குள் மனைக் கட்டுகளையெல்லாம் வழங்கிவிடுவோம்

என்று பணியாற்ற வேண்டும். அல்லது, அந்தந்தப் பகுதிக்கு இவ்வளவு காலத்தில் செய்வது என்று கொள்ளவேண்டும். அம்மாதிரி இல்லாத வரையில் இந்தப் பணியில் பிரயோஜனம் இல்லையென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

11-30 a.m. அடுத்தபடியாக வீடுகள் கட்டுவதற்கு ரூபாய் 750 மானியமாக இருந்ததை ஆயிரம் ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். இதை நான வரவேற்பதற்கில்லை. காரணம் இந்த வீடுகட்ட மானியம் வழங்குவது என்றால் இதற்கு அவர்கள் இருநூறு, இருநூற்றைம்பது என்று கொடுக்கவேண்டியிருக்கிறது. இப்படி கொடுக்கக்கூடியவர்கள் வாழ்க்கையில் ஓரளவு வசதி உடையவர்கள்தான். ஆனால் இந்தச் சமூகத்தில் இன்றைய தினம் பல்லாயிரம் மக்கள் பின் அடைந்த நிலையில் இருக்கிறார்கள். ஆகவே இப்படி ஆயிரம் ரூபாய் என்று கொடுப்பதற்கு பதிலாக மனை கொடுத்து வீட்டு கூரை முதலியவைகள் போட்டுக் கொள்வதற்குக் குறைவாகப் பணம் கொடுத்தால் இன்னும் அந்தச் சமூகத்தில் உள்ள பல பேர்களுக்கு உதவி செய்வதற்கு வசதி ஏற்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டுமானால் பொருளாதாரத் துறையில் அவர்கள் வளர்ச்சி அடைவதற்கு நாம் வழிவகை செய்தாக வேண்டும். குறிப்பாக குடிசைத்தொழில் அவர்களிடத்தில் பெருகுவதற்காக வேண்டிய வசதிகளைச் செய்து தரவேண்டும் என்பதாக கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்கென்று ஒதுக்கி செலவிடக்கூடிய தொகை அவர்களுக்கு சமுதாயத்தில் இருக்கக்கூடிய பிற்பட்ட நிலையைப் போக்கி மற்றவர்களுடைய நிலைமைக்குக் கொண்டு வருவதற்காகத்தான் என்று உணரவேண்டும். ஆதலால் மற்ற டிபார்ட்மெண்டில் செலவழிக்கக் கூடிய தொகையிலும் ஹரிஜனங்களை உயர்த்துவதற்கு நியாயமான அளவில் இவர்களுடைய முன்னேற்றத்திற்காகச் செலவிடப்படவேண்டும். அடுத்தபடியாக ......

***Sri SOWDI S. SUNDARA BHARATHI:** கனம் சபாநாயகர் அவர்களே இந்த ஹரிஜனத்துறை மானியத்தைப் பொறுத்து ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும், அதற்குப் பின்னரும் இந்த இலாகா பிற்பட்டவர்களுடைய முன்னேற்றத்திற்காக செலவு செய்ய இருப்பதை நாங்கள் முழுமனதுடன் ஆதரிக்கிறோம். அவர்களுக்கு தனியாகச் சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. அது ஓரளவுக்கு நல்லது. இந்த பிற்பட்ட மக்கள், கல்வி, பொருளாதாரம் ஆகிய துறைகளில் மற்ற மக்களைப் போல ஒரு நிலை அடைவதற்கு இன்னும் காலம் வந்துவிடவில்லை என்று கருதுகிறேன். அத்தகைய ஒரு நிலை அடையும் வரை இந்தச் சலுகை நீடிக்கவேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, கல்வி விஷயத்திலே உபகாரச் சம்பளம் வழங்குவதிலே ஒரு சில விஷயத்தைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சில பட்டப் படிப்புக்கு எம். ஏ.எம். எஸ்.சி.எம். காம் போன்ற படிப்புகளுக்கு இன்னும் சில வேறுதுறை படிப்புகளுக்கும். உபகாரச் சம்பளம் வழங்குவதிலே ஒரு வரையறை இருக்கிறது. இத்தகைய வரையறை சட்டப்படிப்பு, போஸ்ட் க்ராஜுவேட், தமிழ் பண்டிட் ஆகிய இத்தகைய படிப்புகளுக்கு நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஏனென்று கேட்டால் தொழில் துறையில் இன்றைய தினம் ஏராளமான மாணவர்கள் படிப்பதற்கு வசதி செய்யவேண்டியவர்களாக இருக்கிறோம். இந்த மாதிரி ஊக்கம் காட்டுவதற்கு இத்தகைய ஒரு வரையறையை நீக்கினால்தான் மிகவும் நல்லது என்று கருதுகிறேன். இதனால் சில ஏழை மாணவர்கள் அவதிப்படுவதை நான் நேரிடையாகக் கண்டிருக்கிறேன். முடிந்தால் எத்தனை பேர்களுக்கு இந்த உதவி அளிக்க முடியுமோ அத்தனை பேர்களுக்கு உதவ வேண்டியது அவசியம் என்று சொல்லிக்கொள்கிறேன்.

14th March 1961] [Sri Sowdi S. Sundara Bharathi]

அடுத்தபடியாக ஹரிஜன ஹாஸ்டல்களில் இதர ஜாதி மாண வர்களையும் சேர்த்துக்கொள்வதற்கு சர்க்கார் முடிவு செய்திருப்பது பாராட்டக்கூடிய விஷயம். சிறிய வயதிலிருந்தே ஜாதி பாகுபாடு உள்ளத் தில் தோன்றுதவாறு எல்லாக் குழந்தைகளும் சேர்ந்து பழகும்போது தான் இந்த சாதிபேத உணர்ச்சி மறைந்து போகும். இப்படிப்பட்ட சந்தர்ப்பம் சேர்ந்து பழக எல்லா இடத்திலும் உண்டாகக்கூடிய வகையில் எல்லா ஏற்பாடுகளையும் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக இதற்கு முன்பாக சென்னையில் உள்ள ஹரிஜன துறை நெறியாளர் தமிழ நாட்டில் உள்ள எல்லாப் பகுதியில் இருக்கும் மாணவர்களுக்கும் உபகாரச் சம்பளம் வழங்கி வந்தார்கள். ஆனால் தற் போது அதில் கொஞ்சம் கால தாமதம் ஆயிற்று என்ற காரணத்தினால் அந்த அதிகாரத்தை மாவட்டங்களில் உள்ள பணியாளர்களுக்கு கொடுக்கப் பட்டிருப்பதாக அறிகிறேன். அதற்குப் பதிலாக இங்கே உள்ள அதிகாரிக்கே இன்னும் கொஞ்சம் அதிகமான உதவிப் பணியாளர்களைக் கொடுத்தால் தாமதமின்றி அவ் வேலையைத் துரிதமாகச் செய்வதற்கு வசதி ஏற்படும் இதைக் குறித்தும் இந்த அரசாங்கம் மறு பரிசீலனை செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பது பற்றி பல அங்கத்தினர்கள் பேசினார்கள். அவற்றில், குறையிருப்பதாகவும், இல்லையென்றும் கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. இவ் விஷயத்தில் எவ்விதமான குறையும் இல்லையென்று கூறமுடியாது. எனக்குத் தெரிந் தளவில் சில இடங்களில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டு அவைகள் இருப்பதற்கு, குடியிருப்பதற்கு லாயக்கின்றி இடிந்து விழுந்திருக்கின்றன. அத்தகைய வீடுகள் எங்கெங்கு இருக்கிறதென்று பார்த்து அவர்கள் குறைகளைப் போக்க வேண்டியது நம் கடமை. எந்த எந்தப் பகுதிகளில் கட்டிக் கொடுக்கப்பட்ட வீடுகள் குடியிருக்க லாயக்கின்றி இருக்கின்றதோ அவைகளைப் பார்த்து அவைகளைப் புதுப்பிக்கவோ அல்லது வேறு வீடுகள் கட்டிக் கொடுக்கவோ முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். ஹரிஜன குழந்தைகளுக்கு உணவு அளிக்கிறோம், உடை அளிக் கிறோம். அதேபோன்று அவர்களுக்கு பாடப் புத்தகங்களும் அளிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி புத்தகங்கள் அளித்தால் நலமாக யிருக்கும். பின்னர் உபகாரச் சம்பளம் கொடுப்பதில் தாமதம் ஏற்படுவதைத் தவிர்க்க கையாளப்படுகிற முறைகள் போற்றுதற்குரியது. இந்தத் துறை நெறியாளர்கள் அருமையான முறைகளை கையாண்டு வருகிறார்கள். அதற்காக அவர்களைப் பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். இவர்களுக்கு அந் தந்த இடங்களிலுள்ள கல்லூரிகள், பாடசாலைகள் இவைகளின் ஒத்துழைப்பு தேவைப்படுகிறது. அது சரியான முறையில் கிடைப்பதில்லை. ஆகவே அந்தந்த பள்ளிக்கூடங்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பி வேண்டிய விதத் தில் வேண்டிய ஒத்துழைப்பு அளிக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டியது நமது கடமை என்றும் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri P. M. MUNUSAMI GOUNDER :** கனம் சபாநாயகர் அவர் களே, ஹரிஜனத் துறை அமைச்சர் அவர்கள் கோரியிருக்கும் மானியத்தை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நமது அமைச்சர் அவர்கள் கடந்த நாலைந்து வருடங்களாக இந்தத் துறையை திறமையாக நல்ல முறையில் நிர்வகித்து பணியாற்றி வருவதற்காக அவர்களைப் பாராட்ட நாம் கடமைப்பட்டிருக்கிறோம். 1950—51-ல் கொடுக்கப் பட்ட மானியத்தை விட பத்து ஆண்டுகளுக்கு பிறகு அந்த மானியத் தொகை எவ்வளவு அதிகரித்திருக்கிறது என்பது கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களிலிருந்தே நாம் தெரிந்து கொள்ளமுடியும். ஆனால் இத்துறை செயல்படுவதில் காலதாமதம் ஏற்படுகிறது என்பது குறித்து எல்லோரும் எடுத்துரைத்தார்கள். ஸ்காலர்ஷிப் கொடுக்கும் விஷயத்தில் ஆண்டு ஆரம்பம் முதல் பள்ளிக்கூடம் மூடும் வரையில் ஸ்காலர்ஷிப், ஸ்காலர்ஷிப் என்று இருந்து கொண்டேயிருக்கிறது. அந்த முறை மாற வேண்டும். இந்த இலாகாவிற்கு உத்தியோகஸ்தர்கள் போதவில்லையென்றால்

[Sri P. M. Munusami Gounder] [14th March 1961

அவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டுமே தவிர வருடத்தில் ஒன்பது மாதங்கள் ஸ்காளர்ஷிப், ஸ்காளர்ஷிப் என்று கூக்குர லிடக் கூடிய நிலை மாறவேண்டும். மூன்று மாதங்களுக்குள்ளாகவே இந்த ஸ்காளர்ஷிப் வழங்கப்படவேண்டுமென்று நிலை ஏற்பட்டால்தான் மாணவர்களுக்கு நல்லது என்பதோடல்லாமல், எங்களை வந்து அடிக்கடி தொந்தரவு செய்வதும், அமைச்சர் அவர்களிடமும், டைரக்டர் அவர்களிடமும் படையெடுப்பதும் நிற்கும். பின்னர், ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் வழங்குவதைப் போல் பிற்போக்கான மக்களுக்கும் மனைக்கட்டுகள் வழங்க வேண்டும். ஹரிஜனங்கள் பிற்போக்கான நிலையில் இருக்கிறார்கள் என்பதற்காக அவர்களுக்கு பலவித சலுகைகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. வன்னியகுல ஷத்திரியர்களை எடுத்துக்கொண்டால் இந்த மாநிலத்தில் ஐந்தாறு ஜில்லாக்களில் அவர்கள்தான் பெரும்பான்மையின ராக வாழ்கிறார்கள். அப்படியிருக்கும்போது, அவர்களுக்கும் இந்த மாதிரி மனைக்கட்டுகள் வழங்குவதில் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஸ்காளர்ஷிப் வழங்குவதிலும், குடிசைத் கைத்தொழில் கள் அமைப்பதிலும் ஜில்லாவாரியாக நிர்ணயித்தால் நன்றாகயிருக்கும். சில ஜில்லாக்களில் பெரும்பான்மையான வேலைகள் நடக்கின்றன. சில ஜில்லாக்களில் வேலைகள் நடப்பதில்லை. சேலம் ஜில்லா ஜனத் தொகை யிலும், மற்ற விதத்திலும் பெரிய ஒரு ஜில்லா. புது சென்ஸஸ்படி அங்குள்ள ஜனத்தொகை, 36 லட்சம் என்று இருக்கிறது. அங்கு ஹரிஜன இலாகா மூலம் குடிசைத் தொழில்கள் போன்றவை செய்யப் பட்டிருக்கிறதா என்றால் இல்லை என்றுதான் கூறவேண்டியிருக்கிறது. வட ஆற்காடு ஜில்லாவிலும் அப்படித்தான். மற்ற ஜில்லாக்களுக்குள்ள நிலை சேலம் ஜில்லாவிற்கில்லை. வடஆற்காடு, சேலம் மாவட்டங்களிலுள்ள குறவர் களுக்கு கூடைமுடைவதற்காக நிதி உதவி அளிக்கிறோம் என்று கூறப் பட்டிருக்கிறது. சேலம் வட பகுதியில் பனை மரங்கள் அதிகமாயிருக்கின்றன. அந்த பனைமரத்திலிருந்து கிடைக்கிற ஓலைகளைக் கொண்டு குடிசைத் தொழில்கள் செய்ய வாய்ப்பிருக்கிறது. அதற்கு கிருஷ்ணகிரியில், மத்தூரில் ஒரு பயிற்சி நிலையம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அப்பேர்பட்ட நிலையங்களை ஹரிஜன இலாகா மூலம் அதிகரிக்க ஏற்பாடு செய்தால் பல பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கக்கூடிய நிலை ஏற்படும். சமுதாய நிலையங்களை எடுத்துக்கொண்டால் சேலம் ஜில்லாவில் முரப்பூரில் ஒன்று நிறுவப்பட்டிருப்பதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. வேலை வாய்ப்பைப் பற்றி கவனிக்கும்போது, ஜில்லாவிற்கு ஜில்லா அதிக தாரதம்மியம் இருக்கிறது. ஆகவே, ஜனத்தொகை அடிப்படையில் வேலை வாய்ப்புகள் அமைத்துக் கொடுத்தால், வேலை வாய்ப்பு வசதி பரவலான முறையில் கிடைப்பதற்கு வழி ஏற்படும். அங்குள்ள பிற்போக்கு மக்களும் அதனால் பயனடைய முடியும். பின்னர், ஹரிஜன இலாகா வீடுகள் கட்டிக் கொடுப்பதை நிறுத்திவிட்டு மனைக்கட்டுகள் வழங்கியே அவர்கள் முன்னேற்றத்திற்கு வழி காட்ட முடியும். மனைக்கட்டு இல்லை என்ற பிரச்சனையே இல்லை என்ற நிலை ஏற்படுத்தினாலே அதுவே ஒரு பெரிய சேவையாகும். ஹரிஜனங்களைத் தவிர, வன்னியகுல க்ஷத்திரியர்கள்போன்று பல வகுப்பார் இன்று கஷ்டப்படும் நிலையில் இருக்கிறார்கள். வட ஆற்காடு சேலம் மாவட்டங்களில் கஷ்டப்படுபவர்களின் எண்ணிக்கை ஏராளம. ஆகவே, யக்கள் கஷ்டப்படக்கூடிய நிலையை அகற்ற ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[மணியடிக்கப்பட்டது.]

வன்னியகுல க்ஷத்திரிய மக்களுக்கும் ஸ்காளர்ஷிப் சலுகை கொடுத்து அவர்களுக்கு படிப்பதற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பின்னர் கிருஷ்ணகிரியில் ஹரிஜன இலாகாவின் ஒரு விடுதியிருக்கிறது. அங்கு ரெயில்வே நிலையமும் இருக்கிறது. இங்கு இப்பொழுதிருப்பதை விட இரட்டிப்பு மடங்கு மாணவர்கள் தங்க வசதியிருக்கிறது. அங்கு மாணவர்களை அதிகம் சேர்க்கவும், பிற்போக்கு வகுப்பு மாணவர்களும் அங்கு சேர்ந்து படிப்பதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். அமைச்சர் அவர்கள் வந்த பிறகு 20 மாணவர்களை அதிகப்படுத்தியிருக்கிறார்கள். அதோடு

ஹரிஜன மக்களோடு மற்ற வகுப்பினரும் சேர்ந்து படித்தால் சமூகத்தில் ஹரிஜன்ஸ், நாண்-ஹரிஜன்ஸ் என்ற வித்தியாசமில்லாத நிலை ஏற்படும். ஆகவே, இவர்கள் பாதி அவர்கள் பாதி என்று சேர்த்தால் நன்றாயிருக்கு மென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

Sri J. MATHA GOUDER : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இந்த ஹரிஜன இலாகா மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். 1950—51-ல் இந்த இலாகாவுக்காக 69 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இப்போது பத்து வருடங்களுக்குப் பின்னால் 1960—61-ல் 335 லட்ச ரூபாய் இந்தத் துறைக்காக செலவு செய்வதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. பத்து ஆண்டில் ஐந்து மடங்கு அதிகரித்திருக்கிறது. இது மிகவும் பெருமைப் படக்கூடிய விஷயம் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த இலாகா பொறுப்பை நமது அமைச்சர் கக்கன்ஜீ அவர்கள் ஏற்றுக் கொண்ட பிறகு ஹரிஜனங்களுக்காக எவ்வளவோ சேவை செய்திருக்கிறார் கள். அதைப்பற்றி சொல்லப்போனால் எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம். சாந்தமே உருவான முகத்துடன், மக்களுக்கு என்னென்ன காரியங்களை யெல்லாம் செய்யவேண்டுமோ அவைகளை எல்லாம், அன்பாக மக்களிடத்தில் கலந்து பேசி செய்யக்கூடியவர் என்று சொன்னால் மிகை யாகாது. இதே நேரத்தில் இருக்கக் கூடிய குறைகளை எடுத்துச் சொல்லும் போது எதிர் கட்சியிலுள்ளவர்கள் வேண்டுமென்றால் நினைக்கலாம், இவர் களும் குறைகளைத் தானே எடுத்துச்சொல்லுகிறார்கள் என்று. எந்த இலாகாவை எடுத்துக்கொண்டாலும், அந்த இலாகாவில் இருப்பவர்களை அறியாமலேயே பல குறைகள் ஏற்படலாம். அதை எடுத்துச் சொல்லு வதற்காக சட்டமன்ற அங்கத்தினர்களாகிய நாம் இங்கு இருக்கிறோம். அதை நாம் எல்லோரும் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். இவ் விதம் இலாக்காக்களில் இன்னின்ன குறைகள் இருக்கின்றன என்று எடுத்துச் சொன்னால் அதை இலாகாவினர் பரிசீலனை செய்து அதை நீக்குவதற்கு முயற்சிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்த முறையில் என்னுடைய மாவட்டத்தைப் பொறுத்தவரை ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்பு கிறேன். ஸ்காலர்ஷிப் கொடுக்கும் விஷயத்தில் பிற்பட்ட வகுப்பிலுள்ள மாணவர்களுக்கு, 50 சதவிகிதம் மார்க் எடுக்கவேண்டும் என்று நிர்ண யிக்கப்பட்டிருக்கிறது. இதை 45 சதவிகிதம் என்று நிர்ணயித்தால் நலமாக இருக்கும். இதை அமைச்சர் அவர்கள் சற்று யோசனை செய்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இரண்டாவதாக, என் னுடைய மாவட்டத்தைப் பொறுத்த வரை இதற்காக 667 விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. இதில் 24 விண்ணப்பங்கள் தான் சாங்க்ஷன் செய்யப் பட்டது. 495 விண்ணப்பங்கள் ரிஜக்ட் செய்யப்பட்டிருக்கிறது. இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. மார்க் அடிப்படையில் தான் இத்தனை விண்ணப்பங்களும் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன என்று இருந்தால் இந்த 495 பேர்களுக்கு எந்த விதமான கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கும் என்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப்பார்க்கவேண்டும் என்று பணிவன் போடு கேட்டுக்கொள்ளுகிறேன். 667 விண்ணப்பங்களில் 24 விண்ணப்பங்கள் தான் சாங்க்ஷன் செய்யப்பட்டிருக்கிறது என்றால் அதைப்பற்றி சற்று சிந்தித்துப்பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நீலகிரி வட்டாரத்தில் இருக்கக்கூடிய பிற்போக்கு வகுப்பிலுள்ள மக்கள் கல்வி பெறக் கூடிய வாய்ப்பு இல்லாமல் போய்விடும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்படியே விட்டுவிட்டால் மேலும் பின்தங்கிய மாணவர்கள் பின்தங்கியே இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டு விடும் என்பதைத் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

The Hon. Sri P. KAKKAN : எந்த ஸ்காலர்ஷிப்பைப் பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிறார்கள் என்பதை தெரிவிக்கவேண்டு கிறேன். மத்திய சர்க்காரால் கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப்பா அல்லது ராஜ்ய சர்க்கார் கொடுக்கும் ஸ்காலர்ஷிப்பா என்பதை தெரிவிக்கவும்.

[14th March 1961

SRI J. MATHA GOUDER: ராஜ்ய சர்க்கார் கொடுக்கும் ஸ்காலர் ஷிப்பைப் பற்றித்தான் குறிப்பிட்டேன். அந்த ஜில்லாவில் ஆதிவாசிகள் அதிகமாக இருந்து வருகிறார்கள். ஹரிஜன மக்களை எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு கிராமத்திலும், பட்டணத்திலும இருந்து வருகிறார்கள். ஆனால் ஆதி வாசிகளை எடுத்துக் கொண்டால் முக்கால் வாசி பேர்களும் காட்டுப் பிரதேசங்களில்தான் இருந்து வருகிறார்கள். அவர்கள் வசிப்பதற்குக் கூட வீடு இல்லாமல் கல்லிலேயே ஒதுங்கி தங்கி வருகிறார்கள். நீலகிரி ஜில்லாவில், இருளர், குரும்பர் இவர்களுக்கு சில வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இருந்தாலும் அவர்களுக்கு போதிய அளவு கட்டிக்கொடுக்கப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இருளர், குரும்பர் இவர்களுககுத் தகுந்த ஒரு நல்ல ஏற்பாடு செய்து கொடுக்கவேண்டும் என்று பணிவன்போடு கேட்டுக்கொள் கிறேன். இன்னும் ஆதிவாசிகள் இருக்கககூடிய பல ஊர்களில் ரோடு வசதி கிடையாது. அந்த மக்களுக்கு கிடைக்கின்ற விளைபொருள்களை கொண்டு வருவதற்கு எந்தவிதமான ரோடுவசதியும் இல்லாமல் இருக்கிறார்கள். குறிப்பாக ஜக்கநாரை, கொணவக்கரை போன்ற இடங்கள் கோத்தகிரி வட்டாரத்தில் இருக்கின்றன. இந்த இடங்களில் ஆதிவாசி மக்களேதான் இருக்கிறார்கள். இந்த இடங்களுக்கு போவதற்கு ரோடு வசதி கிடையாது. அதை சற்று யோசித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அமைச்சர் அவர்களும் இந்த இடங்களை எல்லாம் நேரடியாக பார்வை யிட்டிருக்கிறார்கள் என்பதை ஞாபகமூட்ட விரும்புகிறேன். அவர்களுக்கு மொபைல் மெடிக்கல் யூனிட் வசதி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ரோடுகள் ஒன்றுமே இல்லாத இடங்களில் போய் மருத்துவ இலாகாவினர் எப்படி மருத்துவம் பார்க்கப்போகிறார்கள்? ஆகவே குஞ்சப்பனை என்ற இடத்திலிருந்து இந்த இடங்களுக்கு ரோடு வசதி செய்து கொடுக்க வேண்டும். அங்குள்ள ஆதிவாசி மக்களுக்கு ரோடு மிகவும் அவசியமாக இருக்கிறது. பொதுவாக ரோடுவசதி செய்து கொடுப்பதற்காக இந்த ஆண்டு 20 ஆயிரம் ரூபாய்மட்டும் ஒதுக்கியிருக்கிறார்கள். இந்த ரூபாயைக் கொண்டு எப்படி போட முடியும்? நீலகிரி ஜில்லாவில் ஒரு மைல் தூரத்திற்கு ரோடு போட வேண்டும் என்றாலேயே 20 ஆயிரம் ரூபாய் வேண்டும். அப்படி யிருக்கும்போது இந்த மாகாணம் முழுவதிற்குமாக 20 ஆயிரம் ஒதுக்கி யிருப்பது எந்த அடிப்படையில் என்று எனக்குப்புரியவில்லை. குறைந்தது 5 லட்சம் ரூபாயாவது வருடம் ஒன்றுக்கு ஒதுக்கினால்தான் அவர்களுக்கு கிராமங்களோடும், நகரங்களோடும் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள முடியும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே போன்று விவசாயக் கருவிகள் வாங்குவதற்காக 50 ரூபாய் கொடுக்கப் போவதாக சொல்லி யிருக்கிறார்கள். எங்கள் பிரதேசத்தில் ஒரு முள் (∴ போர்க்) வாங்கவேண்டு மென்றாலேயே 25 ரூபாய் கொடுக்கவேண்டும். ஆகவே இந்தத் தொகை போதாது, இதைவிட இன்னும் கூடுதலாகக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த மாகாணம் பூராவிலும் ஆதிவாசிகளுக்கு என்று 363 வீடுகள் கட்டிக்கொடுக்க திட்டமிட்டிருக்கிறோம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. இது மிகவும் குறைவானது, இதை அதிகரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். குறைந்தது வருடம் ஒன்றுக்கு 1000 வீடுகளாவது கட்டினால்தான் மூன்றாவது, நான்காவது ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் எல்லா ஆதிவாசிகளுக்கும் வீடுகள் கட்டி முடிக்க முடியும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்:

மேலும் சில கிராமங்களுக்கு ஒரு கிராமம் மாதிரி கிராமமாக எடுத்து அதில் பல வசதிகளை செய்து கொடுத்து வருகிறார்கள். அந்த முறையில் குன்னூர் பகுதியில் நெடுங்கல் கோம்பை என்ற கிராமத்தை மாதிரி கிராமத் திற்காக எடுத்திருக்கிறார்கள். அதற்காக எங்கள் மாவட்டத்தின் சார்பில் அரசாங்கத்திற்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். அம்மாதிரி ஒவ் வொருமாவட்டத்திற்கும் ஒவ்வொரு கிராமத்தை மாதிரி கிராமமாக எடுத்துக் கொண்டால் நன்றாக இருக்கும் என்பதை அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஹரிஜன மக்களுக்கு வீடு கட்டிக் கொடுப்பதில் இன்றைக்கு ப்ளான் கிரௌண்டில் 750 ரூபாய்க்கு வீடுகள் கட்டிக்கொடுப்ப தாகவும், இதை இப்போது 1,000 ரூபாய் என்று உயர்த்தப்போவதாகவும் சொல்லுகிறார்கள். நீலகிரி ஜில்லாவை எடுத்துக்கொண்டால் 1,000

14th March 1961] [Sri J. Matha Gouder]

ரூபாய்க்கு வீடே கட்ட முடியாது. குறைந்தது 1,500 ரூபாய் இருந்தால்தான் ஒரு சிறிய வீடு கட்ட முடியும். ஆகவே, குறைந்தது 1,500 ரூபாயாவது வீடு கட்டுவதற்கு ஒதுக்கவேண்டும். என்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக மலைப்பிரதேசங்களில் அதிகமாக ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். அதோடு ஹரிஜனங்களுக்கும், பிற்பட்ட மக்களுக்கும மின்சார வசதி செய்து கொடுக்கும் விஷயததில் அவர்களுக்கு பாதி கட்டணத்திற்கு மின்சாரவசதி கொடுக்கும்படியாக மின்சார அமைச்சர் அவர்களை ஹரிஜன நல இலாகா அமைச்சர் அவர்கள் கேட்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். மின்சார அமைச்சர் பண வரும்படியிலே மட்டும் கருத்தாக இருக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஹரிஜன மாணவிகளுக்கு உடை வழங்கும் திட்டம் மிகவும் நல்ல திட்டமாக இருந்து கொண்டிருக்கிறது. இந்தத் திட்டத்திற்காக 3 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதுவும் போதாது என்று நினைக்கிறேன். இதையும் அதிகரிப்பதற்கு ஏதாவது செய்ய முடியுமா என்பதைப்பற்றி பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இதற்காக துணிவாங்கும் போது கதர் துணியையே வாங்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதிலும் நல்ல துணியாக, கெட்டி துணியாகப் பார்த்து வாங்கி மாணவர்களுக்கு கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். இதற்கு 3 லட்சம் ரூபாய் போதாது என்று நினைக்கிறேன். இதை அதிகரிக்க வேண்டு மென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன் வணக்கம்.

Sri P. KOLANDA GOUNDER :—கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். ஹரிஜன மக்கள் முன்னேறுவதற்காக கொண்டுவந்துள்ள திட்டத்தை நான் வரவேற்று ஆதரிக்கிறேன். எனது ஏற்காடு தொகுதியில் இருக்கக்கூடிய மக்கள் ஹரிஜனமக்கள்,—மலை ஜாதியினர்,—மிகவும் ஏழை மக்களாக இருக்கிறார்கள்—ஒரு வசதியும் இல்லாது இருக்கிறார்கள். மழை பெய்தால்தான் மலை மேல் வெள்ளாமை இருக்கிறது. இல்லாவிட்டால் கூலி ஜீவனம் செய்து வருகிறார்கள். அவர் களுக்குக் கிடைக்கக் கூடிய கூலி கட்டுபடியாகாமல் அவர்கள் கஷ்டப்படு கிறார்கள். தேயிலை, காப்பி இவைகளைப் பறிப்பதில் அவர்களுக்கு இன்னும் 8 அணா கூட்டிக் கொடுத்தால் அவர்கள் முன்னுக்கு வருவார்கள் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

சேர்வராயன் மலையில் இருக்கக்கூடிய மலை ஜாதியினருக்கு 5 முதல் 20 மைல்கள் வரையில் இருக்கக் கூடிய ஊர்களுக்கு ஒரு வசதியும் இல்லாமல் இருக்கிறது—ரோடு வசதி இல்லை, பள்ளி வசதியில்லை. குடி தண்ணீர் கிணறு இல்லை. ஏற்காடு டவுன் பக்கமாக இருக்கக் கூடிய ஊர்களுக்குத்தான் வசதி இருக்கிறது. தூரமாக இருக்கக்கூடிய ஊர்களுக்கு எந்தவிதமான வசதியும் இல்லை நடந்து போனாலும் 10 மைல் நடக்க முடியவில்லை. அவர்கள், நாங்கள் விவசாய கந்தாயம் கட்டவில்லையா, ரோடு கந்தாயம் கட்டவில்லையா, மாட்டுக் கந்தாயம் கட்டவில்லையா, மரக் கந்தாயம் கட்டவில்லையா, என் ரோடு போடவில்லை என்று என்னைக் கேட்கிறார்கள். நான் சட்டசபையில் போய் சொல்லுகிறேன், மந்திரியை கேட்கிறேன் என்று சொல்லியிருக் கிறேன். கனம் அமைச்சர் கக்கன் அவர்கள் கூட ஏற்காட்டுக்கு வந்தபோது சொல்லியிருக்கிறார்கள். உடனடியாக அதைக் கவனிக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

வாழைப்பாடி பகுதியில் வேலூரிலிருந்து புழுதிப்பட்டிக்கு போவதானால் ரோடு கிடையாது. சைக்கிளில் கூட போக முடியாது. அங்கு ஒரு மீட்டிங் போட்டார்கள். நான் அதற்கு கால்நடையாகத்தான் போனேன். அங்கே சுமார் 10 ஊர்கள் இருக்கின்றன. மலைமேல் விளையக் கூடிய பொருள்களை சந்தைக்குக் கொண்டுவர வேண்டியிருக்கிறது. அங்கே ஒரு பஸ் போட்டால் ஜனங்களுக்கு வசதியாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri P. Kolanda Gounder] [14th March 1961

காரப்பட்டி பகுதியில் அயோத்திபாண்டத்திலிருந்து சேர்வராயன் மலையில் ஒரு ரோடு போகிறது. அதன் அடிவாரத்தில் பல ஊர்கள் இருக்கின்றன. இதைப்பற்றி முன்பே கூட நான் சட்டசபையில் பேசியிருக்கிறேன். ரோடுக்கும் ஊருக்கும் மத்தியில் ஒரு ஆறு வருகிறது. சேர்வராயன் மலையில் மழை பெய்தால் 2 கஜம் தண்ணீர் வருகிறது. ஜனங்கள் அந்தந்த இடத்தில் நிற்கவேண்டியிருக்கிறது. அதனால் ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. ஆற்றுக்கு ஒரு பாலம் கட்டிவிட்டால் மக்களுக்கு வசதியாக இருக்கும், அங்கிருந்து கிழங்கு, மொச்சைக்கொட்டை, கொட்டைமுத்து, சோளம், கேழ்வரகு, மஞ்சள், இவைகளை டவுனுக்குக் கொண்டுவந்து விற்று அதற்குப் பதில் உரத்தை வாங்கிக் கொண்டுபோய் பயன்படுத்தி வருகிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இதைப் பற்றி நான் 1958-லிருந்து கேட்டுக்கொண்டிருக்கிறேன். இன்னும் இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட வில்லை. ஆகையால் இதை உடனடியாகக் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு அயோத்திபாண்டத்திலிருந்து மலை அடிவாரம் வரையில் ஒருசிறிய ரோடு போகிறது—சிறிய ரோடாக 3 மைல் தூரம் போகிறது. நடுவில் 7,8 ஊர்கள் இருக்கின்றன. அங்கிருந்தெல்லாம் பொருள்கள் அயோத்தி பாண்டத்திலுள்ள சந்தைக்கு வரவேண்டும். அவைகளை தலைச்சுமையாக எடுத்துக் கொண்டு வருகிறார்கள். ஆகையால் இந்த ரோடை அகலப்படுத்தி 12 அடியாக இருந்தால் சுமைகளை நல்ல முறையில் எடுத்துச் செல்ல வசதியாக இருக்கும். இதைப்பற்றி நான் 1959-லே பேசியிருக்கிறேன். இது கூட இன்னும் நடைபெறவில்லை. இதை உடனடியாக அமைக்கவேண்டு மென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

பனைமரத்துப்பட்டி பகுதியில் இருக்கக்கூடிய குறைபாடுகளைப் பற்றி எல்லா அமைச்சர்களுக்கும் சொல்லியிருக்கிறேன். சேலத்திலிருந்து மங்களாபுரம் 25 மைல் இருக்கிறது. 7 மைல் வரையில் பஸ் போகிறது. பாக்கி 17—18 மைலுக்கு ஒரு வசதியும் கிடையாது. ஆஸ்பத்திரியோ, பள்ளிக்கூடமோ ஒன்றும் கிடையாது. அங்குள்ள மக்கள் என்ன சொல்லு கிறார்களென்றால், நீ போய் சட்டசபையில் என்ன செய்கிறாய், என்ன கேட்கிறாய், இந்த வசதியையெல்லாம் ஏன் இன்னும் செய்யவில்லை என்று கேட்கிறார்கள். இங்கே மந்திரியிடம் சொன்னால் தலையைத் தலையை ஆட்டுகிறார்கள். பெரிய ஆண்டவன் மாடு வைத்திருப்பவன் மகராஜன் கொடுப்பாரா என்று கேட்டால் அது தலையை தலையை ஆட்டும். அந்த மாதிரி மந்திரிகளிடம் சொன்னால் பார்க்கலாம், பார்க்கலாம் என்று சொல்லுகிறார்கள். கனம் அமைச்சர் ராமையா அவர்களுக்குத் தெரியும். அவர்கள் பனைமரத்துப்பட்டி வரையில் வந்திருக்கிறார்கள். அவர்களிடம் நேரிலேயே மலைஜாதியினர் தங்கள் குறைகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவரோடு டில்லி உதவிமந்திரி ராமசாமி அவர்களும் வந்தார்கள். அவர் சொல்லியிருந்தார், 2 மாதத்தில் பஸ் வந்துவிடும் என்று. அதற்குமேல் மின்சாரம் வரும் என்று சொல்லியிருந்தார். 2 மாதத்தில் வரும் என்று சொன்னார்களே, 4 மாதம் ஆகிவிட்டதே ஏன் இன்னும் வரவில்லை என்று கேட்கிறார்கள். அதற்கு நான் நமது தாய் தந்தையர்கள் கூட சீக்கிரத்தில் செலவழித்து விடுவோம் என்று வயது ஆன பிறகு தான் கொடுக்கிறார்கள்; அந்த மாதிரி சர்க்கார் யோசனை செய்துதான் கொடுக்கவேண்டும், இரண்டு மாதமா என்றால் 4 மாதம் ஆனால்தான் வரும் என்று சொல்லியிருக்கிறேன். அடுத்தபடி ஓட்டு கேட்க இங்கு வருவாயா என்று கேட்கிறார்கள். அங்கு ஒரு ஆஸ்பத்திரியும் இல்லை, பள்ளிக்கூடம் இல்லை. ஆகையால் இவைகளை கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, 1957-லிருந்து 1960-க்குள் கோணமடுவு கிராமம் வரை யில் ஜல்லி போட்டிருக்கிறார்கள். அது வரையில் நல்ல ரோடாக இருக் கிறது. அதிலிருந்து கம்மாளப்பட்டி போக ஒரு தடவை ஜல்லி போட்டிருக் கிறார்கள். சேலத்திலிருந்து 15 மைல் வரையில் பஸ் போவதற்கு வசதி செய்தால்......

14th March 1961]

* SRI P. G. MANICKAM : மதிப்புக்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தை ஆதரித்து சர்க்காருக்கு சில ஆலோசனைகளைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். வருஷா வருஷம் இந்த மானியத்திற்கு அதிகத் தொகையை சர்க்கார் ஒதுக்கிக்கொண்டு அநேக நல்ல காரியங்களைச் செய்து கொண்டு வருகிறார்கள். இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையிலே கனம் நிதி அமைச்சர் மேலும் ஹரிஜன நலனுக்காக நிதி தேவைப்படுமானால் ஒதுக்க சர்க்கார் தயாராக இருக்கிறது என்று தெரிவித்தமைக்கு சர்க்காருக்கு எனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறிப்பாக இவ்வாறு தொகை ஒதுக்கினாலும் வீட்டு மனைக்கட்டுகள் பேரிலே இன்னும் தொகை தேவையாக இருப்பதால் இதை கவனித்து அதிகமாக ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தற்போது வீட்டு மனைக்கட்டுகளுக்காக 10 லட்சம் ரூபாய் மத்திய அரசினரால் ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இத்துடன் கூட 4½ லட்சம் தனியாக ஒதுக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. ஆனால் இப்போது எங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் ஹரிஜன நலத் துறை மான்யக் கோரிக்கை புஸ்தகத்திலே 44-வது பக்கத்திலே தேவைப் படும் தொகை ரூ. 31,55,000 என குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் இங்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையோ 14½ லட்சம்தான். இன்னும் அதிக மானத் தொகை வேண்டியிருக்கிறது. ஆகவே நம்முடைய அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு இந்நிலையை எடுத்துரைத்து, தேவையான தொகையைப் பெற்று ஹரிஜன நல முன்னேற்றத்திற்கு உதவிசெய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த வீட்டு மனைக்கட்டு பற்றிய தொல்லைகளைப் பற்றி கடந்த இரண்டு ஆண்டுகளாக சொல்லிக்கொண்டு வருகிறேன். ஆகவே, இப் போதாவது எல்லா ஹரிஜனங்களுக்கும் வீட்டு மனைக்கட்டுகள் கட்டு வதற்கான ஒரு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று மிகவும் தாழ்மை யுடன் கேட்டுக்கொள்கிறேன். அதோடு வீட்டு மனைக்கட்டுகளை ஆர்ஜிதம் செய்வதிலே பல இடையூறுகள் இப்போது இருந்து வருகின்றன. இதற்காக விசேஷ கர்ணங்கள் போட்டு, வேலை செய்தாலொழிய நல்ல முறையிலே வேலை நடக்காது என்று அறிந்து, துரித ஏற்பாடுகளைச் செய்வதற்கு கலெக்டர்கள் ரிப்போர்ட் சமர்ப்பிக்கவேண்டுமென்று அரசாங் கம் உத்திரவு பிறப்பித்திருப்பதைப் பாராட்டுகிறேன். இப்படி காரியங் களை செய்தாலொழிய நிலங்களை ஆர்ஜிதம் பண்ணுவது என்பது அவ் வளவு எளிதில் நடைபெறக் கூடியதல்ல. அதோடு, சட்டக் கமிஷனின் சிபாரிசுகளை அனுசரித்து, சட்டத்தைத் திருத்தவும், குறைக்கவும், ஆலோ சித்து வருவதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்படி சட்டத்தில் திருத்தம் செய்யும்போது முக்கியமாக சர்க்கார் கவனிக்க வேண்டியது 4 (1) நோடிபிகேஷன் ஆகும். இந்தத் திருத்தம் கண்டிப்பாகத் தேவை. அப்படிப் போட்டால்தான் இந்த அவகாசம் கொடுக்கவேண்டிய தேவையோ, அவசியமோ ஏற்படாது. 30 நாளைக்கு அவகாசம் கொடுக்கவேண்டுமென்று சட்டத்தில் இருக்கிறது. இது தேவையே யில்லை. சர்க்கார் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் நேராய் பார்த்து, அந்த நிலம் நமக்குத் தேவையாக உள்ளது என்று தெரிவித்த பின்னரோ அல்லது ஜில்லா சுகாதார அதிகாரி தன்னுடைய சம்மதத்தைத் தெரி வித்த பின்னரோ, அந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்வதிலே எந்த விதத்திலும் சிந்திப்பதற்கு அவகாசமே இருக்கக்கூடாது. சர்க்காருக்கு அது தேவை என்று ஏற்பட்டவுடன், அதை எடுத்துக்கொள்ள வேண்டும். அந்த முடிவுக்கு வந்தபோது, இந்த 4 (1) நோடிபிக்கேஷன் என்பதை எடுக்க வேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். இதற்கு போர்ட் செயின்ட் ஜார்ஜ் கெஜெட்டில் பிரசுரிக்க வேண்டுமென்று அவசியம் கூட இல்லை. ஜில்லா கெஜட்டில் பிரசுரம் செய்தாலே போதும். அப்படி இந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்வதிலே கொஞ்ச அவகாசம் கொடுப் போமேயானால் அதனால் எப்படியும் நிலச் சொந்தக்காரர்கள் ஏதாவது ஒருவித நடவடிக்கை எடுத்துக்கொண்டு, அங்கு ஒரு கட்டிடத்தையோ, நடை பாதையையோ அல்லது கிணற்றையோ கட்டிக்கொண்டு, அந்த நிலம் தங்களுக்கு வேண்டும் என்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்பட்டு

விடுகிறது. ஆகையினாலே இந்த 4 (1) நோடிபிகேஷன் சம்பந்தமாக நல்ல முறையிலே நடவடிக்கை எடுத்துக்கொண்டு, இந்த நில ஆர்ஜித சட்டத்தை திருத்தி அமைக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

அடுத்ததாக, வீடு கட்டும் திட்டத்திலே தற்போது கனம் அமைச்சர் அவர்கள் 1,000 ரூபாய் அளிக்கப்படுகிறது என்று தெரிவித்துள்ளார்கள். ஆனால் முந்தி கொடுக்கப்பட்ட குறிப்பிலே உள்ளூர் நிலைமைக்கு ஏற்ப மேற்கொண்டு கொடுக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரண்டிலே எது பொருந்தும் என்று புரிந்துகொள்ள முடியவில்லை. தற்போது இருக்கிறபடி இனமாக 550 ரூபாயும், கடனாக 200 ரூபாயும் என்று இருக்கிறது. ஆனால், இதில் எது எப்படி என்பது தெரியவில்லை. 1,000 ரூபாய் கொடுக்கும்பொழுது இதிலே எவ்வளவு தொகை மானியமாகக் கொடுக்கப்படுகிறது எவ்வளவு தொகை கடனாகக் கொடுக்கப்படுகிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் விளக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தது மின்சாரம். இந்த சட்டசபையிலே நான் அடிக்கடி தெரிவித்துக்கொண்டு வருகிற முக்கியமான விஷயம் இது. 1957-ம் வருஷத்திலிருந்து ஹரிஜனத் தெருக்களுக்கு மின்சாரம் போடும் திட்டமானது எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஏறக்குறைய 10 வருஷங்களில் அமுலுக்கு கொண்டுவந்து எல்லா இடங்களிலும் இதைப் போடவேண்டுமென்று வருஷந்தோறும் 1·5 லட்சம் ஒதுக்க வேண்டுமென்று திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இப்போது 1957 முதல் 1960 வரைக்கும் கிட்டத்தட்ட ஒதுக்கப்பட்ட தொகையிலே சுமார் 5 லட்சம் ரூபாயிலே இதுவரைக்கும் சுமார் 500 தெருக்களுக்கு மட்டும்தான் மின்சார விளக்கு போடப்பட்டிருக்கிறது. இன்னும் 5 வருஷங்களில் இன்னும் 500 தெருக்களுக்கு மின்சார விளக்கு போடலாம். ஆனால் இப்போது இருக்கக்கூடிய சூழ்நிலையை எடுத்துப் பார்த்தால்.. ...

DEPUTY SPEAKER : (மணியடித்து) இன்னும் ஒரு நிமிஷம் தான் நீங்கள் பேசுவதற்கு இருக்கிறது.

SRI P. G. MANICKAM : இன்னும் ஒரு நிமிஷமா, இல்லை, மூன்று நிமிஷங்கள் இருக்கின்றன.

DEPUTY SPEAKER : அதை நீங்கள் எனக்குச் சொல்லத் தேவையில்லை.

SRI P. G. MANICKAM : அப்படியானால் இப்போதே நிறுத்திக் கொள்ளுகிறேன்.

SRI T. P. ELUMALAI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தை ஆதரித்து சில அபிப்பிராயங்களைச் சொல்லப் பிரியப்படுகிறேன். ஹரிஜன மான்யத்தை எதிர்த்தும், ஆதரித்தும் இந்த மான்யம் செய்யப்படாமல் தீர்மானமாக இருக்கவேண்டும் என்ற கருத்தோடும், இல்லை இது அவசியமாக நிறைவேற்றப்படவேண்டுமென்ற கருத்தோடும் பலர் பேசியிருக்கிறார்கள். உண்மையிலே என்னைப் பொறுத்த மட்டிலும் இது நிறைவேற்றப்படவேண்டும் என்கின்ற எண்ணத்திலே தான் நான் பேசுகிறேன். ஹரிஜன முன்னேற்றத்தைப் பொறுத்தவரையில் இந்த சர்க்கார் கூடுமானவரையில் எல்லாத் திட்டங்களையும் நிறைவேற்றிக்கொண்டு வருகிறார்கள். ஆனால், என்னைப் பொறுத்தமட்டில் மேலும் ஹரிஜன முன்னேற்றத்திற்காக பணம் ஒதுக்கியோ அல்லது நல்ல சட்டங்கள் செய்திருக்கிறோம் என்று எண்ணுவதாலோ ஹரிஜன முன்னேற்றம் வந்துவிடும் என்று நான் நினைக்கவில்லை. குறிப்பாக, காங்கிரஸ் சர்க்கார் இன்றைக்கு நிறைவேற்றி வருகின்ற திட்டங்களையும், இந்தத் துறைக்கு ஒதுக்கியுள்ள பணத்தையும் நல்லமுறையிலே பயன்படுத்துவதற்கு, நல்ல எண்ணமுடைய பெரியோர்கள் இந்தப் பிரசாரத்தினாலும், தங்கள் செய்கையினாலும் செய்துகாட்ட வேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். அதைவிட்டு, போதிய பணம் ஒதுக்கவில்லையே என்று கணக்குப்

போட்டுச் சொல்வதாகச் சொல்லி, தாங்கள் ஹரிஜனங்களுக்கு இதைச் செய்துவிட்டோம், அதைச் செய்துவிட்டோம் என்று வெளியிலே பிரசாரம் செய்வதற்கு இது உபயோகமாக இருக்கும் விதத்திலே இதை அமைத்துக் கொள்ள வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் இப்போது ஹரிஜன மான்யத்திலே பலபேர் இப்படிப் பேசிக்கொண்டு வந்ததை நான் பார்த்தேன். ஏதோ பேசவேண்டுமென்று சுற்றி வளைத்துப் பேசியிருக்கலாம். இருந்தாலும் பரவாயில்லை. கருத்திலே அதை வைத்துக்கொண்டு செயலிலே எந்தெந்த முறையிலே அவர்களுக்கு மேலும் நன்மைகளைச் செய்யலாம் என்று செய்தால் நல்லது என்று நான் நினைக்கிறேன்.

உண்மையில், இப்போது நான் சொல்லக்கூடியது இந்த சட்டசபையிலே கூடி இருக்கின்ற பல பெரியோர்களுக்கும் நன்கு தெரியுமென்று நம்புகிறேன். இந்த சட்டசபையிலே உள்ள அங்கத்தினர்கள் எல்லோரும் சென்னையைச் சுற்றிப்பார்த்திருப்பார்களென்று நம்புகிறேன். சென்னை ரோடு ஓரங்களிலே உள்ள ஏழை மக்களுடைய குடிசைகளையெல்லாம் அப்போது பார்த்திருப்பார்கள். அப்படிக் கஷ்டப்படுகிறவர்களுக்கு உடனடியாக உதவி செய்யவேண்டுமென்ற எண்ணத்தோடு, அங்குள்ள குடிசைகளையெல்லாம் அகற்றி அவர்களை வேறொரு நல்ல இடத்திலே அமைக்கவேண்டுமென்று சர்க்கார் திட்டமிட்டால், அது சர்க்காருடைய குற்றமா ? என்று கேட்க விரும்புகிறேன். சர்க்கார் அவர்களை சுகாதாரமான, வசதியுள்ள இடத்தில் குடியமைக்க வேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடுதான் இந்தக் காரியத்தைச் செய்கிறார்கள். இதிலே சர்க்கார் எந்தவிதமான குற்றத்தையும் செய்யவில்லை. ஆனால், நீங்கள் எல்லாம் அப்படிப் போகவேண்டாம், உங்களுக்கு தூரமாக இருக்கும், பக்கத்திலேயே இடங்கள் கொடுக்கும்படி கேளுங்கள் என்று அவர்களை அனாவசியமாக முடுக்கிவிட்டு வேடிக்கை பார்க்கிறார்கள் சிலர். இப்படிச் சொல்வது அவர்களுக்கு நன்மை செய்வது போல தெரியவேண்டுமென்பதற்காகச் சொல்லப்படுகிறது. இதை எதற்கு நான் இங்கு சொல்கிறேன் என்றால், உண்மையிலேயே இவர்களுக்கு—ஹரிஜனங்களுக்கு சேவை செய்யவேண்டுமென்ற எண்ணம இருநதால், இப்படிச் செய்வார்களா என்பதைத் தெரியப்படுத்துவதற்காகத்தான். அரசாங்கமோ அவர்கள் நல்ல இடததில், சுகாதாரமான இடத்தில் வாழ வழி செய்யவேண்டுமென்று நினைததுச் செய்கிறது. ஆனால் இவர்களோ, அதற்கு எதிராக கட்சியினுடைய பலத்திற்காக, நீங்கள இப்போது இருக்கும் இடத்தைவிட்டுப் போகாதீர்கள், இப்போதுள்ள இடம் தொழிற்சாலைககுப் பக்கத்திலேயே இருக்கிறது, போக்குவரததிற்கும் வசதியாக இருக்கிறது என்ற ஆசைவார்த்தைகளால் சூழ்ச்சிப் பிரசாரம் செய்துவருகிறார்கள். ஆகவே இந்த விஷயத்திலே எவ்வளவுதான் பணத்தை ஒதுக்கினாலும், சட்டத்தைப் போட்டிருந்தாலும் பிரயோஜனமில்லை. இது சரியான முறையிலே நடைபெற வேண்டுமானால், இந்த சட்டசபையிலே உள்ள அனைவரும் ஒத்துழைக்க வேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். உண்மையிலேயே மற்றெல்லா முன்னேற்ற வேலைகளையும்விட இந்த சமூக முன்னேற்ற வேலையில் ஈடுபடுவது, இவ்வேலை மிகவும் கஷ்டமான வேலையாகும், இந்த வேலையைச் செய்வதற்கு நன்கு படித்தவர்கள்தான் தகுதியுள்ளவர்களாக இருக்கமுடியும் என்று சொல்வதற்கே இடமில்லை. அப்படியும் சிலர் பேசிக்கொண்டு வருவதால், அந்தப் பேச்சுக்கே இடமிருக்கக்கூடாது என்பதற்காகத்தான், அதைத் தவிர்க்க வேண்டுமென்பதற்காகத்தான், இது காலாவட்டத்தில் ஒரு முடிவாகிவிடக்கூடாதே என்பதற்காகத்தான் இந்த சபையிலே இதை நான் குறிப்பிட விரும்புகிறேன். இந்த நிலைக்கு இறங்கி வந்து, இன்று கக்கன்ஜியை பார்த்துச் சொல்கிறார்கள். ஏன், கக்கன்ஜி மந்திரியாக இருக்கும்போது நான் இருக்கக் கூடாதா ? என்று ஒரு தலைவர் கேட்டார். அதற்கு வேறு ஒரு காரணத்தையும் நண்பர் கனம் அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். இதை சபைக கூட்டத்தலேயும் சொல்கிறார்கள். பட்டப்படிப்பு அவசியம் என்ற காரணத்தைக் காட்டித்தான் சொல்லியிருப்பார் என்று சொன்னார்கள். அப்படியானால் வருங்காலத்திலே பட்டதாரிகள் மட்டும்தான் பதவியில் இருக்கவேண்டுமென்ற நிலை ஏற்பட்டுவிடுமோ என்று நான் நினைக்கிறேன். அதற்கு என்ன காரணம் என்பதை விளக்கிக் காட்டுவார்கள் என்று நான் நினைக்கிறேன்.

[Sri T. P. Elumalai] [14th March 1961

நான் பட்டப்படிப்பு இல்லாமலே, ஆனால் சட்டசபையிலே அமர்ந்து பொது வேலையிலே ஆர்வம் உள்ளவரையிலே சிறந்த அளவு செய்வதற்கு உணர்ச்சி பெற்றிருக்கிறேன். பட்டத்தையோ முன்னாள் பதவியையோ பொதுச்சேவைக்கு காரணம் காட்டவேண்டாம் என்று மிகப் பணிவோடு தெரிவித்துக்கொள்ளு கிறேன். அரசாங்கம் ஹரிஜன மக்களுக்கு வேண்டிய குடிதண்ணீர் வசதி, கிராமங்களில் ரோடு வசதி சுகாதார வசதி, படிப்பு வசதி போன்ற சகல மான வசதிகளையும் உடனடியாக செய்து தருவதற்கு வேண்டிய வழிவகை களைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த இலாகாவில் இருப்பவர்கள் இப்பேர்ப்பட்ட வேலைகளுக்கு ஏதாவது குந்தகம் செய்தால், அல்லது காலதாமதம் செய்தால் அவர்கள் அந்த இலாகாவிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்படுவார்கள் அல்லது 'இந்த வேலையைச் சரிவர செய்ய வில்லை. ஆகையால் உடனடியாக வேறு இலாகாவுக்கு மாற்றப்போகிறோம்' என்று சொல்லி அவர்களை வேறு இலாகாவிற்கு மாற்றக்கூடிய ஒரு நியதி இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லோரும் கூடி ஒத் துழைத்து ஹரிஜனங்களுடைய வாழ்வை நல்ல முறையில் வளப்படுத்த வேண்டும் என்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI T. S. RAMASWAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நம் முடைய வரவு-செலவுத் திட்டத்திலே இருக்கக்கூடிய பல இலாகாக்களுக் குள்ளே இது ஒரு முக்கியமான இலாகா என்று நான் கருதுகிறேன். பல தலைமுறையாக நம்முடைய சமுதாயத்தில் அடித்தளத்தில் இருந்து கொண்டு வரக்கூடிய ஒரு சமூகத்தை உயர்த்துவதற்காக சுதந்திரம் கிடைப் பதற்கு முன்னாலேயே தொடங்கிய வேலையை இப்பொழுதும் நாம் நடத்திக் கொண்டு வருகிறோம். இதை பல அங்கத்தினர்கள் மிக அழகாக எடுத் துக் கூறினார்கள். வருஷந்தோறும் கல்வியிலும், உத்தியோகத் துறையி லும், பொருளாதாரத் துறையிலும், விவசாயம், தொழில் ஆகிய துறை களிலும் அடித்தளத்தில் இருக்கக்கூடியவர்களை கைதூக்குவதற்காக பல முறைகளை நாம் கையாள்கிறோம். அரசாங்கம் பல கோடிக்கணக்கான ரூபாய்களை செலவழிக்கின்றார்கள். ஆனால் அதே நேரத்திலே இம்மாதிரி உதவிகள் அவர்களுக்கு காலாகாலத்திலே கிடைப்பதில்லை என்று பல நண்பர்கள் எடுத்துக் கூறினார்கள். மாணவர்களுக்கு ஸ்காலர் ஷிப் சரியான சமயத்தில் கிடைக்கவில்லை என்பதை இதற்கு முன்னாலேயே நான் பல தடவைகள் எடுத்துச்சொல்லியிருக்கிறேன். நாகர்கோவில் கல்லூ ரியில் மிகச்சிறந்த ஹரிஜன மாணவர் ஒருவர் இருந்தார். அவருக்குக் காலாகாலத்தில் ஸ்காலர்ஷிப் கிடைக்கவில்லை. அமைச்சர் அவர்கள் வரை யிலே நாங்கள் இதைப்பற்றி கூறியிருக்கிறோம். அதுபோலவே இன்னும் சில எலிமெண்டரி பாடசாலைகளில் உள்ள மாணவர்களுக்கு தக்க சமயத் தில் கிடைக்காமல் இருந்திருக்கிறது. அதைப்பற்றி நண்பர்கள் குறிப்பிடும் பொழுது எல்லா மாணவர்களுக்கும் கிடைக்கமுடியாது என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இதற்கு முன்னாலே இருந்த ராஜ்யத்தில் எல்லா மாணவர்களுக்கும் ஹைஸ்கூல் வரையிலும், எத்தனை மாணவர் கள் இருந்தாலும் அவர்களுக்குக் கிடைத்தது. பாரம்கூட எழுதவேண்டிய தில்லை. எல்லா மாணவர்களுக்கும் நிச்சயமாக கிடைக்கவேண்டும்.

THE HON. SRI P. KAKKAN : அது சிறிய ராஜ்யமாக இருந்தது, கொஞ்சம் பேர்கள்தான் இருப்பார்கள். ஆனால் நம் ராஜ்யத்தைப்போல பெரிய ராஜ்யத்தில் நிறைய பிள்ளைகள் இருக்கிறார்கள். அதோடுகூட இந்த ராஜ்யத்தில் மற்றும் அநேக வசதிகள் செய்துகொடுக்கப்படுகின்றன. பல வேலை இருக்கிறது.

SRI T. S. RAMASWAMI : நான் ஒத்துக்கொள்ளுகிறேன். அங்கே எல்லா மாணவர்களுக்கும் கிடைத்தது. ஆனால் இங்கே கிடைக்கவில்லை. அதைக் கூட்டவேண்டும் என்றுதான் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் அப்படிக் கொடுப்பதிலே கொஞ்சம் பாகுபாடு வந்துவிடுகிறது. சில சமயங் களிலே சிறந்த மாணவர்களுக்கு இந்த சலுகைகள் கிடைக்காமல் போய் விடுகிறது. அதைத் தவிர்க்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அங்கே கிடைக்காத சில அனுகூலங்கள் இங்கே

14th March 1961] [Sri T. S. Ramaswami]

கிடைக்கின்றன. அதாவது மாடுகள் வழங்குவது, மற்றபடி தொழிலுக்கு உதவி செய்துகொடுப்பது போன்ற உதவிகள் அங்கே கிடைப்பதில்லை, இங்கே கிடைக்கிறது. அதற்காக நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். அதிகமாக இப்பொழுது வீடுகள் கட்டிக்கொடுக்கிறார்கள் என்பதையும் ஒத்துக் கொள்ளுகிறேன். உதாரணமாக என்னுடைய தொகுதியில் 4½ எக்கர் நிலம் வாங்கி வீடுகள் கட்டுவதற்காக ஒரு இடத்தில் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனால், நம்முடைய சட்டத்தினால் அங்கு 20 வீடுகள்தான் வர முடியும் என்று சொல்லுகிறார்கள். அந்த 4½ எக்கரிலும் வீடுகள் கட்டுவதற்கு எத்தனை வருஷங்கள் ஆகுமோ என்று ஏங்கக்கூடிய நிலையில் ஹரிஜனங்கள் இருக்கிறார்கள்.

THE HON. SRI P. KAKKAN : வீடு மனைக்கட்டுகளுக்கு இடம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதிலே 20 வீடுகளுக்குக் குறையாமல் அதிகமாக 30 வீடுகள் கட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது....

SRI T. S. RAMASWAMI : 20 வீடுகள் அல்ல, அந்த ராஜ்ய திட்டத்தில் 80 வீடுகள் கட்டவேண்டும் என்று இருந்தது. ஆனால் 20 வீடுகள் என்று இருந்ததை இப்பொழுது 30 வீடுகளாக ஆக்கியிருக்கிறோம். அது வளர்ந்து கொண்டே வருகிறது. வெகு சீக்கிரம் அது 80 வீடுகளாகும் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

இன்னொரு விஷயம். மத்திய அரசாங்கம் ஸ்காலர்ஷிப் கொடுப்பதற்காக தொகையை அதிகப்படுத்தியிருக்கிறார்கள். அதை பட்டுவாடா செய்யும்பொழுது இலாகா அதிகாரிகள் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். ஒரு கல்லூரியில் மத்திய அரசாங்கத்தின் தொகையையும் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். சென்னை அரசாங்கத்தின் தொகையையும் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். ஒன்றை மட்டும் பட்டுவாடா செய்து விட்டு, மற்றொன்றை வருஷக்கணக்கில் வைத்துக்கொண்டு வேறு ஏதாவது செலவுக்கு உபயோகப்படுத்தி வந்திருக்கிறார்கள். ரூ. 16,000 அப்படி அவர்கள் கையிலே 5 வருடங்களுக்கு ஒரு கல்லூரியில் வைத்திருந்தார்கள். சட்டசபையிலே அதைப் பற்றி கேள்வி போட்ட பிறகுதான் 'ஏதோ மறந்து போய்விட்டது, அதனால்தான் தங்கி விட்டது, என்று சொல்லி விட்டார்கள். இது ஏதோ தென்னை மரத்தில் புல் பறிப்பதற்கு ஏறினதாக சொல்லுவது போல் இருக்கிறது. 'புல் இருக்குமா, என்று கேட்டால் அதுதான் இறங்குகிறேன் என்று சொல்லுவதுபோல் இருக்கிறது. 'எதற்கு கட்ட வேண்டும் என்று தெரியாது, அதனால் தான் 4 வருடங்கள் இந்தத் தொகையை வைத்துக் கொண்டிருந்தோம், என்று சொல்லுகிறார்கள். இப்படி அரசாங்கத்தை மோசடி செய்யக்கூடியவர்கள் யாராக இருந்தாலும், அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

தீண்டாமை விலக்குப் பிரசாரத்தைப் பற்றி நண்பர்கள் குறிப்பிட்டார்கள். ஹரிஜனங்கள் இருக்கும் இடங்களில் மட்டுமல்ல, வேறு இடங்களிலும் அம்மாதிரி பிரசாரம் செய்ய வேண்டும். ஹரிஜன வாரங்கள் கொண்டாடப்படுகின்றன. ஒவ்வொரு மாதமும் 30-ம்தேதி ஹரிஜன தினமாகக் கொண்டாடப்படுகிறது. ஹரிஜனகாலனிகளிலும் அதைக் கொண்டாட வேண்டும், அவர்கள் முன்னேறுவதற்காக. அதே நேரத்தில் ஏனைய இடங்களிலும்கூட அம்மாதிரிப் பிரசாரம் செய்யப்படவேண்டும். அப்படியிருந்தால் தான் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் மூடநம்பிக்கையிலே உயர் ஜாதி தாழ்ந்த ஜாதி என்று நினைத்துக்கொண்டிருந்தால், அதை மாற்றுவதற்கான பிரசாரமாக அது நிச்சயமாக அமையும் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகின்றேன்.

வீடுகளைப் பொறுத்த அளவிலே சந்தோஷப்படுகிறேன். இப்பொழுது ரூ. 750 என்று இருந்ததை ரூ. 1,000 ஆக உயர்த்தியிருக்கிறார்கள். வீடுகளெல்லாம் சிறிய வீடுகளாக இருக்கின்றன. அதிலும் அந்த வீடுகளை கட்டிக்கொடுக்கும் பொறுப்பை காண்டிராக்டர்களிடம் ஒப்படைத்து விட்டால் அவர்கள் அதை நல்ல முறையில் செய்யாமல் விட்டுவிடுகிறார்கள்.

[14th March 1961

THE HON. SRI P. KAKKAN : வீடு கட்டுவதை காண்டிராக்டர்களிடம் விட்டு விடுவதாக அங்கத்தினர் அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படிச் செய்வதில்லை. அந்த வீடுகளிலே குடிபுகும் மக்களை வைத்துத் தான் வீடுகள் கட்ட ஏற்பாடு செய்யப்படுகிறது. அவர்களால் முடியவில்லை என்றால், அவர்கள் கூறுகிற அவர்களுடைய பிரதிநிதியிடம் தான் காண்டிராக்ட் கொடுக்கப்படுகிறது. வேறு தனிப்பட்ட நபர்களுக்கு காண்டிராக்ட் கொடுப்பதில்லை,

SRI T. S. RAMASWAMI : சில இடங்களிலே சரியானபடி வீடுகள் கட்டப்படவில்லை என்று புகார்கள், குற்றச்சாட்டுகள் வருகின்றன. அவைகளை அரசாங்கம் நிவர்த்திக்கவேண்டும். ஹரிஜனங்கள் ' மல்டி பர்பஸ் கோவாபரேடிவ் சொஸைடிகள் ' மூலம் பணியாற்றினால், வேலைகள் சிறந்த முறையில் நடைபெறுகின்றன. அந்த உதாரணத்தைப் பின்பற்றி பல இடங்களிலே ஹரிஜன கூட்டுறவு சங்கங்கள் ஆரம்பித்து, அவர்கள் இந்த கட்டிட வேலை செய்வதாயிருந்தால், அது மிகவும் நலமாக இருக்கும் என்பதை கூறிக்கொள்ளுகிறேன்.

என்னுடைய நண்பர் ஸ்ரீ டி. டி. டேனியல் அவர்கள் கிறிஸ்துவ ஹரிஜனங்களுக்கு பல சலுகைகள் கிடைக்காமல் போய்விடுகின்றன என்று சொன்னார். அவர்களுக்கு நம்முடைய அரசாங்கத்திலிருந்தாவது ஏதாவது கொஞ்சம் பிரயோசனம் செய்து கொடுத்தால் தேவலை என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

எத்தனையோ சலுகைகள் செய்து கொடுத்தாலும் கூட, இன்னும் பல துறைகளிலே அவர்கள் முன்னுக்கு வரவேண்டியிருக்கிறது. ஏதோ சில மாடுகள் வழங்கப்பட்டு விட்டால் மட்டும் அல்லது சில கருவிகள் கொடுக்கப்பட்டு விட்டால் மட்டும் அவர்கள் நிலை உயர்ந்துவிட முடியாது. வேகமாக வளர்ந்துவரக்கூடிய பாரத சமுதாயத்திலே அவர்களுக்கு இங்கும் அங்கும் சில உத்தியோகங்கள் கொடுத்துவிட்டால் மட்டும் போதாது. வளர்ந்து வருகிற பொருளாதாரத்தில் அவர்கள் முக்கியமான பங்குதார்களாக இருக்க வேண்டும். தொழிற்சாலைகளிலும், எஸ்டேட்களிலும், இன்னும் கார்பரேஷன்களிலும், லைசென்ஸ் வழங்குவதிலும், அவர்களுக்கு இவ்வளவு விகிதாசாரம் உத்தியோகங்கள் கொடுக்கப்படவேண்டும், அவர்களுக்கு இவ்வளவு விகிதாசாரம் லைசென்ஸ் முதலியவைகள் வழங்கப்படவேண்டும் என்பதை நிர்ணயம் செய்து வைக்கவேண்டும். அப்பொழுது தான் ஹரிஜனங்கள் பொருளாதாரத் துறையிலே முன்னேறுவதற்கு வழி காண முடியும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அமைச்சரைப் பொறுத்த அளவிலே பல நண்பர்கள் ஏதோ பேசினார்கள். என்னைப் பொறுத்த அளவில், அமைச்சர் அவர்களுடைய பெருமைக்கு எது காரணமாயிருந்தாலும் அவர்களுக்கு நல்ல அரசியல் சரித்திரம் இருக்கிறது, தமிழ் நாடே பெருமை அடையக்கூடிய அளவிலே சுதந்திரப் போராட்டத்திலும் சரி, அதற்கு பின்னாலும் சரி. தலை சிறந்த
12-30 p.m. பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய சரித்திரம் அமைச்சர் அவர்களுக்கு இருக்கிறது என்பதை பெருமையோடு சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRIMATHI S. HEMALATHA DEVI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள ஹரிஜன மான்யத்தை ஆதரித்து ஒருசில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். ஆண்டவனுடைய படைப்பிலே அனைவரும் சமம் என்று கருதி உலகம் போற்றும் மகாத்மா காந்தி அவர்கள் உலகத்திலே தாழ்த்தப்பட்ட மக்கள் என்று ஒரு இனத்தவர் இருக்கக்கூடாது என்ற எண்ணத்திலே, அந்த இனம் முன்னேற்றம் அடையவேண்டுமென்பதற்காக அல்லும் பகலும், ஆயுள் பூராவும் உழைத்து வந்தார் என்பதை யாரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது. இன்றைக்கு நம்முடைய அரசாங்கம் ஹரிஜன முன்னேற்றம் என்ற அடிப்படையிலே, ஹரிஜன மக்கள் அனைவருக்கும் கல்வித் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் மற்றும் எல்லா வகையிலும் முன்னேற்றம் அடையவேண்டுமென்பதற்காக, கல்விச் சலுகைகள் அளித்

14th March 1961] [Srimathi S. Hemalatha Devi]

தும், வீடுகள் கட்டுவதற்கும், விவசாயக் கருவிகள் வாங்குவதற்கும், மாடுகள் வாங்குவதற்கும், தொழில் முன்னேற்றத்திற்கும் உதவிச் சலுகைகள் அளித்து வருகிறார்கள் என்பது நாம் யாவரும் அறிந்ததே. நம் நாட்டிலே உள்ளவர்களில் மூன்றில் இரண்டு பங்கு ஹரிஜன மக்களும் பிற்பட்ட இனத்தவர்களும் ஆகும். தாழ்த்தப்பட்ட மக்களும், பின்தங்கிய மக்களும் கல்வித் துறையிலும், பொருளாதாரத் துறையிலும், மேலும் உத்தியோகங்கள் பெறுவதிலும் முன்னேற்றம் அடைந்தால்தான் உண்மையிலேயே நாம் ஒரு சோஷலிஸ சமுதாயத்தை அமைக்கமுடியும் என்ற அடிப்படையிலே வருஷம் தோறும் இந்த உதவித் தொகையை அதிகப்படுத்திக் கொண்டு வருகிறார்கள். இதைக் குறித்து நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் இந்த ஹரிஜன மக்களுக்கும், பின்தங்கிய மக்களுக்கும் கல்விச் சலுகை அளிப்பதோடுகூட, இந்த வருஷம் வரவுசெலவுத் திட்டத்திலே 11-வது வகுப்பு வரையிலும் எல்லா ஏழைக் குழந்தைகளுக்கும் கல்விச் சலுகை அளித்துள்ளதை மகிழ்ச்சியோடு வரவேற்கிறோம். இதற்குக் காரணம் தாழ்த்தப்பட்ட மக்களும், பிற்பட்ட இனத்தைச் சேர்ந்த மக்களும் முன்னேற்றம் அடைந்துவிட்டால் போதாது. முற்போக்கு வகுப்பைச் சேர்ந்த ஏழை மாணவர்களும் இன்னும் சில ஆண்டுகளிலே பின் தங்கிப்போய் விடுவார்களோ என்ற எண்ணத்தில், நாட்டில் உள்ள எல்லோரும் கற்று அறிந்தவர்களாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் இந்தத் திட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள் என்றாலும், தாழ்த்தப்பட்ட மக்களும், பிற்பட்டவர்களும் தங்களுடைய இனத்தைச் சொல்லித்தான் இந்தச் சலுகையைப் பெறவேண்டிய நிலைமை இருக்கிறது. அந்தச் சலுகையைப் பெறுவதற்கு ஜாதிப் பெயரைச் சொல்லித்தான் ஆகவேண்டும். பேச்சு அடிப்படையிலேயும் விசேஷ காலங்களிலும் செட்டியார், முதலியார் என்ற குறிப்பை வைக்காமல் இருந்தாலும் கூட, இந்த மாதிரி சலுகைகள் பெறுவதற்கும், தங்களுடைய இனங்கள் முன்னேற்றம் அடைவதற்கும இந்த ஜாதிப் பெயரை இன்னும் சில ஆண்டுகளுக்குச் சொல்லித்தான் ஆகவேண்டும. எல்லோரும் சமம் என்ற நிலை ஏற்பட்டு விட்டால் ஜாதி இருக்கவேண்டாம். இன்னும் 10 ஆண்டுகளுக்காவது இந்தச் சலுகைகள் நீடிக்கப்படவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன். பிற்பட்ட இனத்தவருக்கும் ஹரிஜன மக்களுக்கும் ஒதுக்குவதுபோல், முற்பட்ட இனத்தவர்களின் ஏழைக் குழந்தைகளுக்கும் தனியாகப் பணத்தை ஒதுக்கி வைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன் உத்தியோகங்களை எடுத்துக்கொண்டாலும், 25 ஸ்தானங்களில் 4 ஸ்தானங்கள் ஹரிஜன மக்களுக்கும் 6 ஸ்தானங்கள் பிற்பட்ட இனத்தவருக்கும் மீதி 15 ஸ்தானங்கள் முற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்களுக்கும் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். இது நியாயமான முறை இல்லை என்று, எடுத்துக் கூறினாலும், பிற்பட்ட இனத்தவரும் அதிக மார்க்குகள் வாங்கி முற்பட்டவர்களுக்கு ஒதுக்கியுள்ள ஸ்தானங்களுக்குப் போட்டியிட்டு வரமுடியும் என்று கருதுகிறார்கள். இது முடியாத கா யம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பொருளாதாரத் துறையிலே மிகவும் பின்தங்கியிருக்கும் பிற்பட்ட இனத்தவர், அரை வயிற்றுக் கஞ்சிக்குக்கூட கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறவர்கள், வறுமையினால் சோர்வுற்றிருப்பவர்கள் முற்பட்ட இனத்தைச் சேர்ந்த குழந்தைகளோடு போட்டியிட்டு மார்க்குகள் அதிகம் வாங்கி முற்பட்டவர்களுக்குள்ள ஸ்தானங்களில் போட்டியிட்டு முன்னேற்றம் அடைவது என்பது முடியாத காரியம். ஹரிஜனங்களுக்கு 4 என்று ஒதுக்கியிருப்பதை ஐந்தாக ஒதுக்கி வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நாட்டிலே மூன்றில் இரண்டு பங்கு தாழ்த்தப்பட்டவர்களும் பிற்பட்டவர்களும் இருக்கிறார்கள். குறிப்பாக சுமார் 150 இனப்பிரிவுகளைக் கொண்டவர்கள் பிற்பட்டவர்களாக இருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு 15 ஸ்தானங்களாவது ஒதுக்கிவைத்து, முற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு 6 ஸ்தானங்களும் தாழ்த்தப்பட்டவர்களுக்கு 4 ஸ்தானங்களும் ஒதுக்கி வைப்பதுதான் நியாயம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு, அரசாங்கம் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Srimathi S. Hemalatha Devi] [14th March 1961

நேற்று சபையில் நடந்த விவாதத்திலே திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள், கக்கன் அவர்கள் மந்திரியாக இருக்கும்பொழுது நான் ஏன் இருக்கக்கூடாது என்று சொன்னதற்கு அந்த கழகத்தைச் சேர்ந்த உறுப்பினர் விளக்கம் கூறினார்கள். படிப்பின் தரத்தைக் கொண்டு அவர்கள் அப்படிக் குறிப்பிட்டார்கள் என்றும், தமிழை ஆட்சி மொழியாகக் கொண்டுவந்த அமைச்சர் அவையில் தமிழ் மட்டும் தெரிந்தால்போதும் என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். இந்த அமைச்சர் அவையில் அனுபவம்தான் தேவையே தவிர, படிப்புத் தேவையில்லை என்பதை அங்கத்தினர்கள் தெரிந்துகொள்ளவேண்டும்.

[மணி அடிக்கப்பட்டது.]

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த ஹரிஜன நலத் துறைக்கு சற்றேறக்குறைய 3½ கோடி ரூபாய் வழங்கினதை மிகவும் ஆர்வத்தோடும், உற்சாகத்தோடும் வரவேற்கிறேன். காரணம் என்னவென்றால், இந்த 3½ கோடி ரூபாயும் சமூகத்திலே பெரும்பகுதியினரான பின்தங்கி இருக்கிறவர்களின் முன்னேற்றத்திற்காகக் கொடுக்கப்படுகிற பணம், கொடுத்ததற்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, இன்னும் அதிகமாக வேண்டும் என்று கேட்பதிலே குற்றம் கிடையாது. ஒரு பெரிய சமுதாயத்திற்கு சிறிய தொகை ஒதுக்கியிருக்கிறோம். ஆகவே இன்னும் தொகையை அதிகப்படுத்தினால் அது அந்த சமுதாயத்தையே முன்னேற்றம் அடையச் செய்வதாகும். காலம் இல்லாத காரணத்தினால் ஒரு பகுதியை மட்டும் இங்கே எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக கல்விச் சலுகையை எடுத்துக்கொண்டால், இந்த ஹரிஜனங்களுக்காகவும். பிற்பட்ட இனத்தவருக்காகவும் கொடுக்கப்படும் கல்விச் சலுகை மிகமிக வரவேற்கத்தக்கது. மாடு வாங்கப் பணம் கொடுக்கிறோம். வீடு கட்டப் பணம் கொடுக்கிறோம். என்னதான் கொடுத்தாலும் கல்விச் சலுகைக்கு இருக்கிற திறமையும் பெருமையும் வேறு சலுகைகளுக்கு இல்லை என்று சொல்லலாம். ஒரு பையன் நன்றாகப் படித்து முன்னுக்கு வந்துவிட்டால், அவனுடைய குடும்பமே முன்னேற்றம் அடைகிறது. ஒரு நபருக்கு நல்ல பதவி கிடைத்துவிட்டால் அதன் மூலமாக 10 பேர் முன்னேற்றம் அடைகிறார்கள். ஆகவே கல்விச் சலுகைக்கு எவ்வளவு தொகை ஒதுக்குகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு வரவேற்கத் தக்கது. இந்தத் துறையிலும் ஒதுக்கியிருப்பது மிகமிகக் குறைவு. அடுத்த வரவு செலவுத் திட்டத்தில் இதை அதிகப்படுத்த வேண்டியது அவசியம் மாத்திரம் அல்ல, அவசரமும் கூட என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். குறிப்பாக எடுத்துக் கொண்டால் பிற்பட்டவர்களுக்கு ஒருசில சலுகைகளைத் தருகிறார்கள். படிப்பு வசதிக்கு பணம் ஒதுக்கி வைத்திருக்கிறோம். அப்படிப்பார்க்கும் பொழுது நம்முடைய அரசாங்கம் ஒரு சிறந்த அடிப்படையிலே 58 லட்சம் ரூபாய் ஹைஸ்கூல் வசதிக்கு என்று ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். ஏழைகள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு கல்வி வசதி கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். ஆனால் பிற்பட்ட இனத்தவருக்குக் கொடுக்கும்பொழுது ஜாதி அடிப்படையிலே மட்டும் சலுகை கொடுப்பதில்லை. பிற்பட்ட இனத்திலே பிறந்த அவர்கள் ஏழைகளாக இருந்தால்தான் இந்தச் சலுகையைப் பெறலாம். பணக்காரர்களாய் இருந்தால் பெற முடியாது. 1,200 ரூபாய்க்குமேல் வருமானம் இருந்தால் அவர்களுக்குச் சலுகை கிடையாது. ஆகவே இரண்டு அடிப்படையிலே கொடுக்கிறோம். அதாவது எக்கனமிக் பாக்வர்டுனஸ் சோஷல் பாக்வர்டுனஸ் என்று சொல்லுகிறோம். அப்படிக் கொடுக்கும் பொழுது இன்றைக்கு இருக்கும் நிலைமை என்ன? 16,000 விண்ணப்பங்கள் ஹைஸ்கூல் மாணவர்கள் போடுகிறார்கள். 4,000 பேருக்குத்தான் கொடுக்கிறோம். 4-ல் ஒரு பங்குக்குக் கொடுத்துவிட்டு அதிகம் செய்துவிட்டோம் என்று சொல்லுகிறோம். 58 லட்சம் அடுத்தவருக்குக் கொடுக்கும்பொழுது, இந்தப் பிரச்னையையும் தீர்க்கவேண்டுமென்ற ஆர்வம்வேண்டும். 58 லட்சம் போதாது. இருந்தாலும் இந்தப் புதிய முறையை வரவேற்கிறோம். ஆனால் அதேசமயத்தில் எடுத்த காரியத்தை எந்த அளவுக்குச் செய்திருக்கிறோம் என்பதை ஆராய்ந்து பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். 16,000 பேரில் 4,000

14th March 1961] [Srimathi T. N. Anandanayaki]

பேருக்குமேல் ஹைஸ்கூல் ஸ்காலர்ஷிப் கொடுக்கமுடியவில்லை என்றால் ஹைஸ்கூல் படிப்பே படிக்காதபடி எப்படி கல்லூரிக்கு வர முடியும்? அடித்தளத்திலே இவ்வளவு ஆட்டம் கண்டால் நாம் கொடுக்கும் சலுகை எந்த அளவுக்கு மக்களுக்கு போதுமானது என்பதை ஆராய்ந்துபார்க்கவேண்டும். அதைப்போன்று கல்லூரிச் சலுகையைப் பார்த்தால், ஏறக்குறைய 3 லட்சம் ரூபாய்கள் தேவை. போன ஆண்டில் வரவு-செலவு திட்டத்தில் ஒதுக்கியது 17 லட்சம்; அதற்கு மேல் 10 லட்சம் கொடுக்கப்பட்டது; அதற்கும் மேல் ஸப்ளிமெண்டரி டிமாண்டில் 12 லட்சம் கொடுத்தோம். ஆக 39 லட்சம் வினியோகப் படுத்தப்பட்டது. எத்தனை பிறபட்ட மாணவர்கள் பலன் அடைந்தார்கள்? 100-க்கு 30 அல்லது 35 பேர்களுக்குத்தான் கொடுக்கமுடிந்தது. மிகுதியிருக்கும் 65 சத விகித மாணவர்கள் சங்கடப்படுகிறார்கள். மீண்டும் இந்த ஆண்டு 25 லட்சம் ஒதுக்கியிருக்கிறோம்; போன ஆண்டு 17 லட்சத்தோடு, இன்னும் 8 லட்சம் சேர்த்து ப்ளானிங் அடிப்படையில் செய்திருக்கிறார்கள். 39 லட்சமே 35 சத விகிதத்திற்குத்தான் கிடைக்கிறது என்றால், 25 லட்சம்தான் இவ்வாண்டு என்று சொன்னால், முன்னால் அதிகம் செலவழித்தது உண்மையில்லையா? செலவழித்தது தவறா? அல்லது செலவாகவில்லை என்று மறுக்கிறார்களா? செலவாகியிருக்கிறது என்றால் எப்படி 25 லட்சத்தைக்கொண்டு அதைச் சமாளிப்பது? ஆகவே இன்னும் இதை 50 லட்சமாக ஆக்கினால்தான் 50 பர்செண்டு மாணவர்களுக்காவது சலுகை கொடுக்க முடியும். சட்டக் கல்லூரியை எடுத்துக்கொண்டால், 140 மாணவர்கள் சலுகை கேட்டார்கள்; அவர்களில் 14 பேருக்குத்தான் ஸ்காலர்ஷிப்கள் கொடுத்திருக்கிறோம். அது கடலிலே கரைத்த பெருங்காயம் போலத்தான். மற்றவர்கள் கதி என்ன ஆவது? அவர்களுக்குக் கடன் கொடுக்கவாவது யாராவது இருக்கிறார்களா? கடன் கொடுத்து—வட்டியில்லாமல் கொடுத்து, படித்து வேலைக்குப் போன பின் கொடுங்கள் என்றாவது யாராவது கொடுக்கிறவர்கள் இருக்கிறார்களா? அப்படியும் இல்லாததினாலேதான் அவர்கள் சர்க்கார் ஸ்காலர்ஷிப்பை எதிர்பார்த்து நிற்கிறார்கள். அம்மாதிரி சம்பளக் கஷ்டம் இருக்கும் வரை எந்த மாணவன்தான் மன அமைதியோடு படிக்க முடியும்? அவர்கள் நல்ல மன நிம்மதியோடு படித்தால்தானே நல்ல மார்க்குகள் வாங்கமுடியும். இன்றைக்கு பலர் நல்ல மார்க்குகள் வாங்கவில்லையென்றால், அதற்கு இந்த அரசாங்கம்தான் காரணம். அவர்கள் நாளெல்லாம் வெல்பேர் ஆப்சரையும், நம்போன்ற எம். எல். ஏ. க்களையும், மற்றவர்களையும் போய்ப்பார்ப்பதிலேயே—அவர்களிடம் தூது போவதிலேயே செலவாகி விடுகிறது. அப்பொழுதும் அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வருமா, வராதா என்று எதிர்பார்த்துக்கொண்டே இருக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. ஸ்காலர்ஷிப்புகளை கொடுக்கும் விஷயத்தில் விரைவாக, துரிதமாகக் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் அது வரவேற்கத்தக்கதாக இருக்கும்.

ப்ரைவேட் ஹாஸ்டல்களில் இருக்கும் மாணவர்களுக்கு நாம் பணம் கொடுக்க மறுக்கிறோம். இன்றைக்கு செங்கல்வராயன் இன்ஸ்டிட்யூட் ஹாஸ்டலில் மாணவன் இருக்கிறான் என்றால், அங்கே படிக்கிறவன் வேறு ஹாஸ்டலில் இருக்கக் கூடாது; நாம் என்ன செய்கிறோம்? அந்த ஹாஸ்டலில் இருந்தால் பணம் கிடையாது என்கிறோம். எங்கள் ஹாஸ்டலில் இருக்க வேண்டும், ஆகவே மாணவன் இரண்டுக்கும் மத்தியில் அவதிப்படுகிறான். நாம் மாணவர்களுக்கு 40 ரூபாய் வீதம் கொடுக்கிறோம்; விக்டோரியா ஹாஸ்டல் போல் இருந்தால் அதற்கு ரூ. 70 ஆகிறது என்றால், நாம் என்ன நினைக்கிறோம், அந்தப் பணத்துக்கு இரண்டு பிள்ளைகள் படிக்கலாமே என்று. அதைப் பார்க்கும்போது ஓரளவுக்கு சிக்கனத்தை கையாள்கிறோம் என்றாலும், இம்மாதிரி பையன்களுக்கும் வசதி கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். பையன் எந்த ஹாஸ்டலில் இருந்தாலும், 40 ரூபாயைக் கொடுத்தால், பாக்கியையாவது அவன் எப்படியாவது பார்த்துக் கொள்வான்.

மற்றொன்று, 19 வயதான ஹரிஜன மாணவனுக்கு ஹாஸ்டலில் இடம் இல்லை என்று சொல்கிறோம், அடித்துக் கொள்கிறார்கள் என்று ஹரிஜன சமூகத்திலும், பிற்பட்ட சமூகத்திலும் மாணவர்கள் வயதாகித்தான் படிக்க

வருகிறார்கள். ஆகவே, அவர்களுக்கு இடமில்லை என்பது சரியில்லை. அவர்களுக்கும் ஹாஸ்டல் வசதி யளிக்க வேண்டும் என்று கூறிக்கொண்டு முடிக்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : எத்தனை பெரியவனாக இருந்தாலும் பரவாயில்லை என்பது சரியாகாது, இதிலெல்லாம் ஒரு கட்டுப்பாடு வேண்டும். இதை யெல்லாம் பார்த்துத்தான் மாணவர்களை ஹாஸ்டலில் அட்மிட் பண்ண வேண்டும்.

*SRI S. THANGAVELU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கும் பின் தங்கியவர்கள், ஹரிஜனங்கள் மானியத்தை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த அரசாங்கம் பொறுப்பேற்ற நாள் முதலாக, அண்ணல் காந்தியடிகளின் அடிச்சுவட்டைப் பின் பற்றி ஹரிஜனங்களுக்காக நல்லதொரு திட்டங்களைத் தீட்டி, அந்த மக்களுக்கு நல்லதொரு சேவை செய்வதை பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன், அது மட்டுமல்லாமல், இந்த மந்திரி சபை, தற்சமயம் இருக்கும் மந்திரி சபை ஒரு மனத்தோடு எல்லாப் பொறுப்பையும் ஏற்று, தொகைகளை ஒதுக்கியிருப்பதற்காக நன்றி தெரிவிக்கிறேன். ஹரிஜன மக்கள் முன்னேற்றமடைய நல்ல பணிகளைச் செய்து கொண்டு போவதற்காகப் பாராட்டுகிறேன்.

ஹரிஜன மக்களுக்கு மனைக் கட்டு கொடுப்பதில் மட்டும் சற்று கால தாமதம் ஆகிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். பல அங்கத்தினர்களும் எடுத்து விரிவாகச் சொல்லியிருக்கிறார்கள். 1958–59-ல் ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று, கிராமத்திற்கு வேண்டிய மயானப் பாதைகள், குடிதண்ணீர் கிணறுகள், மனைக் கட்டுகள் விஷயமாக சர்க்காருக்கு பல தகவல்கள் கொடுத்திருக்கிறேன், அவர்களும் பெற்றுக் கொண்டதாகவும், நடவடிக்கை எடுக்கிறோம் என்றும் பதில் கொடுத்திருக்கிறார்கள். பல கிராமங்களில் மனைக் கட்டுகள் வழங்கியும், கிணறுகள் வெட்டியும், பாதைகள் போட்டுமிருப்பதற்காக சர்க்காரைப் பாராட்டுகிறேன். இருப்பினும், இவைகளை அதிக வேகமாகச் செய்ய வேண்டும் என்று தாழ்மையான விண்ணப்பத்தை சமர்ப்பிக்கிறேன்.

மதிப்பிற்குறிய அம்மையார் அனந்தநாயகி அவர்கள் சொல்வது போல கல்வி விஷயத்திலே, அதிமாக பின் தங்கிய ஹரிஜன மக்களுக்கு அதிகப் பணத்தை ஒதுக்கி, அவர்கள் எல்லோருக்கும் உதவி செய்ய வேண்டும். ஒரு மாணவன் படித்தான் என்றால், அவன் குடும்பத்தின் தலைவனாக வரும் போது, நாட்டிலே ஜாதி வித்தியாசமே தொலைந்து போகும் என்ற கருத்தைத் தெரிவிக்கிறேன். ஒருவன் படித்த பட்டதாரியாக இருந்து, பாண்ட், கோட்டையும் போட்டுக்கொண்டு வெளியில் போனால், அவரைப் பார்த்து யார் ஹரிஜன மகன் என்று சொல்லமுடியும்? அவன் செட்டியாரா, முதலியாரா, பிராமணரா என்று தெரியாது. அப்பொழுது ஜாதி வித்தியாசமே ஒழியும். ஆக மதிப்பிற்குறிய சர்க்கார் இந்த கல்வி விஷயத்தில் அதிகப் பணத்தை ஒதுக்கி அவர்களுக்கு நன்மை செய்ய கவனம் செலுத்த வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஒரு சில எதிர்கட்சியினர்கள்—அதுவும் திராவிட முன்னேற்றக் கட்சியினர்கள்—சிவப்பும் கருப்பும் போட்ட கொடியை மாட்டிக்கொண்டிருக்கக் கூடியவர்கள் தான் தங்கள் டீ கடைக்குள் ஹரிஜனங்களை விட மறுக்கிறார்கள். கேட்டால் வேறுவிதமாகப் பேசுகிறார்கள். "நீங்கள் ஏன் கதர் சட்டை அணிந்துகொண்டிருக்கிறீர்கள். எங்கள் கட்சியில் சேருங்கள், விடுகிறோம்" என்கிறார்கள். நான் கிராமாந்திரத்திலிருந்து வருவதால் இதைப்பற்றி எல்லாம் நேரில் பார்த்துச் சொல்கிறேன். கிராமத்தின் நிலை எனக்கு நன்றாகத் தெரியும். ஆகவே இம்மாதிரியான கொடுமை இன்னும் கிராமங்களில் ஆங்காங்கே நிலவி வருவதால் அவற்றை ஒழிக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். காந்தீய பாரதத்தின் பிதா, மகாத்மா காந்தியின் உன்னதக் கொள்கைகளைக் கையாண்டு வரும் மந்திரி சபையும், காருண்ய சர்க்காரும் நல்லமுறையில் நாட்டுக்கும், தாழ்த்தப்பட்ட சமூகத்திற்கும் சேவை செய்து வருகிறார்கள். அதைப்

14th March 1961] [Sri S. Thangavelu]

பாராட்டுவதோடு கூட இன்னும் குறிப்பாக நில ஆர்ஜித விஷயத்தில் இன்னும் கொஞ்சம் துரிதமாக, வேகமாகச் செயல்படுவதற்கு வகை செய்ய வேண்டும். குறிப்பாக இன்றையதினம் 2 தாலூகாவுக்கு ஒரு ஸ்பெஷல் தாசில்தார் என்று போட்டு நில ஆர்ஜித விஷயத்தைக் கவனிக்கவேண்டுமென்று சொல்கிறபோது காலதாமதம் ஆகிறது. இந்தத் தாலூகாவை கவனிப்பாரா ? அல்லது இன்னொரு தாலூகாவை அவர் கவனிப்பாரா ? நானே பல நூற்றுக்கணக்கான பெட்டிஷன்களை பார்வர்ட் பண்ணியிருக்கிறேன். ஆகவே ஒவ்வொரு தாலூகாவுக்கும் ஒரு ரெவின்யூ இன்ஸ்பெக்டர், ஒரு ஸ்பெஷல் தாசில்தார் இவர்களைப் போட்டு ஒதுக்கப்பட்ட பணத்தைச் செலவு செய்தோமானால் மனைக்கட்டு வழங்கும் திட்டம் இன்னும் துரிதமாக, வேகமாக நடைபெறும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இன்னொன்று, ஹாஸ்டல்களில் 19 வயதுப் பிள்ளைகளைச் சேர்த்துக் கொள்ளமுடியாவிட்டாலும் பதினாறு, பதினேழு, பதினெட்டு வயதுப் பிள்ளைகளுக்காவது இடம் கொடுத்து ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI P. ARASAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஹரிஜன நல இலாகா அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள மானியக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல முன்வந்துள்ளேன். முதலாவதாக ஹரிஜனங்களுக்காக பல லட்சக்கணக்கான ரூபாய்களை ஒதுக்கி கல்விச் சலுகை அளிக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறோம். பள்ளிசாலைகளை அமைத்து அதிகப்படியான தாழ்த்தப்பட்ட மக்களும், பின் தங்கிய வகுப்பார்களும் பயன் அடையவேண்டும் என்று செய்திருப்பதனால் இன்றைய தினம் பல பேர்கள் படித்து முன்னுக்கு வந்திருக்கிறார்கள். இதற்காக ஹரிஜன மக்களின் சார்பாக நன்றி செலுத்தக் கடமை பட்டவனாக இருக்கிறேன்.

அடுத்தப்படியாக பள்ளிச்சாலைகள் அமைத்து இருக்கக்கூடிய இடங்களில் சில ஊர்களிலே அதிகப்படியான மாணவர்கள் படிக்கவேண்டியிருப்பதனால் இட நெருக்கடி மிகவும் அதிகமாக இருக்கிறது. நெருக்கமான இடமாகப் பள்ளிகளும் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறது. கொஞ்சம் விசாலமாக வகுப்புவாரியாக இட வசதி உள்ள பள்ளிச்சாலைகளாக இனிமேலாவது கட்டிக்கொடுக்கும்படியாக நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் வழங்கும் விஷயமாக சில வார்த்தைகள் பேசுகிறேன். சிதம்பரம் தாலூகாவில் நஞ்சை நிலங்களை சர்க்கார் கிரயம் கொடுத்து வாங்கிக் கொடுத்திருக்கிறார்கள். அவைகள் மிகவும் பள்ளத்தாக்கான இடமாக இருக்கிறது. அந்தப் பள்ளங்களுக்கு ஹரிஜனங்கள் மண் கொட்டித் தூர்ப்பார்களா ? வீடு கட்டிக்கொள்வார்களா ? என்று மிகவும் கஷ்டப்படுகிறார்கள். மண்போட்டுத்தூர்த்து வீடு கட்டிக்கொள்வதற்கு அவர்கள் சக்தி இல்லாதவர்களாக இருப்பதால் ஏழை ஹரிஜனங்களுக்கு சொஸைட்டி மூலமாகப் பணம் 100 அல்லது 50 கொடுத்து வழியில்லாமல் கஷ்டப்படும் ஓரளவுக்கு ஏழை ஹரிஜனங்களுக்கு வசதி அளிப்பதோடுகூட ஐந்து வருஷத் தவணையில் பெற்றுக்கொள்ளும்படியான கடன் வசதியையும் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்குக் காலனி அமைத்துக்கொடுக்கும் விஷயமாக வீட்டுக்கு ஆயிரம் ரூபாய் என்று இப்போது உதவி அளிக்கப்படுகிறது. எங்கள் தாலூகாவில் பத்து வீடுகள், பதினைந்து வீடுகள், இருபது வீடுகள் என்றுதான் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறது. நாற்பது, ஐம்பது வீடுகளாவது கட்டிக்கொடுத்தால் தான் மிகவும் உதவியாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நமது காருண்ய சர்க்கார் இண்டோமெண்டுபோர்டு கோயில்களுக்கு ஹரிஜனங்களை டிரஸ்டிகளாகப் போடலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். என் தொகுதி சிதம்பரம் தாலுக்காவில் உள்ள கோவில்களுக்கு 100 காணி, 50 காணி 25 காணி என்று

[Sri P. Arasan] [14th March 1961

நிலம் உள்ள கோயில்களுக்கு 3 டிரஸ்டிகள் இருக்கவேண்டும் என்று உள்ள இடங்களில் ஹரிஜனங்களிலிருந்து ஒரு டிரஸ்டிகூட நியமிக்கப் பட வில்லை. நான்கைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நியமிக்கப்பட்டிருந்த வர்கள் இருக்கிறார்களே தவிர புதிதாக ஹரிஜனங்களிலிருந்து யாரை யும் டிரஸ்டியாக நியமிப்பது இல்லை. குறைந்தது 3 டிரஸ்டிகளாக இருக்கக்கூடிய கோயில்களில் ஒரு டிரஸ்டியாவது ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்று அவசியம் செய்யவேண்டும். இல்லா விட்டால் பாக்கி இருக்கக்கூடிய டிரஸ்டிகள் நியமனம் செல்லத்தக்கது அல்ல என்று செய்யவேண்டும்.

அடுத்தப்படியாக ஏழை ஹரிஜன விவசாயிக்கு உழவு மாடு வாங் கிக் கொடுத்து வருகிறது இந்தச் சர்க்கார். என் தாலுக்காவில் 194 ஜதைமாடுகள் தான் வழங்கப்பட்டுள்ளது. ஒரு தாலுக்காவில் 300, 301 கிராமங்கள் உள்ளன. ஆகையால் ஒரு கிராமத்தாருக்கு ஒரு ஜதை மாடுகளாவது வழங்க வழி செய்யவேண்டும். அப்படி இருந்தால் தான் ஏழை ஹரிஜனங்கள் குறை சொல்லாமல் இருக்கமுடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக தற்போது பஞ்சாயத்து கவுன்சில்கள், யூனியன்கள் சம்பந்தமாகத் தேர்தல் நடைபெற்று வருகிறது. அவைகளில் ஒரு தாலுக்காவில் கூட கவுன்சில் சேர்மென்னாக ஹரிஜன சமூகத்தைச் சேர்ந் தவர்கள் வர முடியவில்லை. ஹரிஜனங்களே அப்படி வருவதற்கு லாய்க்கு இல்லை என்று நினைப்பதற்கு இடம் ஏற்படக்கூடிய வகையில் ஒரு தாலுக்காவில் கூட அவர்கள் வருவதற்கு வசதி இல்லை. ஆகவே நமது காருண்ய சர்க்காரை மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். மூன்று வட்டாரங்கள், நான்கு வட்டாரங்களுக்கு ஒரு இடத்திலாவது ரிசர்வ் தொகுதி போல ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவர்கள் கவுன்சில் சேர் மென்னாக வருவதற்கு வழி ஏற்படக்கூடிய வகையில் பொதுதேர்தலுக்கு ரிசர்வேஷன் தொகுதி ஒதுக்குவதுபோல் ரிசர்வேஷன் செய்ய வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். இல்லாவிடில் தாலுகாவில் மட்டும் இல்லை ஜில்லாவில் கூட ஒரு ஹரிஜன் யூனியன் பிரஸிடெண்டாக வரமுடியாது என்று அரசாங்கத்திற்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக என் தாலுக்காவில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்களில் நூற்றுக்கு 75 பேர்கள் ஹரிஜனங்களாக இருக்கிறார்கள். வெள்ளம் வந்து பாழ்படுத்தியதன் காரணமாக அவர்கள் எல்லாம் இன்றையதினம் வாரமோ, குத்தகையோ கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். நிலச் சீர்திருத்தச் சட்டம் வரப்போகிறது. இதுதான் சமயம் என்று மிராசுதார்கள் "இவர்கள் ஒழுங்காக வாரம், குத்தகை அளிப்பது இல்லை" என்று கேஸ் போட்டு சூழ்ச்சியாக நிலத்திலிருந்து வெளியேற்றி வருகிறார்கள். ஆகவே உடனடியாக நமது காருண்ய சர்க்கார் கருணை கூர்ந்து நிலத்தைவிட்டு இவர்கள் வெளியேற்றப்படா மல் இருப்பதற்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டும்.

இந்த வருஷம் குத்தகை பாக்கியை அடுத்த ஆண்டில் அளந்தாலும் சரி, ஏழை விவசாயிகள் நிலத்தை விட்டு வெளியேற்றப்படாமல் இருக்க ஆபிசர்களைபோட்டு அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்ய நான் அரசாங்கத்தை கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri C. N. ANNADURAI:** சட்டமன்ற துணைத்தலைவர் அவர்களே, பிற்படுத்தப்பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும் நம்முடைய சமுதா யத்தில் சமநிலை அடைவதற்காக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிற முயற்சியில், 1-00 p.m. இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையில் ஒதுக்கப்பட்டிருக்கிற தொகையும், அத்தொகைகளை செலவழிக்கிற வகைகளையும் ஆராய்ந்து பார்ப்பதற்காக அமைந்திருக்கிற இந்த நேரத்தில், நான், இந்தப் பிரச்சினையோடு இணைத்து விடப்பட்டிருக்கிற மற்றொரு முக்கிய பிரச்சினை பற்றி பழங்குடி வகுப்பைச் சார்ந்த பல நண்பர்கள் மனவருத்தம் அடைந்ததைப்போல் இந்த மன்றத்தில் பேசியிருப்பதற்கு முதலில் எனது விளக்கத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

14th March 1961] [Sri C. N. Annadurai]

திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கு இலாயக்கற்றவர்கள் என்ற முறையிலும், அவர்கள் அரசியல் ஞானமற்றவர்கள் என்றவிதத்திலும நாட்டை ஆளுகிற அமைச்சர்கள் பேசிக்கொண்டுபோவதற்குப் பதிலளிக்கிற வகையில் மற்றவர்களெல்லாம் அமைச்சர் பதவிக்கு வருகிறநேரத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் வந்தால் என்ன என்று பேசியிருக்கிறேன். இப்படிப் பேசியதை 'ஆதிதிராவிட மக்களைத் தாழ்வாகக் கருதுகிறார்கள்', என்றும், 'எங்கள் தலைவர் கக்கன்ஜீயை நீங்கள் இழிவாகக் கருதுகிறீர்கள்' என்று, அதுகூட அல்லாது, 'தமிழ்மொழியைத் தாழ்வாக கருதுகிறீர்கள்', என்று ஒரு சிலரும் எந்தப் பழியைப் போட்டால் அது உண்மையில் என்னைப் பாதிக்கும் என்று அவர்கள் தப்பாகக் கருதுகிறார்களோ அப் பழிகளைப் போட்டு பேசிக்கொண்டு வருகிறார்கள். 'பழிபோட்டுத் தலைவாங்குவது என்ற விதத்தில் வெற்றி பெற்றுவிடமுடியும் என்று அவர்கள் கருதுவார்களானால் அவர்கள், அவர்களது ஏமாற்றத்தை வெகுவிரைவில் காண இருக்கிறார்கள். ஆதிதிராவிட மக்களோடு திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு நீண்ட காலமாக இருந்துவரும் நல்ல நேசத் தொடர்பு, இந்த விவாதத்தினால் கெட்டுவிடுமென்று நான் கருதவில்லை.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த மன்றத்தில் பேசிய நேரத்தில் நான் சொல்லியிருப்பதுபோல், இன்றும் நான் எடுத்துச் சொல்ல விரும்புவது எல்லாம், ஆதித்திராவிட சமுதாயத்தையும், பிற்பட்ட வகுப்பினரையும் கைதூக்கிவிடுவதற்காக எடுத்துக்கொள்ளப்படுகிற எல்லா முயற்சிகளையும் நாங்கள் மனப்பூர்வமாக வரவேற்கிறோம். அதற்காக ஆண்டுக்கு ஆண்டு அதிகமாக தொகை ஒதுக்கி வருவதைக் கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். மிகுந்த அக்கரையோடு கக்கன அவர்கள் அதில் கவனம் செலுத்துகிறார்கள் என்பதை இந்த மன்றத்தில் நான் முன்பே எடுத்துக் கூறியிருக்கிறேன். 'கக்கன் மந்திரியாக வருகிறபோது நான் ஏன் வரக்கூடாது', என்று சொன்னதாக நான் சொன்னதில், ஒரு வாசகத்தை விட்டுவிட்டுப் பேசியிருக்கிறார்கள்; 'காமராஜும், கக்கனும் வந்திருக்கிறபோது, நான் ஏன் வரக்கூடாது' என்று கேட்டேனே தவிர—கக்கன் அவர்களை மட்டும் தனியாகக் குறிப்பிடவில்லை; ஆகவே இதை, தனிப்பட்ட ஜாதியாரைக் குறிப்பதாகவோ அல்லது கக்கன் அவர்களைத் தனிப்பட்ட முறையிலே குறிப்பதாகவோ கொள்ளக்கூடாது. அப்படி நான் குறிப்பிடவில்லை.

கக்கன் அவர்களிடம் எனக்கு தனிப்பட்டவிதத்தில் நல்ல மதிப்புண்டு. அவர் இத்துறையில் ஈடுபட்டுப் பணியாற்றுவதில் வெற்றி பெறவேண்டுமென்று விரும்புகிறவர்களில் நானும் ஒருவன். ஆகவே, அமைச்சர் அவர்கள் தவறான ஒரு எண்ணத்தை வைத்துக்கொண்டிருந்தால் அந்த எண்ணத்தை விட்டுவிடும்படி—அந்த எண்ணத்தை நீக்கிக்கொள்ளும்படி வேண்டிக்கொள்கிறேன்.

அவர்கள் சமுதாயத்தைப் பொறுத்த விஷயத்தில் நாங்கள் எப்பொழுதுமே தரக்குறைவான அல்லது தாழ்வான கருத்துக்களைக் கொண்டதில்லை; கொள்ளவும் மாட்டோம்; மற்றவர்களை அப்படிக் கொள்ளவும்விடப் போவதில்லை. 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்று நாங்கள் பெயர் வைத்துக்கொண்டிருப்பதால் 'திராவிட' என்று வைத்துக் கொண்டிருப்பதால், ஆதித்திராவிட மக்கள், 'நீங்கள்தான் எங்களுக்கு ஏற்றவர்கள்; நீங்கள்தான் எங்களைக் காப்பாற்றுவீர்கள்' என்று சொல்கிற ஆதிதிராவிட மக்கள் இருக்கிறார்கள், நான் கக்கன் அவர்களுக்கு—அவர்கள் என்னுடன் ஒருநாள் வருவார்களேயானால் அப்படிப்பட்டவர்களை அறிமுகப்படுத்தி வைக்க ஆசைப்படுகிறேன். (சிரிப்பு) சிரிப்பு எதற்கு என்பது எனக்கு விளங்கவில்லை. 'கக்கன் அவர்களை அறிமுகப்படுத்தி வைக்கிறேன்' என்று சொன்னதற்காகவா சிரிக்கிறார்கள்? சிரிப்பதற்கு வேறு நல்ல காரணங்களை தேடிக்கொள்ளலாம்.

ஒரு சமயம், 'தமிழில் அவர்கள் படித்திருக்கிறார்கள் என்று நான் சொன்னதால் தமிழை இழிவுபடுத்துகிறேன்' என்று சொல்லுகிறார்கள். இந்த மன்றத்தில் அவர்கள் ஆங்கிலத்தில் பதிலளிப்பதிலிருந்து—அதிகாரிகள்

தருகிற அறிக்கைகளை அவர்கள் விளக்கி பேசுவதிலிருந்தும் நாம் அறிகிறோம்—அவர்கள் ஆங்கிலம் அறிந்தவர்கள் என்பது. அதுமட்டுமல்ல; 'ஆங்கிலத்தில் படித்தால்தான் அறிவாளி,' என்று கருதுகிற அளவிற்குக் கல்வித்தரம் பற்றி ஒன்றும் அறியாதவன் அல்ல நான் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். குருஷ்ஷேவிற்கு ஆங்கிலம் தெரியாமல் இருக்கலாம்; அதனால் அவர்களை, நாங்கள், தரக்குறைவானவர் என்று கருதவில்லை.

ஆங்கிலத்தில் படித்தால்தான் படிப்பு; தமிழில் படித்தால் அது படிப்பல்ல—என்பதில்லை. அதுமட்டுமல்ல; கக்கன் அவர்களும், காமராஜ் அவர்களும் பல்கலைக் கழகத்தில் போய்தான் இவைகளைப்பெற வேண்டு மென்று நான் கருதக்கூட இல்லை. வெளியிலிருந்து நிர்வாக அனுபவங் களைப் பெற்றுக்கொண்டவர்கள், அமைச்சர்களாக வேண்டுமென்ற முறையில் அல்லாமல், எடுத்த எடுப்பிலேயே மந்திரியானவர்கள் என்பதற்காகக் குறிப்பிட்டேன். 'எடுத்த எடுப்பிலேயே அவர்கள் மந்திரிகளாகி இருக்கும் போது நான் ஏன் ஆகக்கூடாது', என்றுதான் சொன்னேனே தவிர, அது அவர்கள் சமூகத்தையோ அல்லது அவர்களைத் தனியாகவோ கேவலப் படுத்த குறிப்பிடுவதல்ல. ஆகவே, அவர்கள், அந்தத் தப்பெண்ணத்தை நீக்கிக்கொள்வார்களானால் அது அவரது மனதிற்கே முதலில் ஆறுதலாக இருக்கும்; அது, தப்பு எண்ணங்களை இந்த மன்றத்தில் வளர்க்காம லிருக்கவும் உதவும்.

சமாதானம் சொல்லித் தீரவேண்டுமென்ற நிர்ப்பந்தத்தால் அல்ல நான் இதை கூறுவது. யாரையும் நான் தரக்குறைவாகப் பேசுவதில்லை என்பது அவர்களுக்கே தெரியும். இன்னும் சொல்லப்போனால், கக்கன் அவர்கள் காஞ்சிபுரத்திற்கு பிரசாரத்திற்காக வந்திருந்த நேரத்தில், 'என் வீட்டிற்கு வாருங்கள்; தேநீர் அருந்திவிட்டுத்தான் போகவேண்டும்' என்று நான் அவர்களை அழைத்தேன்; அவர்கள் அதை ஏற்றுக்கொள்ள வில்லை; ஆக, இங்குள்ள எட்டு அமைச்சர்களில் நான் அழைத்த ஒரே ஒரு அமைச்சர் கக்கன் அவர்கள்தான் என்பதிலிருந்தே நான் அவர்களைப் பற்றி என்ன எண்ணம்கொண்டிருக்கிறேன் என்பதை, அவர்கள் உணர்ந்து கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அமைச்சராக இருப்பதால், ஒரு சமுதாயத்திற்கு உயர்வு வருமா வராதா என்பது, விவாதத்திற்குரிய பிரச்சினையாக இருக்கிறது. இதே மன்றத்தில் சென்ற வருடம் பேசிய ஒரு அங்கத்தினர்—அவர் காங்கிரஸ் அங்கத்தினர் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்—'எங்கள் சமுதா யத்தைச் சேர்ந்த கக்கன் அவர்கள் அமைச்சராகிவிட்டதால் எங்கள் சமுதாயம் உயர்ந்துவிட்டதாக கருதமுடியாது' என்று சொன்னார். கக்கன் அவர்கள் அமைச்சர் என்பதற்காக அல்ல—நல்லவர் என்பதற்காக—இன்னும் சொல்லப்போனால் அவர்கள் ஆதிதிராவிட சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் என்பதற்காகவே—உயர்வாகக் கருதுகிறேன். ஆகவே, அரசியல் காரணங்களுக்காக—அரசியல் விவாதங்களுக்காகத் தப்பர்த்தத்தை வளர்த்துக்கொள்ளவேண்டாம்.

ஒரு அங்கத்தினர், கருப்பு, சிவப்புக் கொடி போட்ட தேநீர்க் கடைகளில் ஆதிதிராவிட மக்கள் அனுமதிக்கப்படுவதில்லையென்று ஆரம்பித்து, 'கதர் போட்டுக்கொண்ட ஆதித்திராவிட மக்களை அனுமதிப்பதில்லை', என்று ஒரு திருத்தம் கொடுத்தார்கள். கதர் போட்ட மக்கள் அனுமதிக்கப்படுவதில்லை யென்றால், அதற்கு நான் பதிலளிக்கத் தேவையில்லை. ஆனால், ஆதித்திராவிட வகுப்பைச் சார்ந்த மக்கள் என்பதற்காக எங்கள் கழகக் கொடி போட்ட தேனீர்க் கடைகளில் அவர்கள் அனுமதிக்கப்படவில்லை யென்றால் அவர்களைவிட எங்கள் கொடிக்கும், எங்கள் கழகத்திற்கும் இழிவு தேடிக்கொடுக்கக்கூடியவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது என்பதை நான் ஒளிவுமறைவின்றி இங்கு தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

14th March 1961] [Sri C. N. Annadurai]

ஆனால் மூவர்ணக்கொடி போட்ட கடைகளில் ஆதித்திராவிட மக்களுக்குத் தரப்படுகிற குவளைகளும், மூங்கிலை இரண்டாக வெட்டி அதன் வழியாக தண்ணீர் ஊற்றி வெளியிலிருந்து குடிக்கச் செய்வதையும் நான் இங்குள்ள கனம் அங்கத்தினர்களுக்குக் காண்பிக்கிறேன்—அவர்கள் என்னோடு வருவதானால் !

ஆக, இது கொடியின் குற்றமல்ல ; நெடுங்காலமாக இருந்துவரும் கொடிய பழக்கம்தான் காரணம். இந்தக் கொடிய பழக்கத்தைத் தீர்த்துக் கட்ட நாம் எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சிகளில் வெற்றிபெற்றிருக் கிறோமா என்பதை யோசித்துப் பார்க்கவேண்டுமே தவிர, புள்ளி விவரக் கணக்குப் போடுவதால் மட்டும் பிரச்சினை தீர்ந்து விடாது.

"ரூபாய் 3 கோடியே 55 இலட்சம் ஒதுக்கி இருக்கிறோம்', என்று குறிப்பிட்டு, 'இது பெருமைப்படத்தக்கது', என்கிறார்கள். அது பெருமைப் படத்தக்கதோ இல்லையோ, வரவேற்கத்தக்கது என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் அதில், சிறிது பொருளாதாரத் தத்துவத்தை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். போன ஆண்டு இரண்டு கோடி ரூபாயில் நடைபெறக் கூடிய காரியங்களை இந்த ஆண்டு ரூ. 2 கோடியில் நாம் நடத்துவதற்கில்லை

'பிஸிக்கல் டார்ஜட்'—நாம் எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய காரியத்தில் எந்தளவு வளர்ச்சியடைந்திருக்கிறோம் என்ற புள்ளிவிவரக் கணக்குத்தான் முக்கியமே தவிர, பத்து ஆண்டுகளுக்குமுன் சாதித்ததை—இந்தப் பத்து ஆண்டுகளில் பணம் தேய்ந்து கிடக்கிற காரணத்தினால்—நோட்டுக் களின் பெருக்கம் காரணத்தினால்—பண வீக்கம் ஏற்பட்டிருக்கிற காரணத் தினால்—விலைவாசிகள் வளர்ந்திருக்கிற காரணத்தினால், பத்து ஆண்டுகளுக்கு முன்னால் இலட்சம் ரூபாயில் முடிந்த காரியங்கள், இன்று பத்து இலட்சம் ரூபாய் வைத்தால்தான் ஆகும். இந்த பொருளாதாரக் கணக்குப்படி, 1950-51-ல் ரூ. 65 இலட்சம் செலவு செய்யப்பட்டது ; இப்பொழுது ரூ. 355 இலட்சம் செலவு செய்கிறோம்—ஐந்து மடங்கு அதிகமாகச் செலவு செய்கிறோம்', என்று பெருமைப்படுகிற அதே நேரத்தில், நம் ரூபாயின் மதிப்பு எந்த அளவிற்குத் தேய்ந்திருக்கிறது என்பதையும், விலைவாசிகள் எந்த அளவிற்கு உயர்ந்திருக்கின்றன என்பதையும் கணக்கெடுத்து, உங்கள் சாதனைகளையும், உங்கள் பெருமையையும் தேடிக்கொள்ளவேண்டுமென்று நான் டணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த ரூ. 3 கோடி 35 இலட்சம் ஒதுக்கியிருப்பது அதிசயமானது என்றோ, அல்லது அரிசனத் துறைக்குத்தான் இவ்விதம் அதிகமான அள வில் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்களா என்றோ கூர்ந்து கவனித்துப் பார்த் தால், ஆறு கோடி ரூபாய் போலீசு துறைக்கு ஒதுக்கியிருக்கிறார்கள். ஆறு கோடி ரூபாய் போலீஸ் துறைக்கு ஒதுக்கிவிட்டு, மூன்று கோடி ரூபாய் அரிசனத் துறைக்கு ஒதுக்கியிருக்கிறார்கள்.

ஒவ்வொரு துறையிலும் நாம் செலவு செய்கின்ற தொகையின் அளவு கூடிக்கொண்டே போகிறது ; அந்த அளவில் தான் இந்தத் தொகையும் உயர்ந்திருக்கிறதே தவிர, இந்தத் துறையில் மட்டும் விசேட கவனம் செலுத்தியதாக நான் கருதவில்லை. நான் எதிர்க்கட்சிக்காரன் என்ற முறையில் பேசவில்லை. என்பதை கனம் அமைச்சர் அவர்கள் மறந்து விட்டுப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பல தலைமுறை தலைமுறையாக இருந்து வந்திருக்கிற தீண்டாமைப் பேயை ஒழிப்பதற்கு மெள்ள மெள்ள படிப்படியாக இப்படியே போய்க் கொண்டிருந்தால் எத்தனை தலைமுறைகள் கழிந்தாலும் இந்தத் தீண்டா மைப் பேயை ஒழித்து விடமுடியாது.

அதற்கென்று தகுந்த விரிவான நிறைவேற்றத்தக்க கட்சிகளுக்கு அப் பாற்பட்ட பொருளாதாரத் துறையை அடிப்படையாகக் கொண்டிருக்கின்ற ஒரு உடனடியான திட்டத்தை எடுத்து, அதற்கென்று தனியாக ஒரு துறையை வேண்டுமானாலும் நிறுவி வேலை செய்யவேண்டும்.

[Sri C. N. Annadurai] [14th March 1961

'தீண்டாமையை ஒழித்தே ஆகவேண்டும்' என்ற அளவில், இந்தியத் துணைகண்ட பிரதமர் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள், 'War on poverty, war against unemployment' என்று சொல்வதுபோல்—'War against untouchability'—தீண்டாமைப் பேயை எதிர்த்து நடத்துகின்ற ஓர் அறப்போராட்டம் என்ற அளவில் இதைக் கருதிச் செய்யவேண்டும். இதை ஏற்றுக்கொண்டால் ஒழிய, '500 வீடுகள் கட்டப்போகிறோம்', என்று கூறி, 'ஐந்து வீடுகளைக் கட்டிவிட்டோம்', என்று சொல்லுவதிலைலோ, அல்லது '100 ஏர் மாடுகள் தேவைப்பட்டது; அதற்கு பத்து மாடுகளை வாங்கிக் கொடுத்திருக்கிறோம்' என்று சொல்லுவதிலைலோ, 'அடுத்தடுத்து ஒவ்வொரு ஆண்டும் 10 மாடுகள் வீதம் வாங்கிக் கொடுக்கப்படும்'; என்று சொல்லுவதிலைலோ இந்தப் பிரச்சினை சுலபத்தில் தீர்ந்து விடாது.

இதற்காகப் போடப்பட்டிருக்கும் திட்டங்கள் போதுமானவையாக இல்லை என்று இந்தத் தரப்பிலுள்ளவர்கள் எடுத்துக்காட்டிவருகின்றார்கள். 'சேரிகள் திருத்தப்படவேண்டும்; சேரியிலுள்ளவர்களுக்கு நல்ல வாழ்க்கைத்தரம் ஏற்படவேண்டும்', என்பதற்காக முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே தகுந்த இடம் ஏற்படுத்தப்படும் என்று எதிர்பார்த்தேன் நான்; இரண்டாவது திட்டத்திலும் இருக்கும் என்று எதிர்பார்த்தேன். ஏனென்றால் சேரிகள் திருத்தப்படுவதைப் பொறுத்துத்தான் விவசாய வளர்ச்சி இருக்கிறது; சேரிகள் திருத்தப்படுவதைப் பொறுத்துத்தான் சுகாதார வளர்ச்சி இருக்கிறது; சேரிகள் திருத்தப்படுவதைப் பொறுத்துத்தான் கல்வி வசதி பெருகுவது இருக்கிறது, சேரிகள் திருத்தப்படுவதைப் பொறுத்துத் தான், நாட்டில் சட்டம், அமைதி, ஒழுங்கு—இந்தப் பிரச்னைகள் எல்லாம் இருக்கின்றன. ஆகையினால், எல்லாப் பிரச்சினைகளுக்கும் அடிப்படையான பிரச்னையாக அமைந்திருப்பது ஆதிதிராவிடப் பிரச்சினையாதலால் இதற்கென்று தனியாக ஒரு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அப்படி ஏற்பாடு செய்யாமல், 'நான்கைந்து விதைப் பண்ணைகளை ஏற்படுத்திவிட்டோம்; ஒவ்வொரு தாலுகாவிலும் 10 பொலி காளைகளை வாங்கிக் கொடுத்திருக்கிறோம்; அல்லது பத்து கோழிப்பண்ணைகளை ஏற்படுத்தியிருக்கிறோம்' அல்லது பத்து ஆதித்திராவிட மக்களுக்குப் பத்து வீடுகள் கட்டிக்கொடுத்திருக்கிறோம்' என்று அமைச்சர் அவர்கள் தரப்பிலிருந்து சொல்லுவதும், ஆளும்கட்சி உறுப்பினர்கள் தரப்பிலிருந்து கட்டி கொடுத்தது 10 அதில் விழுந்து போனது 8; மீதம் இருக்கிறது 2 இதை எப்படிப் பாதுகாப்பது என்பதற்குக் கணக்குப் போட்டுக்கொள்வதைப் பார்த்தால், உண்மையிலேயே நாம் வெட்கப்பட்டுக்கொள்ள வேண்டாமா? நாங்கள், 'வெட்கப்படவேண்டாமா?' என்று கேட்கும்போது, ஆளும்கட்சி உறுப்பினர்கள் பக்கமிருந்தும், அடிக்கடி, 'வெட்கப்பட வேண்டாமா என்று எங்களாலும் கேட்க முடியும்' என்ற எண்ணத்தில் பேசுகிறார்கள். ஆனால் பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டிருப்பவர்கள் நல்லெண்ணம் கொண்டு, இதில் அக்கறை செலுத்தியிருக்கிறார்களா என்று பார்த்து இதனால் யாருக்காவது குந்தகம் ஏற்படுகின்றதா என்பதைப்பார்த்து, அதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்களா என்பதை நான் அறிய விரும்புகிறேன்.

காலனிகளுக்கு மனைக்கட்டுகள் ஒதுக்குகின்ற விஷயத்தில் ஏற்படுகின்ற கால தாமதத்தைப்பற்றி பல உறுப்பினர்கள் இங்கே குறிப்பிட்டார்கள். நம்முடைய சர்க்கார் எந்த அளவுக்கு இதில் அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பதை இந்த அறிக்கையிலுள்ள சில வாசகங்கள் தெரிவிக்கிறது; 'அரிசனங்களுக்காக நில ஆர்ஜிதம் செய்வதில் காலதாமதம் ஏற்படுவதாகச் சில சமயங்களில் புகார் செய்கிறார்கள்', என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'புகார்' என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டால், அதை ஒப்புக்கொண்டதாக அர்த்தம் ஏற்படவில்லை. 'சில சமயங்களில் புகார் செய்கிறார்கள்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். 'ஆறு ஆண்டுகளாகியும் நில ஆர்ஜிதம் செய்ய முடியவில்லையே', என்று இந்தச் சபையிலேயே சொன்னவர்களைப் பார்த்து நான் உண்மையிலேயே பயந்தே போனேன். இவர்களுக்கே இந்த கதி என்றால், மற்றவர்களுக்கு என்ன கதி என்பதை நினைத்து மலைத்தே போய்விட்டேன்.

14th March 1961] [Sri C. N. Annadurai]

ஆகையினால், மனைக்கட்டு வழங்குவது, நடைபாதை போடுவது, சுடுகாட்டுக்கு இடம் கொடுப்பது போன்ற விஷயங்களில் சட்டம் குறுக்கிடுவதாக இருந்தாலும், நம்முடைய அமைச்சர் அவர்கள், சட்ட நிபுணர்களை இதற்கென்று கலந்து ஆலோசித்து நடவடிக்கை எடுத்தால் என் இந்தத் தாமதம் ஏற்படுகிறது ? இது, இந்த ஆண்டு மட்டும் சொல்லுகின்ற குறை அல்ல, போன ஆண்டும் சொல்லப்பட்டது. அதற்கு முந்தின ஆண்டும் சொல்லப்பட்டது. இந்த மன்றத்தின் தலைவராக திரு. சிவசண்முகம்பிள்ளை அவர்கள் இருக்கின்ற காலத்திலேயே, நில ஆர்ஜிதம் செய்வதிலுள்ள குறைபாடுகளைப்பற்றி பேசப்பட்டிருக்கிறது. பத்து ஆண்டுக் காலமாகத் தொடர்ச்சியாக இது பேசப்பட்டு வந்திருந்தும் இதை நீக்குவதற்கு இதிலுள்ள கஷ்டங்களைப் போக்குவதற்கு ஏன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை ?

ஆனால் இப்போது கடைசியில் குறிப்பிட்டிருக்கிறார்கள் 'சட்டக் கமிஷனின் சிபாரிசுகளை அனுசரித்து நில ஆர்ஜித நடைமுறையைக் குறைக்க, சட்டத்தைத் திருத்தும் பிரச்சினையை அரசினர் ஆலோசித்து வருகின்றனர் என்பதையும் இங்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம். . . . ' என்று. இந்த அளவுக்குத்தான் நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. பத்தாண்டு காலமாக மனைக்கட்டு விஷயத்தில் சட்டம் குறுக்கிடுகிறது என்று தெரிந்திருந்தும் அதை நீக்குவதற்கு முயற்சிகள் எடுத்துக் கொள்ளாததற்கு காரணம் என்ன? அதில் வெற்றிபெறுவதைப் பொறுத்துத்தான் மக்களிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற நல்லெண்ணத்தைப் பெருக்கிக்கொள்ள முடியுமே தவிர, வெறும் புள்ளிவிவரக் கணக்கை மட்டும் நம்பி உங்கள் நல்லெண்ணத்தைப் பெருக்கிக்கொள்ள முடியாது.

அதோடு, இதில் பணம் ஒதுக்குவது மட்டுமல்ல, பெருமளவு பிரச்சாரமும் தேவை—என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். பிரச்சாரத்திற்காக "அரிஜன விழா" நடப்பதைப்பற்றி இரண்டு ஆண்டுகளுக்குமுன் பேசிய போது, 'இது நலம் அளிப்பதாக இல்லை; இதை ஒரு பொது நாளாகக் கொண்டு, இதில் எல்லாக் கட்சிகளும் கலந்து கொள்ளுகின்ற அளவில் ஊருக்கும் சேரிக்கும் நல்ல உறவு ஏற்படுகின்ற வகையில் இதை விரிவு படுத்த வேண்டும்' என்று இந்த மன்றத்தில் நான் பன்னிப்பன்னி சொன்னேன். ஆனால் இங்கேப் பேசப்படுவது வேறாக இருக்கிறது. எல்லாக் கட்சிகளுக்கும் இதில் கலந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு கொடுக்கவேண்டும்; அதன் மூலம் " அரிசன விழா " கொண்டாடப்படவேண்டும்.

எதிர்க்கட்சியினர் கலந்து கொள்வதில் அமைச்சர் அவர்களுக்கு அச்சம் இல்லையென்றாலும், வேறு சிலருக்கு அச்சம் ஏற்படுகிறது ; வேறு சிலர் அச்சப்படுகின்ற அளவுக்குப் பேசினார்கள். அமைச்சர் அவர்களுக்கு அச்சம் இல்லாவிட்டாலும் ஐயப்பாடு ஏற்படுகிறது. 'அந்த இடங்களில் வந்து இவர்கள் எங்கே நாட்டுப்பிரிவினையைப் பற்றி பேசிவிடுவார்களோ ?' என்று எண்ணுகிறார்கள். நாட்டுப் பிரிவினையைப்பற்றி பேசுவதற்கு நேரம் கிடைக்காமல், காலம் கிடைக்காமல், இடம் கிடைக்காமல் இருந்தால் அல்லவா இந்த " அரிஜன விழா "வில் வந்து பேசவேண்டும் ? ஆகவே, அச்சமும் வேண்டாம். ஐயப்பாடும் வேண்டாம்.

சேரியிலுள்ளவர்கள் ஊருக்குள் வருவதற்கும், ஊரில் இருக்கின்றவர்கள் சேரிகளிலுள்ள வீடுகளுக்குப் போவதற்கும் சேரியில் நடமாடும் குழந்தைகள் ஊரிலுள்ள குழந்தைகளோடு கைகோர்த்து விளையாடுவதற்கும். சேரிகளிலுள்ள முதியவர்கள் ஊரிலுள்ள முதியவர்களோடு அன்பு கனிய பேசுவதற்கும், முடிந்தால் அன்றைய தினம் ஊரிலுள்ளவர்களும், சேரியிலுள்ளவர்களும் ஒன்றாக உட்கார்ந்து உணவருந்துகின்ற முறையில் 'சமபந்தி போஜனம்' நடத்துவதற்கும் வகை செய்தால் இதைத் திருநாள் என்ற முறையில் நடைபெறுவதற்கு வகைசெய்திருந்தால், நிச்சயமாக சேரியிலுள்ளவர்களின் மதிப்பு உயரும் ; அதன் மூலம் நல்ல பலனையும் நாம் நிச்சயமாகக்காண முடியும் என்பதை நான் வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri C. N. Annadurai] [14th March 1961

நம்முடைய அமைச்சர் கக்கன் அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். நீங்கள் இதற்கான பிரச்சாரத்தில் ஈடுபடுகின்ற நேரத்தில் அதிலும் பள்ளிக் கூடப் பிள்ளைகளிடத்தில் பேசுகின்ற நேரத்தில் கல்லூரி மாணவர்களிடத்தில் பேசுகின்ற நேரத்தில் நீங்கள் அறிவுரை சொல்லுங்கள்.—'நீங்கள் உங்கள் விடுமுறை நாட்களில் ஆதித்திராவிட மக்கள் சாதி இந்துக்கள் வீட்டிலும் சாதி இந்துக்கள் ஆதித்திராவிட மக்கள் வீட்டிலும் விருந்தினராக தங்கி இருங்கள்' என்று அவர்களிடத்தில் சொல்லவேண்டும். இவ்விதம் அமைச்சர் பிரச்சாரம் செய்வது பொருத்தமாக இருந்தாலும் இல்லா விட்டாலும், இந்தக் காரியத்தைச் செய்வதில் அக்கறை இருக்கும் என்றால் இந்தக் காரியத்தைச் செய்தே ஆகவேண்டும்' என்று ஒவ்வொருவருக் கும் சொல்லவேண்டும். அந்த அளவுக்கு சமுகத்தில் மூடுபனி போல் பரவி இருக்கின்றது இந்தத் தீண்டாமை.

அதல்லாமல்—'எங்கள் அமைச்சர் அவர்கள் இந்த இலாகாவில் வந்த தினுல் தான் இவைகள் எல்லாம் நடந்தன ; காங்கிரசு கட்சி இருப்பதினுல் தான் இத்தனை எம். எல். ஏக்கள் இந்த மன்றத்தில் வரமுடிந்தது' என்றெல்லாம் சொல்வதால், எந்தவிதமான பலனும் இல்லை. அப்படியே சொல்லிக்கொண்டிருந்தால், நானும் சொல்லலாம் 'கார்ப்பரேஷனில் எங்கள் கட்சி வந்ததின் பின்னுல் தான் எட்டு ஆதித்திராவிட மக்கள் கார்பபரேஷன் உறுப்பினர்களாக வரமுடிந்தது' என்று.

இவ்விதம் பெருமைப்பட்டுக் கொள்வதால் எந்தவிதமான நன்மையும் ஏற்பட்டுவிட முடியாது. ஆகையால், பெருமைக்காக மட்டுமல்லாமல், நியாய உணர்ச்சியோடு, ஆதித்திராவிட சமுதாயத்திற்கும், மற்ற சமுதாயங்களுக்கும் இடையில் இருக்கின்ற வேறுபாடுகளைக் கருதி, அவர் களுக்கு இடையில் இருக்கின்ற பொருளாதாரப் பேதங்கள், சமுதாயப் பேதங்கள் ஆகியவற்றையெல்லாம் போக்குவதற்குச் சட்டத்தைவிட நிர்வாகத்தில் செலவு செய்வதைவிட பிரச்சாரம் செய்வதுதான் முக்கிய மானது ; இன்னின்ன விதங்களில் பிரச்சாரம் செய்கிறோம் — என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைப் படிக்கின்ற நேரத்தில் மற்ற—என்னென்ன காரியத்திற்செல்லாமோ இங்கு பலர் சிரிக்கிறார்கள்.—இதைப் படிக்கின்ற நேரத்தில் எனக்குச் சிரிப்பு வந்தது.

ஏனென்றால், இதிலே யாரோ 'கிராம சேவக்'குகள் என்று இருக் கிறார்களாம்; அவர்கள் ஒவ்வொரு இடத்திற்கும் சென்று, வில்லுப்பாட்டு பாடித் தீண்டாமையை ஒழித்தார்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. வில்லுப்பாட்டே, ஒழிந்துகொண்டு வருகிற ஒரு முறை; ஒழிந்துகொண்டு வருகிற ஒரு முறையை வைத்துக்கொண்டு, தீண்டாமையை ஒழிப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிறகு வேறு ஏதாவது செய்கிறார்களா என்று பார்த்தால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி பிரச்சாரம் செய் கிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரையும் எடுத்துக் கொண்டுபோய் உங்கள் சார்பில் திருப்ப ஐந்தாண்டுத் திட்டப் பிரசாரத் துக்கு முயற்சி செய்கிறீர்களே தவிர, தீண்டாமையை ஒழிக்க அத்தகைய பிரசாரத்தை நீங்கள் மேற்கொண்டிருக்கிறீர்கள் என்று இதிலிருந்து விளங்கவில்லை. நிதி நிலை அறிக்கையிலே மட்டும் கலந்து பேசுவது என்று கருதாமல் அமைச்சர் கக்கன் அவர்கள், அவர்களுக்கு ஓய்வு கிடைக்கிற ஒவ்வொரு நேரத்திலேயும், ஒவ்வொரு கட்சியிலும் இருப்பவர் களுடனும் கலந்து பேசி இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாண அதற்கான வழிவகைகளை ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமே தவிர, எதையும் கட்சிக் கண்ணோட்டத்தோடு பார்ப்பது, தன்னைப்பற்றியே தாழ்வாகக் கருதி, மன வருத்தம் கொண்டு, பிரச்சினைக்கு பரிகாரம் தேடாமல், அந்த வேலையி லிருந்து நழுவ வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சேரிகளைத் திருத்திப் பாதைகளை அமைக்க, குடி தண்ணீர் கிணறுகளைத் தோண்ட, பள்ளிகளைக் கட்ட, புறம்போக்கு நிலங்களை விளைநிலமாக்க நிதி நிலை அறிக்கையிலே நிதி ஒதுக்கி ஆண்டுக்காண்டு இந்த நிலையில் போய்க் கொண்டிருந்தால், எத்தனை ஆண்டில் நீங்கள் எதிர்பார்க்கும் பலனை அடையமுடியும் என்று அறிய விரும்புகிறேன். 25 ஆண்டு வேண்டுமா? 50 ஆண்டில் சாதிப்பீர்களா? அல்லது நூற்றாண்டு தேவையா? இப்படி நீங்கள்

14th March 1961] [Sri C. N. Annadurai]

கள் இந்த வேகத்தில் வெட்டிக்கொண்டு போய்க்கொண்டிருப்பீர்களேயானால், பூரா இடத்தையும் வெட்டுவதற்குமுன், வெட்டப்பட்ட இடம் தூர்ந்துவிடும் என்பதை மறந்துவிட வேண்டாம். "மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி எனது கருத்தை அமைச்சரவை கேட்ட நேரத்தில், நான் குறிப்பிட்ட ஒரு கருத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். சேரிகளைத் திருத்தவும், சேரிகளில் கிணறுகளை அமைக்கவும், புதிய வீடுகளைக் கட்டுவதற்கும், பாதைகளைப் போடுவதற்கும், புறம்போக்கு நிலங்களை விளை நிலங்களாக மாற்றுவதற்கும் ஐந்து ஆண்டுக் காலத்திற்கு நாம் ராணுவத்தைப் பயன்படுத்தி, அவர்களிடத்திலே உள்ள இஞ்ஜினீயர்களை பயன்படுத்தி அவர்களிடத்திலே உள்ள தளவாடங்களைப் பயன்படுத்தி, அவர்களிடத்திலே உள்ள பணியாட்களைப் பயன்படுத்தி இவைகளை வைத்துக்கொண்டு, இந்தச் சீர்திருத்தத்தை ஐந்து ஆண்டிலே சாதிக்கிறோம் என்று ஒரு திட்டத்தைப் போட்டுக்கொண்டாலொழிய ஆண்டுக்காண்டு தொகை ஒதுக்குவதால் மட்டும் இந்த வேலை முடியாது. அப்படிப்பட்ட ஒரு புனிதப்போரை நீங்கள் நடத்துகிற நேரத்தில் நாங்கள் சார்ந்திருக்கிற கழகம் வேறு, காங்கிரஸ் வேறு என்ற அளவில் இருந்தாலும் முற்போக்கு வேலையை விரும்புகிறவர்கள் ஒரு பக்கத்திலும், மற்றொரு பக்கத்தில் இந்த முற்போக்குப் பணியை விரும்பாதவர்கள் பிரிந்து நிற்பார்கள். அப்படிப்பட்ட நேரத்தில் கனம் கக்கன் அவர்கள் உறுதியாக நம்பலாம். நான் அவர் பக்கத்தில் இருப்பேனே தவிர, வைதீகர்கள் பக்கத்திலோ, பிற்போக்காளர்கள் பக்கத்திலோ நானோ என்னைச் சேர்ந்தவர்களோ நிற்க மாட்டோம். அவர்களிடத்தில் ஆங்கிலத்தில் சரளமாக பேச முடியுமா, முடியாதா என்று நான் கவலைப்படமாட்டேன்—பேசுவது ஆங்கிலத்தினால் மட்டும் என்று நான் கருதவில்லை, நல்ல தமிழில் பேசலாம், கனிந்த நட்பு பேசுவதால் மட்டுமல்ல, பக்கத்திலிருந்து பணியாற்றுவதில் அத்தகைய நட்பு ஏற்பட முடியும் என்ற காரணத்தால் இதைக் குறிப்பிட்டுக்கொண்டு, இந்தத் துறைக்கு ஒதுக்கியிருக்கிற ரூ. 355 லட்சம் போதாது என்பதையும் கூறி, அதிக வேலைகள் விரைவாக நடக்க இதை கட்சிகளுக்கு அப்பாற்பட்டதாகக் கருதி, இந்தப் பிரச்னையை உடனடியாகத் தீர்க்க தனித்திட்டம் வேண்டுமென்று எடுத்துச் சொல்லி என் உரையை முடித்துக்கொள்கிறேன்-வணக்கம்.

* THE HON. SRI P. KAKKAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மதிப்புக்குரிய அங்கத்தினர்கள் பலர் நல்ல ஆலோசனைகளையும் கருத்துக்களையும் சொல்லியதற்காக முதலில் நான் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். ஹரிஜன நல மானியத்தை நிறைவேற்றுவதற்கு முன்பாக மத்திய சர்க்காரிலிருந்து நமக்கு, குறிப்பாக ஹரிஜன மக்களுக்கு அள்ளிக் கொடுத்த மாபெரும் தலைவன் இறந்துவிட்டது பெரிய துர்ப்பாக்கியம். பந்த்ஜி அவர்கள் இந்த இலாகாவிற்கு மந்திரியாக இருந்தார். அவர் காலத்தில் எந்தெந்தத் திட்டங்களைக் கொடுத்து உதவி செய்யவேண்டுமென்று கேட்டோமோ அவைகளையெல்லாம் கொடுத்து உதவினார். அவர் அநேக நல்ல திட்டங்களை ஒவ்வொரு மாநிலத்திலேயும் ஆதிவாசிகளுக்காக, ஹரிஜன மக்களுக்காக, இந்த இலாகாவை நிர்வகிக்கிற மந்திரிகளையெல்லாம் கூப்பிட்டு ஆலோசனை சொன்னார்கள். அவர்களுடைய ஆலோசனையின்பேரில்தான் சமுதாயத்திற்கு சிறந்த பணிசெய்கிற, நகரங்களை அழகுபடுத்துகிற சமுதாயம் தொண்டு செய்கிற நகர சுத்தி தொழிலாளிர்களுக்கு அதிகமாக நன்மை செய்யவேண்டுமென்று, இந்த மலங்களை எடுத்து பெட்டிகளில் வைத்து இடுப்பிலேயோ, தலையிலேயோ வைத்துக் கொண்டு போகிற நிலைமை இருக்கக்கூடாது என்று அதற்காக தள்ளு வண்டிகளை ஏற்பாடு செய்து அதன் மூலமாக அப்புரப்படுத்த ஏற்பாடு செய்யவேண்டுமென்று சொன்னார்கள். அதற்கிணங்க இப்போது நம் மாநிலத்தில் கூட இதற்கென்று பல ஆயிரக்கணக்கான ரூபாய் ஒதுக்கி மானியமாக பஞ்சாயத்து போர்டுகளுக்கும், நகர சபைகளுக்கும் கொடுத்து உதவி செய்ய அரசாங்கம் முன்வந்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பல அங்கத்தினர்கள் ஹரிஜன மக்களிடையே இருக்கக்கூடிய அருந்தியத சகோதரர்களுக்கு அதிகப்படியான நன்மைகள் செய்யவேண்டு

[Sri P. Kakkan] [14th March 1961

மென்று சொன்னார்கள். அரசாங்கம் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அவைகளை மனதில் வைத்துக்கொண்டுதான் பணியாற்றி வருகிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன். இன்றைய தினம் கருவிகள் வாங்கிக் கொடுப்பதை எடுத்துக்கொண்டால் அதிகமாக நன்மை அடைவது அந்த சகோதரர்கள்தான். எல்லோரையும் ஒரே கண்ணோட்டத்தில்தான் பார்க்க வேண்டும், அருந்ததியார் மாநாடு என்று கூட்டினாலோ, தேவேந்திரர் மாநாடு என்று கூட்டினாலோ நான் போவதில்லை. ஹரிஜன மக்கள் யாவரும் ஒனறு என்ற காரணத்தினால் தாழ்த்தப்பபட்டவர்கள் மாநாடு போன்ற மாநாடுகளில்தான் நான் கலந்துகொள்வேன். அருந்ததியார் சகோதரர்களுக்கு என்னைக் காட்டிலும் அந்தச் சகோதரர்களுக்காக பாடு படுபவர்கள் இல்லை என்று சொல்லிக்கொள்கிறேன். கருவிகள் கொடுப் பதை எடுத்துக்கொண்டால் தோல் பதனிடும் தொழிலில் அதிகமாகத் தெரிந்தவர்கள் இவர்கள்தான். இந்த அரசாங்கம் எவ்வளவு கொடுத் திருக்கிறது என்று கணக்கிட்டுப் பார்த்தால் அவர்களுக்குத்தான் அதிகம் கொடுத்திருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன். வீடுகள் கட்டிக் கொடுப்பதிலும்கூட ஒரு சுற்றறிக்கை எல்லா கலெக்டர்களுக்கும் அனுப்பி வைக்கக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். ஹரிஜனங்கள் எந்தப் பிரிவினராக இருந்தாலும் எல்லாப் பிரிவினருக்கும் திருப்திகரமாக இருக்கவேண்டும். வீடுகள் ஜாஸ்தியாக இருந்தாலும், அந்தப் பிரிவினருக்கும் ஜாஸ்தி யாகவும் கொஞ்சமாக இருந்தாலும் சிலருக்கு அவர்களோடு குறைவாகவும் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளோம். ஒரு பிரிவி னருக்கு வீடுகள் கொடுக்கவில்லை என்ற பாகுபாடு இருக்கக் கூடாது என்ற ஒரு எச்சரிக்கை அரசாங்கம் மூலமாகக் கொடுக் கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன். குறிப்பாக ஹாஸ்ட டலில் மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதிலும் கூட அருந்ததியார்களுக்கு முதற் சலுகை கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஒன்றும் கவனிக்கவில்லை, ஆதரிக்கவில்லை என்று சொல்வது நல்லதல்ல, அந்த எண்ணத்தை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று கனம் சுப்பையா அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். வீடுகள் கட்டுவதிலே நல்ல வீடுகளாக இல்லை, மோசமாக இருக்கிறது, காற்று அடித்ததில் விழுந்திருக்கிறது என்று சொன்னார்கள். கனம் அங்கத்தினர் இருக்கும் ஊரில் அமைந்திருக்கக்கூடிய காலனியைப் பார்த்தால் அந்த மாதிரி சொல்லி யிருக்கமாட்டார். கோவில்பட்டியிலே நல்லதொரு காலனியை அமைத் திருக்கிறோம். அதைப்பற்றி மெச்சவேண்டுமே தவிர மோசம் என்று சொல்வது நல்லதல்ல.

SRI V. SUBBIAH : குருவிக்குளம் பிளாக்கில் மறவர் காலனி ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. பால் காய்ச்சுவதற்கு முன்பாகவே காலனி விழுந்திருக்கிறது. கழுகுமலையிலிருந்து தேவர்குளம் போகக்கூடிய பாதையில் இருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினருடைய ஊரில் நல்லமுறையில் கட்டப்பட்டிருக்கிறது என்பதை அவர்களே ஒத்துக்கொண் டதாகத் தோன்றுகிறது. ஒரு சில இடத்தில் கொஞ்சம் மோசமாகப் போயிருக்கலாம்.

நான் முன்பு சொன்னபடி கொடுக்கப்படும் 750 ரூபாயிலே 550
1-30 p.m. ரூபாய் மான்யமாகவும், 200 ரூபாய் கடனாகவும் கொடுக்கிறார்கள். இதிலே ஆங்காங்கே உள்ளவர்கள் தங்களுக்கு கட்டப்படும் வீடு என்று அக்கறை எடுத்துக்கொள்ளவேண்டும். நன்கு கவனம் செலுத்தப்பட்ட இடங்களில் வீடுகள் நல்ல முறையில் அமைக்கப்பட்டு வருகின்றன. நான் சாத்தூர் தொகுதிக்குப் போனேன். அங்கு மக்கள் நமக்காக கட்டப்படும் வீடுகள் என்ற எண்ணத்தோடு, தாங்களே கொஞ்சம் மேலே ரூபாயும் போட்டு பணக்காரர்கள் நன்கு கட்டிக்கொள்ளக்கூடிய அளவிலே நல்ல முறையிலே வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஒரு சில இடங்களில் அவர்களே கட்டிக்கொள்கின்றனர். முன்புதான் காண்ட்ராக்ட்டர்களுக்கு கொடுத்து வந்தோம். இதிலே சில கஷ்டங்கள் ஏற்பட்டதாலே, அங்குள்ள மக்கள் யார் யாருக்குக் கொடுக்கச் சொல்லுகிறார்களோ அவர்களுக்கோ அல்லது

14th March 1961] [Sri P. Kakkan]

அவர்களுடைய பிரதிநிதிகளுக்கோ இந்தக் காலனிகள் கட்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். அங்குள்ள மக்களால் முடியவில்லையானால், ஒரு பொறுப்பு வாய்ந்த நபரை அவர்கள் பிரதிநிதியாகக் குறிப்பிடவேண்டு மென்றுதான் அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. ஏதோ ஒரு சில வீடுகள் மோசமாக இருக்கலாம். ஆனால் அதற்காக எல்லா வீடுகளும், மோசம் என்று ஒதுக்கிவிடக்கூடாது. தி. மு. க. கட்சித் தலைவர் அவர்கள்கூட தான் கவந்தபாடி சென்றதாகவும், அங்கு வீடுகள் இடிந் திருப்பதைப் பார்த்ததாகவும் குறிப்பிட்டார்கள். அதற்குக் காரணம் அங்கு ஸ்வீப்பேஜ் தண்ணீர் ஊறியதுதான். ஆனால் அந்த வீடுகள் ஹரிஜன இலாகாவால் கட்டப்படவில்லையென்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக் குத் தெரிவித்துக் கொள்கிறேன். சில இடங்களில் கண்ட்ராக்டர்கள் கொஞ்சம் மிச்சம் பிடிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு, அவர்கள் இப்படி செய்கிறார்கள். ஆனால் எங்கெங்கு கவனம் செலுத்தப்பட்டு வரு கிறதோ, அங்கெல்லாம் நல்ல முறையிலேதான் கட்டப்பட்டு வந்திருக்கிறது. ஏதோ ஒரு சில இடங்களில் உள்ளதை வைத்துக்கொண்டு, "காமாலை கண் ணுக்கு கண்டதெல்லாம் மஞ்சள்" என்பதைப் போல், அந்தக் கண் ணோட்டத்தோடு இதைப் பார்க்கக்கூடாது.

**Sri A. GOVINDASAMY:** ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர் ஸார், என் னுடைய தொகுதியிலே உள்ள கச்சராபாளையத்தில் வீடுகள் இடிந்துள் ளதைப்பற்றிச் சொன்னேன். அதற்கு கனம் அமைச்சர் அவர்கள் இடிந்த வீட்டுக்கு இப்படி "காமாலை கண்ணுக்கு கண்டதெல்லாம் மஞ்சள்" என்று எங்கள் மீது குற்றம் சாட்டக்கூடாது. ஆகவே இவ் வார்த்தைகளை வாபஸ் வாங்கவேண்டுமென்று சொல்லவேண்டும்.

**The Hon. Sri P. KAKKAN:** கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் புண்பட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. உதாரணத்திற் காகத்தான் சொன்னேன். பழமொழி இப்படி இருக்கிறது என்பதைத் தான் சொன்னேன். ஒரு சில வீடுகள் இடிந்தில்லை என்று நான் சொல்ல வில்லை. அந்தமாதிரி இருப்பதற்கு பொறுப்பு மக்களையும் சார்ந்திருக் கிறது என்பதைத்தான் இங்கு தெரிவித்துக்கொள்கிறேன. எங்கெங்கே நல்ல உற்சாகத்தோடு மக்கள் தங்கள் வீடு என்று கவனம் செலுத்தினார் களோ, அங்கெல்லாம் நல்ல முறையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்திருக் கின்றன.

வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடுதான் வீடுகள் கட்ட அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. 1961–62-லே வீடுகள் கட்ட 1,000 ரூபாய் என்று சொல்லியிருக்கிறோம். இப்படி 1,000 என்று சொன்னால், சில நண்பர்கள் "ஆயிரம்தானா, போதாதே, இன்னும் கொடுங்கள" என்று சொல்லுகிறார்கள். நீலகிரி ஜில்லாவைச் சார்ந்தவர் கள் தாங்கள் மலைப் பிரதேசத்தில் இருப்பதால், தங்களுக்கு 1,500 கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். எல்லா ஆதிவாசிகளுக்கும் வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டும் என்ற எண்ணத்தோடுதான் நாம் திட் டங்கள் வகுக்கின்றோம்: ஆனால், 1000 கொடுத்தால் 1,500 1,500, கொடுத் தால் 2,000, 2,000 கொடுத்தால் 2,500 என்று இப்படி கேட்டுக்கொண்டே போனால், நாம் பணத்திற்கு எங்கே போவது ? இப்படியெல்லாம் செய்ய வேண்டுமென்பதற்காகத்தானே திட்டமிட்டு செய்யப்படுகிறது. அப்படியில்லா விட்டால் ஒரு காரியமும் செய்யமுடியாது. ஹரிஜன மான்யம் ஒன்றுதான் இருக்கிறது. வேறு எந்த வேலைகளும் இல்லை. ஆகவே எல்லா செலவு களும் இதற்கே என்று திட்டமிட்டுச் செய்தாலும், இப்போதைக்கு இதை நிறைவேற்ற முடியாது. ரொம்ப நாட்களாக நாம் கஷ்டப்பட்டுக்கொண்டு வந்திருக்கிறோம். இப்போதுதான் விடுதலை பெற்றிருக்கிறோம். இத்தனை நாட்களாக அடிமைகளாக இருந்துவந்தோம். சுதந்திரம் அடைந்த பிறகு தான், திட்டங்களைப் போட்டு காரியங்களைச் செய்து முன்னேற்றம் அடைவ தற்காக ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்திருக்கிறோம். இந்த முன்னேற் றத்தை ஒரு ஐந்தாண்டுத் திட்டத்தில் அடைந்துவிட முடியாது என்பது எல்லோருக்கும் தெரியும், "நாடு உயர நாம் உயர்வோம்" "தேசம்

[Sri P. Kakkan] [14th March 1961

முன்னேற, நாம் முன்னேறுவோம்'' என்பதற்கு நாமும் ஒன்று சேர்ந்து பாடுபட்டால்தான் ஹரிஜன சமுதாயத்தை முன்னுக்குக் கொண்டுவர முடியும். நமக்கு போலீஸ் வேண்டியிருக்கிறது. நல்ல ரோடு வசதிகள் வேண்டியிருக்கிறது. இன்னும் பிற வசதிகள் வேண்டியிருக்கிறது. இவைகள் எல்லாம் நல்ல முறையில் அமைக்கப்பட்டால்தான் ஹரிஜன சமுதாயம் உயர முடியும். இது எல்லாம் அவர்களுடைய உயர்வுக்கும் தேவை. இதைத்தான் மறைந்த பந்த் அவர்கள், ஹரிஜனங்களுக்கு கொடுக்கக் கூடிய மான்யத்தை ஒரு உப மான்யமாக கொள்ளவேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறார். இதுபற்றி எல்லா சர்க்கார்களுக்கும் அறிவுறுத்தியும் இருக்கிறார். ஹரிஜன முன்னேற்றத்திற்காக 100 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னால் இதர இனங்களுக்காக இதர ஜில்லாக்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் தொகைகளோடு, இதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். உங்களுக்குத்தான் தனியாக மான்யம் ஒதுக்கப்பட்டிருக்கிறதே, நீங்கள் அங்கே போங்கள் என்று சொன்னால், அவர்கள் எங்கே போவார்கள். இப்படி சொல்லக்கூடாது என்பதற்காகத்தான் இதை நல்ல முறையிலே எடுத்துச் சொல்லி, தாக்கீதும் கொடுத்திருக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு, அந்தக் கண்ணோட்டத்தில்தான் தயவுசெய்து இதைப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நம்முடைய கனம் அண்ணாத்துரை அவர்கள் ஹரிஜன முன்னேற்றத்திற்கு என்று தனியாக ஒரு ஐந்தாண்டுத் திட்டம் போட வேண்டுமென்று சொன்னார்கள். இதற்காக என்று ஒரு திட்டம் போட முடியாது. ஏற்கனவே எல்லாவற்றிலும் திட்டங்கள் போட்டுதான அதன்படி செய்து கொண்டு வருகிறோம். முன்பு சொன்னது போல் ''பாரத நாடு உயர, தமிழகம் உயரும்'' அதற்குத் திட்டம் போட்டுத்தான் உயர முடியும். அதற்காகத்தான் இப்போது ஐந்தாண்டுத் திட்டங்கள் போடப்பட்டு வருகின்றன. அதைவிட்டு இதற்காக மட்டும் ஒரு திட்டம் போட்டுக் கொண்டால், இவர்களே கக்கன் மந்திரியாக வந்து விட்டதால், அவருடைய சமூக முன்னேற்றத்திற்கு என்று ஒரு திட்டத்தைப் போட்டுக் கொண்டார் என்றும் சொல்லுவார்கள். (சிரிப்பு) ஆகவே எல்லா மக்களையும் அரவணைத்துத் தான் போகவேண்டும். ஹரிஜனங்கள்; பின் தங்கிய வகுப்பினர்கள் எல்லோருடைய நலனையும் கவனிக்க வேண்டும். இது சாமான்யமானதப்பட்ட வேலையல்ல. இதிலே ஜாதி இந்துக்களுடைய ஒத்துழைப்பையும் நாம் பெற வேண்டும் இந்தப் பிரயாசைகளையெல்லாம் எடுத்தக் கொள்ளாமல், நாம் சட்ட சபையிலே ஒரு சட்டத்தை மட்டும் நிறைவேற்றி விடுகிறோம் என்று சொன்னால், அதை அப்படியே வைத்துக் கொள்ளுங்கள் என்றுதான் சொல்வார்கள், ஆலயங்களில் ஹரிஜனங்கள் பிரவேசிக்க வேண்டுமென்று சட்டம் செய்கிறோம். ஆனால் அதைச் செய்வதற்கு அவர்களுடைய ஒத்துழைப்பு வேண்டும் இல்லாவிட்டால் எதையும் நாம் நிறைவேற்ற முடியாது. அதனாலே மக்களிடத்திலே அன்பைப் பரப்புவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒரு சில இடங்களில் கொடி கட்டியிருந்தால், இவர்கள் தொந்திரவு இருந்து வருகிறது என்று கூறப்பட்டது அதற்குக் காரணம் அறியாமைதான். அறியாத் தன்மையைப் போக்குவதற்கு பிரசாரம் செய்ய வேண்டும். பிரச்சாரம் செய்வதாலும் சொல்லுவார்கள் உண்மைக்கு விரோதமாக:

''பொய்யுடை ஒருவன் சொல்லும் வன்மையால்
மெய் போலும்மே, மெய் போலும்மே''

என்பதற்கிணங்க சிலர் வேறு விதமாக சொல்வார்கள்

எல்லோரும் ஹரிஜனங்களை உயர் நிலைக்குச் கொண்டு வரவேண்டுமென்று எண்ணுகிறோம். அப்படி உயர்த்துவதற்காக அவர்களுக்குக் கொஞ்சம் சலுகைகள் கொடுக்கப்பட்டு வருகிறது. எப்படித் தாயாரானவள், தன்னுடைய நோஞ்சல் குழந்தையிடத்திலே அதிக அக்கறை காட்டி வருவாளோ, அந்த முறையிலேதான் இவர்களுக்கும் அரசாங்கத்தால் சில சலுகைகளை கொடுக்கப்பட்டு வருகின்றன.

14th March 1961] [Sri P. Kakkan]

பொதுவாக மக்களிடத்திலே மனமாற்றம் வேண்டும். இந்த மனமாற்றம் ஒரு சில இடங்களில் இருக்கலாம். கிராமங்களிலே சில அக்கிராமங்கள் செய்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். எங்கும் 100-க்கு 100-க்கு மன மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லிவிட முடியாது. அதே போல் பட்டணங்களிலேயும் மனம் மாற்றம் 100-க்கு 100 அடைந்து விட்டார்கள் என்று சொல்ல முடியாது. அது எப்படி 100-க்கு 100 மன மாற்றம் செய்ய முடியும்? கனம் அண்ணாதுரை அவர்கள் முதலிலே ஒரு விளக்கம் கொடுத்தார்கள். அதை நான் வரவேற்கிறேன். அந்த மாதிரியான எண்ணம் யாருக்கும் இருக்கக்கூடாது. அன்பர்கள் அந்த மாதிரியான நோக்கத்தோடு சொல்லவில்லை. எதோ ஒரு கவனத்திலே சொல்லியிருக்கலாம். விசாரித்துப் பார்த்தால் தெரியும், நான்கூட தி. மு. க. அங்கத்தினர் ஸ்ரீமதி சத்தியவாணி அம்மையார் அவர்களிடத்திலே இந்த மாதிரி எல்லாம் பேசுகிறார்கள் என்று சொல்லியிருக்கிறேன், அப்படி அவர்கள் சொல் லியிருப்பது, நல்லதல்ல என்று சொல்லிக் கொள்கிறேன். அவர்கள் அப்படிப் பேசுவதால் மாற்றுக் கட்சியினருக்கோ, மற்றவர்களுக்கோ அல்லது சமுதாயத்தின் பெருமையோ தாழ்ந்துவிடாது; எந்தக் கட்சியாக இருந் தாலும்சரி, யார் வந்தாலும் சரி அவர்களுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டுமென்பதை இந்தச் சமயத்திலே வற்புறுத்திச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஹாஸ்டல் நடத்துவது பற்றி பல அங்கத்தினர்கள் அபிப்பிராயம் சொன்னார்கள். அரசாங்கமே ஹாஸ்டல்களை எடுத்து நடத்தவேண்டுமென்று பல நண்பர்கள் சொன்னார்கள். தனிப்பட்டவர்கள் ஹாஸ்டல்களை நடத்தினால் தான் அவர்கள் நன்கொடை முதலியவைகளைப் பெற்று அதிக மாணவர் களைச் சேர்ப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது என்று சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். இம்மாதிரி ஹாஸ்டல்களை நடத்துவதற்கு குறிப்பாகச் சொன்னால், முதல் முதல் நம்முடைய தேசப் பிதா காந்திஜி அவர்கள் தான் பிச்சைஎடுத்து, அதற்கான நிதி திரட்டினார், ஹரிஜன சேவா சங்கத்தை நிறுவினார். ஹரிஜன சேவா சங்கங்கள் ஹாஸ்டல்கள் நடத்தி வந்தன. ஹரிஜன சேவா சங்கங்கள் நடத்துகிற ஹாஸ்டல்களுக்கும் அரசாங்கம் மான்யம் கொடுத்து உதவுகிறது. தனிப்பட்டவர்கள் நடத்தும் ஹாஸ்டல்களுக்கு மான்யம் வழங்கப்படுகிறது. ஹரிஜன சேவா சங்கங்கள் நடத்தும் ஹாஸ்டல்கள் நன்றாக நடந்து வருகின்றன. நல்ல ஹாஸ்டல்களை அரசாங்கம் எடுத்து நடத்தவேண்டுமென்பது நோக்கம் அல்ல. எங்கு ஹாஸ்டல்கள் மோசமாக நடத்தப்படுகிறதோ, அவைகளைத் தான் அரசாங்கம் எடுத்து நடத்தவேண்டும் என்பது நோக்கம். சில பேர்கள் ஹாஸ்டல்களை நடத்துவதாகச் சொல்லி அதை சரியாக நடத்தாமல் அதிகப்படியான லாபத்தையே குறிக்கோளாகக் கொண்டு நடத்துகிறார்கள், அம்மாதிரி ஆசைக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பது தான் அரசாங்கத்தினுடைய நோக்கம். அம்மாதிரி இடம் கொடுத்தால் அது சில சமயங்களில் அவர் களுக்கே இடையூறாக வந்து நேரிடும். சில தனிப்பட்டவர்கள் நடத்தும் ஹாஸ்டல்களும் நன்றாக நடந்துகொண்டு வருகிறது. எல்லா ஹாஸ்டல் களையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது அல்ல என்னைப் பொறுத்தவரையிலும். எல்லாவற்றையும் பரிசிலனை செய்து பார்த்து நன்றாக நடக்கக்கூடிய ஹாஸ்டல்களுக்கு அரசாங்கம் பக்கபலமாய் இருப் போம். அரசாங்கம் அதைப்பற்றி இறுதியாக முடிவுக்கு பின்னால் வரும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீமான் முத்து குமாரசுவாமி அவர்கள் டெப்யூடி சேவக்குகள் நன்றாக வேலை செய்யவில்லை, அவர்களிடம் ரிபோர்ட்டு கேட்கவேண்டும், கண்காணிக்க வேண்டும் என்றெல்லாம் சொன்னார்கள். பிளாக்கு களிலுள்ள பிளாக் டெவலப்மெண்டு அதிகாரிகளைத் தான் அவர்களுக்கு கண்காணிப்பாளர்களாக வைத்திருக்கிறோம் என்பதை அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவர்களிடம் தான் டெப்யூடி சேவக்குகள் நல்ல முறையில் வேலை செய்து ரிபோர்ட்டு கொடுக்க வேண்டும், டயரி எழுதி கொடுக்கவேண்டும் என்று வைத்திருக்கிறோம். கூடுமானவரையில் நன்றாகச் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்திருக்கிறோம்.

